# ருக்மாங்கத சரித்திரம்

(இசை நாடகம்)

பதிப்பாசிரியர்

**கோ. சேதுராமன்**




**தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்**
**சரசுவதி மகால் நூலகம்,**
**தஞ்சாவூர்.**

சரசுவதி மகால் நூலக வெளியீட்டு எண் :460

# ருக்மாங்கத சரித்திரம்

(இசை நாடகம்)

பதிப்பாசிரியர்

**கோ. சேதுராமன்**, எம்.ஏ.பி.எட்.,
அம்மாப்பேட்டை,
தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராசா சரபோசியின்

**சரசுவதி மகால் நூலகம்,**

தஞ்சாவூர் - 613 009

2003 A.D. விலை : ரூ.60-00

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Rukmankatha charitram |
| Editor | : | G. Sethuraman |
| Publisher | : | Director,<br>Sarasvati Mahal Library |
| Publication No. | : | 460 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Year | : | 2003 |
| Paper used | : | 17.6 Kg. T.N.P.L |
| Size of the Book | : | 21 x 14 cm |
| Printing Type used | : | 12 point |
| Number of pages | : | 226 |
| No. of Copies | : | 500 |
| Printer | : | DTP, Sarasvati Mahal Library |
| Binding | : | Card Board |
| Subject | : | Dance Drama |
| Classification | : | O31,2(NS) P3 |
| Price | : | Rs.60/- |

# வெளியீட்டாளர் முகவுரை

'ருக்மாங்கத சரித்திரம் - (இசை நாடகம்)' என்னும் இந்நூல் சரசுவதி மகால் நூலகத்தில் முதல் பதிப்பாக வெளிவருகிறது.

கி.பி. 16, 18 ஆம் நூற்றாண்டிலிருந்து பன்மொழி இசை நாட்டிய நாடகங்கள் தஞ்சையில் பல நிகழ்ந்துள்ளன. தஞ்சை அரண்மனையிலும் மற்றும் சுற்றுப்புற கிராமங்களிலும் நாடகங்களில் பங்கேற்று நடித்தவர்களில் புராணக்கதைகளை இதுபோன்ற நாடகங்களில் மூலம் நடித்துக்காட்டப்பெற்றன. 'ருக்மாங்கத சரித்திரம்' வைகுண்ட ஏகாதசி என்னும் விழாவில் இந்நாடகம் நிகழ்ந்ததாகத் தெரியவருகிறது.

ஸ்ரீமத் பாகவதத்தில் இடம்பெற்ற ருக்குமாங்கத சரித்திரம் ஆந்திர, தமிழக மாநிலங்களில் பெயர்பெற்று நிகழ்ந்த நாடகம்.

இந்நூல் வெளியீட்டுக்கு வழக்கம் போல் நிதியுதவி நல்கிய மைய அரசுக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன். இப்பணியை சிறப்பாக முடித்துத் தந்த பதிப்பாசிரியருக்கு எனது பாராட்டுக்கள்.

இந்நூல் நன்முறையில் வெளிவர ஆவன செய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் திரு. **சொ. இராமக்கிருஷ்ணன்** அவர்களுக்கும் நவீன கணினியின் மூலம் அச்சிட்டுத்தந்த திரு. **க. பத்மநாபன்** அவர்களுக்கும் ஏனையோருக்கும் என் மனமார்ந்த பாராட்டுக்கள்.

தஞ்சாவூர்,
நாள் : 22.09.2003

**சி. கோசலராமன், இ.ஆ.ப.,**
மாவட்ட ஆட்சித்தலைவர்
மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

## பதிப்பாசிரியர் முன்னுரை

உலகத்துயிர்களை யெல்லாம் ஆக்கிக் காத்து அழித்து இயக்கும் ஒருவனை அரன் என்றோரும் அரி என்றோரும் அவையன்றி வேறொன்றென்றோரும் உளர். இவர்களுள் திருமாலைத் தெய்வமாகக் கொண்ட வைணவ சமயத்தினர்களுக்கு ஏகாதசி விரதம் என்பது சிறப்புமிக்க வழிபாடு ஆகும். இந்த ஏகாதசி வரலாறு பற்றிப் பலநூல்களில் கூறப்பெற்றுள்ளது. நாடக உருக்களாக அச்சிடப் பெறாத பலவும் ஏடுகளாகவும், சுவடிகளாகவும் உள்ளன. மேடையில் நடிக்கத்தக்கனவாக சிலவும் படிக்கமட்டுமே ஏற்றனவாகப் பலவும் படைக்கப் பெற்றுள்ளன. இவைகளில் சில எங்கெல்லாம் உள்ளன வென்று சொல்லியுள்ளேன். சரசுவதி மகால் நூலகத்திலிருந்து இரண்டு சுவடிகளை மட்டும் எடுத்து இங்கு பதிப்பிக்கப் பெறுகின்றன. ருக்மாங்கத சரித்திர நாடகங்கள் நடத்தப் பெற்ற இடங்கள் பற்றிய செய்திகளையும் தற்போது நாடகமாக நடத்தப் பெறாமல் போய்விட்ட காரணங்கள் பற்றியும் கூறப்பெற்றுள்ளது. இந்நிலையில் பல ஆண்டுகளாக நடத்தப் பெறாமல் தடைபட்டுப் போன கௌசிக நாடகத்தை மீண்டும் மேடையேற்ற வேண்டி கலைமாமணி **அனிதாரத்தினம்** அவர்களும் எனது குருநாதர் திருவாளர் **சே. இராமானுஜம்** (தமிழ்ப்பல்கலைக்கழக நாடகத்துறை முன்னாள் தலைவர்) அவர்களும் எடுத்துவரும் முயற்சி வியப்பளிப்பதாக உள்ளது. இதுபோலப் பலவாறு தடைபட்டுப் போன பல அரிய நாடகங்களை முயற்சி செய்து மீண்டும் உயிர்ப்பித்தளித்தால் நாடக உலகம் நாளும் அவர்களைப் போற்றும் என்பதில் ஐயமில்லை.

ஆந்திர, கேரள மாநிலங்களில் கூட பலவித புராண நாடகங்களை நடத்திடும் கலைஞர்கள், மிகவும் அரிதாகவே இக்கதையைக் கையாளுகின்றனர். ஆனால் எழுதப் பெற்றவை நிறைய உள்ளன. கதையின் நடைமுறையில் என்னென்ன வேறுபாடுகள் உள்ளன என்பதையும் ஆங்காங்கே விளக்கியுள்ளேன்.

சிறுத்தொண்டர், அரவான்களப்பலி, மனுநீதி சோழன் கதை, பிரகலாத சரித்திரம், கௌசிக நாடகம், காமன் கதை போன்றவைகள் ஆண்டுதோறும் தவறாமல் சில இடங்களில் தெய்வச் சடங்கு போல் கருதி பக்தி சிரத்தையுடன் நடத்தி வருகிறார்கள். அரிச்சந்திரன் கதை, அர்ச்சுனன் கதை, நந்தன் கதை, இராமாயணம், மகாபாரதம் சார்ந்த வேறு பல கதைகளை யெல்லாம் தொழில் முறைக் கலைஞர்கள் நடத்தி வருகின்றார்கள். ஆனால் இந்த ருக்மாங்கதன் நாடகத்தைக் காண்பது என்பது மிகவும் அரிது. எனவே நாடகப் பிரியர்கள் இதுபோன்ற அச்சு உருவைக் கொண்டு கற்பனைக் கண்களால் கண்டு ரசித்துக் கொள்ள வேண்டியதே! அதற்கு ஏற்ற வகையில் இப்பதிப்பை உருவாக்கியுள்ளேன்.

இதனைப் பதிப்பிக்க உத்திரவிட்ட சரசுவதி மகால் நூலக இயக்குநர் மற்றும் மாவட்ட ஆட்சித் தலைவர் திருமிகு. **சி. கோசலராமன்**, இ.ஆ.ப., அவர்களுக்கும், நூலக நிருவாக அலுவலர் திரு. **சொ. இராமக்கிருஷ்ணன்** அவர்களுக்கும் நூலகர் மற்றும் வெளியீட்டுத் துறை பொறுப்பு திருமதி. **க. இராமதிலகம்** அவர்களுக்கும், தற்போதுள்ள நவீன கணினியின் மூலம் சிறப்பான முறையில் அச்சிட்டுத்தந்த திரு. **க.பத்மநாபன்** அவர்களுக்கும் ஏனையோருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் இந்நூலிற் காணும் குறைகளைச் சுட்டுவோரை வணங்குகிறேன்.

15.09.2003.
அம்மாப்பேட்டை,
தஞ்சாவூர்,

அன்புடன்,
**கோ. சேதுராமன்,**
பதிப்பாசிரியர்.

# AN APPEAL

Manuscripts on Palmleaf or Paper of the ancient works of the wise men of the past, are the great treasures, solely inherited by the Nation and it is the moral obligation of persons who possess them to preserve them safely for the future generations of mankind.

Probably you have some of these in your possession or you know friends or neighbours who possess them. You can make a great contribution to the cause of the preservation not only of our national Culture but also to the Culture of Humanity as a whole by arranging to present such manuscripts to the famous T.M.S.S.M.Library, Thanjavur.

The Manuscripts so presented will be accepted and acknowledged with pleasure and gratitude by the authorities of the Library, preserved with meticulous care and made available to successive generations of readers and scholars for study and research. The hitherto unpublished works found among them will be printed and published in due course, as facilities occur, with the expression of the Library's gratitude for your gift.

The great Scholar King of Tanjore, **Rajah Serfoji**, has attained immortal fame by dedicating enormous time and wealth to the expansion and firm establishment of this world famous **'Sarasvati Mahal'**. It is open to you to share the honour of Serfoji, in your own measure by contributing your manuscripts to the great institution built by him.

This great Honour is beckoning to you to accept it. Will you hasten to take it up? The Library waits for your answer.

**DISTRICT COLLECTOR AND DIRECTOR**
Sarasvati Mahal Library, Thanjavur.

# பொருளடக்கம்



...

# OUR PUBLICATIONS

## MEDICAL

| | | Rs. Ps. |
|---|---|---|
| 1. | Garbhini Balaroga Chikitsai | 45 - 00 |
| 2. | Jvara Roga Chikitsai | 50 - 00 |
| 3. | Nadi Vakadam | 150 - 00 |
| 4. | Padarthaguna Palporul Vilakkam | 150 - 00 |
| 5. | Pancha Kaviya Nigantu | 130 - 00 |
| 6. | Pitha Roga Chikitsai | 30 - 00 |
| 7. | Siddha Maruthuva Chudar | 200 - 00 |
| 8. | Soumiya Sagaram | 70 - 00 |
| 9. | Vata Roga Chikitsai | 60 - 00 |
| 10. | Vaidya Thirattu | 40 - 00 |

## JYOTHISAM

| | | |
|---|---|---|
| 11. | Jataka Sara Deepika | 125 - 00 |
| 12. | Sinendra Malai | 65 - 00 |
| 13. | Jatakachandrika | 40 - 00 |
| 14. | Purvaparacaryam | 150 - 00 |
| 15. | Varahar Ora Sastram | 150 - 00 |

## SANSKRIT

| | | |
|---|---|---|
| 16. | Bharatarnavam | 160 - 00 |
| 17. | Nyaya Kaustubham | 205 - 00 |
| 18. | Silpa Ratnam | 150 - 00 |

## MARATHI

| | | |
|---|---|---|
| 19. | Usha Parinaya Natakam | 35 - 00 |
| 20. | Rama Jannana Nirupanam | 20 - 00 |

## TAMIL

| | | |
|---|---|---|
| 21. | Malaiyaruvi | 125 - 00 |
| 22. | Prabodha Chandrodayam | 153 - 00 |
| 23. | Attruppadai Thokuti | 45 - 00 |
| 24. | Kunthamala | 40 - 00 |
| 25. | Padartha Saaram | 135 - 00 |

# 1. பக்தியும் பஜனையும்

பக்தி என்ற சொல்லுக்கு பொதுவாக காதல், அன்பு என்ற பொருள் கூறப்பெற்றாலும், உயர் நெறியில் வாழும் ஒரு தனிமனிதன் இறைவன் பால் கொள்ளும் ஒப்புவமையற்ற பற்றிற்கே 'பக்தி' என்ற சொல் பொருள் தருவதாக அமையும்.

பக்தன் ஒருவன் ஊன்உருகக் கசிந்து கண்ணீர் மல்க நின்றழைக்கும் போது அவனது உள் ஒளியைப் பெருக்கி உலப்பிலா ஆனந்த மயத் தேனினைச் சொரிபவன் இறைவன்.

வைகுண்டத்திலோ யோகிகளின் ஹிருதயத்திலோ நான் இருப்பதில்லை. என்னுடைய பக்தர்கள் என்னைப் புகழ்ந்து பாடும் இடத்தில், எல்லோரும் என்னைக் காணும்படி நான் நின்று கொண்டிருப்பேன் எனவும் எனது பக்தன் படுத்துக்கொண்டு என் புகழைப் பாடினால் அவன் அருகில் நான் உட்கார்ந்து கொண்டு கேட்பேன். அவனே நின்று கொண்டு பாடினால் நான் அவனெதிரில் ஆடிக் களித்துக் கேட்பேன். அதே பக்தன் என்னைப் புகழ்ந்து பாடியும் ஆடியும் கூத்திட்டு புகழ்வானாயின் நானும் அவனுடன் இரண்டறக் கலந்து ஆடிக்கொண்டிருப்பேன். என்பது இறை மொழி : இதனையே நாற்பெருங் குரவர்களில் ஒருவராகிய சம்பந்தரும்

"பண்ணியல்பாக பக்திமையாலே
பாடியும் ஆடியும் பயில வல்லோர்கள்
விண்ணவர் விமானம் கொடுவர ஏறி
வியனுலகாண்டு வீற்றிருப்பவரே"

என்பார். தேவதைகளைப் பூசனை செய்வதும், யாகங்கள்

செய்வதையும் பக்தியின் அடிப்படையில் சேர்க்க இயலாது. நமது அரும் பெரும் இதிகாசங்களாகிய இராமாயணமும், மகாபாரதமும் பக்தியின் சிறப்பை தெளிவாக நமக்கு விளக்குவனவாகும்.

பக்தியின் முக்கிய நோக்கமே இறைவனுடன் ஐக்கிய மாதல் - அதாவது ஒன்றரக் கலத்தலேயாகும். சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாத சேவனம், வந்தனம், சக்யம், தாஸ்யபக்தி, அர்ச்சனம், ஆத்ம நிவேதனம் என்னும் ஒன்பது பிரிவுகளை உடையது பக்தி'.

பகவத்கீதையின் ஏழாம் காண்டத்தில் நான்கு வித பக்தர்களைப் பற்றிக் குறிப்பிடப் பெறுகிறது.

பத்ம பராணம், அக்னிப்புராணம், பாகவதபுராணம் ஆகியவற்றில் பக்தியின் பல படிமங்கள் தெளிவாக விளக்கப்பெறுகின்றன.

இறைவன் தன்னுடைய பக்தனை நல்லவனா கெட்டவனா என்றோ, பிறப்பால் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்றோ செய்தொழிலால் இழிந்தவன் என்றோ வேறுபடுத்திப் பாராமல் அருள் செய்யக் கூடியவன்.

> "As the Sun goes everywhere even to a Chandalas's place so does the Lord whoever has **bhakti** in his heart is a **bhakta.** He is not bound in this by his works."
>
> (Padma Purana - Chap. VI)

கலியுகத்தில் பகவன் நாமாவைப் பாடித் துதிப்பதே சிறந்த பக்தி மார்க்கம் என பத்மபுராணமும் பாகவத புராணமும் தெளிவாகக் கூறுகின்றன.

........................................

1. பகவத்கீதை - தபோவனம் வெளியீடு

பக்தர்கள் இறைவனைத் தமது தலைவனாகவும், தோழனாகவும், சேவகனாகவும், பிள்ளையாகவும் கொண்டு துதிப்பர். இதனை மகாகவி சுப்பிரமணிய பாரதியின் கவிதைகளும், நடன கோபாலநாயகி என்பாரின் பாடல்களும் தெளிவாகக் காட்டும்.

தமது பக்தனின் சிறப்பினை உலகினர் அறியச் செய்யும் பொருட்டு இறைவனே நேரில் தோன்றி அப்பக்தனைச் சோதித்த கதைகள் நிறைய உண்டு.

பெற்றபிள்ளையையே அரிந்தமுதாக்கி அளித்த கதையும், பக்தன் அழைத்த போது அவன் குறிப்பிட்ட இடத்தில் நிபந்தனைகளுக்கெல்லாம் உட்பட்ட வடிவத்தில் தோன்றி அவன் இடர் களைந்த கதைகளும் உண்டு.

எனவே இறைவன் பால் கொள்ளும் தூய அன்பே பக்தி என்பதோடு, அவ்விறைவனின் பிறப்பு, வளர்ப்பு, அவனது அற்புதமான செயல்கள் ஆகியவற்றைத் தொகுத்து சொற்களால் கூறிப் புகழின் **அருச்சனை** எனவும், பாக்களாகப் புகழ்ந்து பாடின் **பாமாலை** எனவும் இன்னிசைப் பாக்களைப் புனைந்து பண்ணோடு கூட்டிப்பாடின் **பஜனை** எனவும் கூறுவர்.

பத்தாம் நூற்றாண்டிற்கும் முன்னரே கூட நம் தமிழ் நாட்டில் ஓதுவார்களின் குழு சிவத்தலங்களில் இருந்தன என்பதும், அவர்கள் பல இசைக் கருவிகளின் துணையோடு பண்ணிசைத்துப் பாடினர் என்பதும் புதிய செய்திகள் அல்ல.

இராமாயணத்திற்குப் பின், மகாபாரதம் தோன்றிய பின்னர் கிருஷ்ணபக்தி மக்களிடையே புகழ்பெற்றது.

இந்த கிருஷ்ணபக்தியின் அடிப்படையில் **கீதகோவிந்தம்** இயற்றப் பெற்றது. பின்னர் ஜெயதேவர் காலத்தில் **அஷ்டபதிகள்** இயற்றப் பெற்றன. புரந்தரதாஸர் *(1484 - 1564)* நாராயண தீர்த்தர்

-பத்ராசல ராமதாஸர் (17ஆம் நூற்றாண்டு), மகான் போதனா, சதாசிவப்பிர்மேந்திரர் போன்ற மகான்கள் தோன்றி ஆயிரக் கணக்கான பாடல்களையும் நாமாவளிகளையும் இயற்றினர். திருப்பதிப் பகுதியைச் சேர்ந்த தாளப்பாக்கம் பாகவதர்கள் (அண்ணமாச்சாரியாரின் வழியினர்). பஜனை சம்பிரதாயத்தை முறைப்படுத்தினர். இதே சமயத்தில் மராட்டியப் பகுதியிலும் பஜனை சம்பிரதாயம், கதாகாலட்சேப முறைகள் ஆகியவை மக்களிடையே பரவத்தொடங்கியது.

**பஜனை :**

சம்பிரதாய பஜனை என்பது, முதலில் விநாயகர் ஸரஸ்வதி ஆகியோரைக் துதித்து பின்னர் பாகவதர்களைத் துதித்து பின்னர் பகவானை அழைக்கும் பஞ்சபதி அல்லது தோடய மங்களம் எனும் ஐந்து பாடல்களைப் பாடுவது. இதில் இரண்டாவதாகப் பாடப்பெறும் ''சரணு சரணு'' எனத் தொடங்கும் ஆரபி ராகத் திரிபுடை தாளப்பாடல், மூன்றாவதாக ஆதிதாளத்தில் அமைந்த மத்யமாவதி ராக 'முரஹர நதர முகுந்த மாதவா' எனத் தொடங்குவதுமான இரண்டு பாடல்களும் தாளப்பாக்கம் சின்னையா சுவாமிகளால் இயற்றப்பெற்றவை. நான்காவதாக அமையும் **'தேவேஷ கணாராதித'** எனும் ரூபக தாள சாவேரி ராகப்பாடல் **விஜய கோபால யதீந்த்ரர்** எனும் சுவாமிகளால் இயற்றப்பெற்ற தாகும்.

பஞ்சபதிகள் பாடி அஷ்டபதிகள் பாடி மகான்களின் கீர்த்தனைகளைப் பாடவேண்டும். அதாவது ஜெயதேவர், ராமதேவ், புரந்தரதாஸர், சதாசிவப் பிர்மேந்திராள், தீக்ஷதர், தியாகையர், கோபாலகிருஷ்ணபாரதி ஆகியோரின் கீர்த்தனங்களைப் பாடுவது. பின்னர் தீபத்தை ஆசனமிட்டு ஏற்றி வைத்து பகவானை அதில் ஆவாஹனம் செய்வது, இதில் கோபிகா கீதம், ராசக்கிரீடம், தரங்கம், மற்றும் கிருஷ்ணனின் லீலைகளை விளக்கும் படியான பாடல்கள், கும்மி, கோலாட்டம், காவடிச்சிந்து, கப்பல் பாட்டு, பாம்பாட்டிப்

பாட்டு ஆகியவை பாடுவது பின்னர், நலங்கு, பத்யம், ஆரத்தி, ஊசல், சப்தம், பத்ரம் பாடி சுவாமியை தூங்கப் பண்ணுதல், பின்னர் சுப்ரபாதம், தீபாராதனை, மங்களம் பாடுதல் என்பன சம்பிரதாய பஜனை ஆகும். ராதா கல்யாணம், சீதாகல்யாணம் போன்ற விசேஷ நிகழ்ச்சிகளும் இந்த பஜனை சம்பிரதாயத்தைச் சேர்ந்ததே ! ஆஞ்சனேய உற்சவத்துடன் இவைகளை நிறைவு செய்வர்.

வைணம் சார்ந்த பல நூல்களைப் பயின்று பஜனை சம்பிரதாயத்தில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு, இல்லற வாழ்க்கையையும் செம்மையுற வாழும் ஒருவனை பாகவதன் என்பதாக உயர்வுப் படுத்துகின்றனர். பிரகலாதன், நாரதர், பராசரர், புண்டரீகர், வியாசர், அம்பரீஷர், சுகர், சௌனகர், பீஷ்மர், ருக்மாங்கதர், வசிஷ்டர், விபீஷணன் ஆகியோரைத்யானஸ்லோகம் சிறப்புமிக்க பாகவதர்களாக பட்டியலிட்டுக் காட்டுகிறது.

இந்த பஜனை சம்பிரதாயம் கி.பி.1200 முதல் தமிழ் நாட்டில் பிரபலமாகி சென்ற நூற்றாண்டிலிருந்து இந்த இருபதாம் நூற்றாண்டிலும் கூட மிகவும் சிறப்பாக கடைப்பிடிக்கப் பெற்று வருகிறது. சொண்டி வெங்கட்ரமணய்யா, கனம் கிருஷ்ணய்யர், வெங்கடசுப்பய்யர், வேதநாயகம்பிள்ளை, ராமதாஸ பாகவதர், வைதீகபைடாலா, குருமூர்த்தி சாஸ்திரி, வீணை சுப்புக்குட்டி அய்யர், வீணை கஜஹஸ்தி அய்யர், தலைஞாயர் கிருஷ்ணய்யர், தோடி சீதாராமய்யர், சங்கராபரணம் நரசய்யர், இரட்டைப் பல்லவி சிவராமய்யர், சவுக்கம் சீனு அய்யங்கார், வீணை பெருமாள் அய்யர், கவி வெங்கட சூரி (இவர் நௌகா சரித்திரத்தை சமஸ்கிருதத்தில் எழுதியர்) ஜோடி தம்பூரா சுருதி வைத்துக்கொண்டு மிருதங்கம் வாசித்துக் கொண்டே நாமாவளிகள் பாடுவதில் வல்லவரான நாராயணசுவாமியப்பா என்பாரின் பணியும், பட்டுக்கோட்டை பாலுபாகவதர், புதுக்கோட்டை கோபால கிருஷ்ணபாகவதர் (1892 - 1960) ஹரி கிரிதாஸ் சுவாமிகள் ஆகியோர்களின் சம்பிரதாய பஜனை கோஷ்டிகளும் குறிப்பிடத்தக்கவையாகும்.

பாகவதமேளா :

சம்பிரதாய பஜனைகளில் சில சமயங்களில், பகவான் கிருஷ்ணனின் பிள்ளைப் பருவ நிகழ்ச்சிகளையோ, வேறு புராணக் கதைகளையோ, மகான்களின் சரித்திரத்தையோ, ஒப்பனைகள் ஏதுமின்றி பஜனை நடக்கும் இடத்திலேயே பாகவதர்கள் சிலர் கூடி தங்களுக்குள் சிலரை சில பாத்திரர்களாக பாவித்து அபிநயங்களுடன் ஆடிக்காட்டுவர். இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளை இன்றும் ஸ்ரீமான் ஸ்ரீவாஞ்சியம் திருவாளர் இராமச்சந்திர பாகவதர் அவர்களும் வாமன பாகவதர் அவர்களும் வேறு பல பெரியோர்களும் செய்துவருகின்றனர். இதுதான் காலப் போக்கில் பாகவதமேளம் எனும் தற்போது சிறப்பித்து கூறப்பெறும் நாடகங்கள் ஆகியது.

பரத நாட்டியக் கலையும், இசைக் கலையும் இணைந்து வளர்க்கப்பெறும் ஒரு பெரும் தளமாக பாகவதமேளா நாடகங்கள் தமிழ் நாட்டில் குறிப்பாக மெலட்டூர், சாலியமங்கலம், தேப்பெருமாநல்லூர் ஆகிய இடங்களில் இன்றளவும் பக்தி சிரத்தையுடன் நடத்தப்பெற்று வருகின்றன.

மெலட்டூரில் நடத்தப்பெற்று வரும் பாகவத மேளா நாடகங்களை இயற்றியவர் வெங்கடராம சாஸ்திரி என்பாராவார். இவர் மொத்தம் பன்னிரண்டு நாடகங்களை இற்றியுள்ளார். இவர் திருவையாறு தியாகராய சுவாமிகளின் காலத்திற்கும் முற்பட்டவராவார். சாலியமங்கலத்தில் நடத்தப்பெற்று வரும் பாகவத மேளா நாடகங்களை இயற்றியவர் பஞ்சநத பாகவதர் என்பார் ஆவார். இவரும் சுமார் ஐந்து நாடகங்களை இயற்றியுள்ளார். இவரது நாடகப் பாடல்களுடன் **'என்னடுக்கினி ஹானிலேதையா'** என்ற பாடலையும் இணைத்துப் பாடப் பெறுகின்றன. தேப்பெருமாநல்லூரில் நடத்தப் பெறும் பிரகலாத சரித்திர நாடகம் இவ்விரண்டு ஊர்களிலும் நடத்தப்பெறும்

நாடகங்களினின்றும் வேறுபட்டதாகும். இந்நாடகம் தமிழ், தெலுங்கு, வடமொழிஆகிய மூன்றும் கலந்ததாக அமைந்துள்ளதோடு மன்னன் சிவாஜியை வாழ்த்துவதாக ஒரு வரியும் இந்நாடகப் பாடலில் வருவது குறிப்பிடத்தக்கதாகும். ஊத்துக்காடு, சூலமங்கலம் ஆகிய இடங்களில் பாகவத மேளா நாடகங்கள் நடத்தப் பெற்று வந்ததாக செய்திகள் கிடைத்தாலும் தற்போது இவ்வூர்களில் நாடகம் ஏதும் நடத்துவதில்லை. மேலும் அம்மாப்பேட்டையை அடுத்த தீபாம்பாள்புரம் எனும் கிராமத்தில் பாகவதமேளா நாடகம் நடத்தும் பிராமணர்கள் இருந்தனர் என்பதற்கான ஆதாரச் செய்திகளும் கிடைத்துள்ளன. ஆகவே தஞ்சையை சுற்றியுள்ளப் பகுதிகளில் தெலுங்கு மொழி நாடகங்கள் சென்ற நூற்றாண்டில் சிறப்பாக நடத்தப்பெற்று வந்துள்ளன என்பது தெளிவாகின்றது. இதனை ஒட்டி தஞ்சாவூர் நகரத்தின் கீழ்ப்பகுதியாகிய மானம்புச்சாவடி எனும் சௌராஷ்ட்டிர மக்கள் வசிக்கும் பகுதியில் ஏகாதசி விரதத்தின் பெருமையை விளக்கும் பாகவாதமேளா நாடகமாகிய ருக்மாங்கத சரிதம் எனும் தமிழ் நாடகம் சில ஆண்டுகளுக்குமுன் சிறப்பான முறையில் நடத்தப்பெற்று வருகிறது. சரஸ்வதி மகால் நூலகத்தில் உள்ள மோடி ஆவணங்களின் மூலம் பாகவதமேளா நாடகத்திற்கும் அதனை நடத்துவோர்க்கும் மராட்டிய மன்னர்களின் பேராதரவு இருந்ததை அறியலாம். மேலும் மன்னார்குடிக்கருகில் பாகவதமேளம் என்ற ஒரு கிராமநிலப் பகுதி கூட உள்ளது.

## ஹரி கதா காலட்சேபம்

### ருக்மாங்கத சரிதம் :

ஹரிகதை என்பது பஜனை சம்பிரதாயத்தின் ஒரு பகுதியேயாகும். தஞ்சையில் மராட்டிய மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் இது தமிழ் நாடெங்கும் பரவியது.

இவ்வித ஹரிகதா காலட்சேபம் செய்பவர்கள் தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம், மராட்டி ஆகிய பல மொழிகளிலும் ஓரளவேனும் பயிற்சி உடையவராகவும், இசையறிவு நன்கு உடையவராகவும் இருத்தல் வேண்டும். கதையில் ஏற்படும் சந்தர்ப்பங்களுக்குத் தக்கவாறு பல இலக்கியங்களிலிருந்தும் புராணங்களிலிருந்தும் மேற்கோள்களையும் துணைக் கதைகளையும் சுவைபடக் கூறும் திறமை மிக்கவராக இருக்க வேண்டும்.

இக் கதாகாலட்சேபத்தில் பெரும்பாலும் நாரதபுராணத்தில் கூறப்பெற்றிருக்கும் ருக்மாங்கதன் சரித்திரத்தையே அடிப்டையாகக்கொண்டு ஏகாதசி மகாமித்யம் என்ற தலைப்பில் கதையைக் கூறுவர்.

முதலில் பஞ்சபதிகளைப்பாடி, நாம ஸித்தாந்த நிரூபணம் பாடி, பொருள்கூறி, ஸாகி, ஆர்யா, ஓவி, திண்டி, கட்கா, ஸீஸபத்யம், அபங்கம், உபசம்ஹாரம் என்பது போன்ற பல பிரிவுகளில் அநேகராகங்களிலும் பாடல்களைப்பாடி பொருள்கூறி இடையிடையே, தில்லானா, த்ருபத், காவடி சிந்து, பார்ஸிமெட்டு ஆகியவை போன்ற ஜனரஞ்சகமான இசையின் மூலம் மக்களின் மனம் ஈர்க்கப்படும் வகையில் கதையைக் கூறுவர். சமயங்களில் புராணங்களில் கூட கூறப்பெறாத விஷயங்களை பாகவதரின் திறமை காரணமாக அரிய விஷயங்கள் கூறப்பெறுவதும் உண்டு.

இனி நாரத புராணத்தில் ருக்மாங்கதன் கதை எமலோகத்திற்கு நாரதர் வருவதாகத் தொடங்குகிறது என்றாலும் கதாகாலட்சேபம் செய்யும் போது விதிசாபுரி என்ற விளம்பமான நாட்டிற்கு அரசனாக ருக்மாங்கதன் என்ற ஒரு அரசன் இருந்தான் என்று ஆரம்பித்து அவனுக்கு வெகுகாலம் பிள்ளையில்லாமல் பெருந்தவம் செய்து தர்மாங்கதன் என்ற ஒரு மகனைப் பெற்றான் எனபதாகக் கூறி கதையை

சமூகயியலுக் கேற்பவும் மக்களின் உணர்ச்சிகளை தூண்டக் கூடிய வகையிலும் சுவைபடக் கூறுவர். பின்னர் கடைசியில் இந்த கதையைக் கேட்டவர்க்கும் சொன்னவர்க்கும் இன்னபலன் என்பதாகக் கூறி மங்களம் பாடுவர். ஆக இந்த ருக்மாங்கதன் கதை கதாகாலட்சேபத்திற்கு ஏற்றதாகவும் மக்கள் மனத்தில் பக்தியை ஊட்ட வல்லதாகவும் உள்ளது.

## 2. ஏகாதசி மஹாத்மியம்

**ஏகாதசி விரதம் தோன்றிய கதை :**

பதினெட்டு புராணங்களில் சிறப்புடையது பத்மபுராணம். இதில் உத்திர காண்டத்தில் இந்த ஏகாதசி விரதம் மற்றும் அதனைக் கடைப்பிடிக்கும் நெறிமுறைகள் பற்றியும் மார்கழி மாதத்தின் சுக்கில பட்ச (வளர்பிறை) ஏகாதசியை முதலாகக் கொண்டு மாதம் இரண்டு ஏகாதசிகள் வீதம் பன்னிரண்டு மாதங்களுக்கும் ஏற்படக்கூடிய இருபத்து நான்கு ஏகாதசிகள் கூடுதலாக வரக்கூடிய ஒரு ஏகாதசி ஆகக்கூடி இருபத்தைந்து ஏகாதசிகளின் பெயர்களும் அவற்றை எவர் அனுசரித்து நற்கதி அடைந்தார் என்பதான கதைகளும் உள்ளன. இதில் இணைக்கப்பட்டுள்ள பட்டியலில் மாதமும் ஏகாதசிகளின் பெயர்கள் மட்டுமே ஈண்டு கொடுக்கப் பெறுகிறது. ஏகாதசி விரதம் பற்றிய பெருமைகளைக் கூறும்படி நாரதர் பரமசிவனை வேண்ட அவர் கண்ணன் தர்மருக்கு உரைத்த விவரத்தையே தாம் கூறப் போவதாகக் கூறி நாரதருக்கு உபதேசிக்கும் முறையில் பத்மபராணம் செய்திகள் தருகிறது.

**கதை :** க்ருத யுகத்தில் முரன் என்று ஒரு அரக்கன் இருந்தான். தேவர்களையும் அந்தணர்களையும் மிகக் கொடுமைப் படுத்தி வந்தான். வேதனையுற்ற தேவர்களும் அந்தணர்களும் பரமசிவனை வேண்ட அவரோ விஷ்ணுவை நாடச் சொன்னார். முரனுடன் முதலில் தேவ அசுரர் படைகள் போரிட்டன. இதில்

அசுர சேனைகள் அழிந்தன. என்றாலும் முரன் தனித்து முராரியாகிய விஷ்ணுவுடன் ஆயிரம் ஆண்டுகாலம் போர் புரிந்தனர். முரனின் வீரத்தைக் கண்டு வியந்த முராரி அவனைக் கண்டு பயந்தவர் போல் ஓடி பத்தரி ஆஸ்ரமத்தை அடுத்து 'ஸிம்ஹாவிதி' எனும் ஒரு பெரிய குகையில் பள்ளி கொண்டார். இந்த இடத்தைக் கண்டுபிடித்துவிட்ட முரன் உறங்கும் ஹரியைக் கொல்லும் பொருட்டு தன்வாளை ஓங்கினான். அப்போது பரந்தாமனின் உடலிலிருந்து ஒரு கன்னிப் பெண்ணுரு தோன்றியது. இப்பெண்ணுடன் கூட முரன் போர் புரிய முனைந்தான். ஆனால் பயங்கரமான ஆயுதங்கள் ஏந்திய அக்கன்னிப் பெண் தோற்றுவித்த 'ஹூங்கார'சப்தத்தினாலேயே முரன் சாம்பலாகிப் போனான். அப்போது பரந்தாமனும் தனது தூக்கத்தை விட்டு எழுந்து, தன் உடலிலிருந்து தோன்றிய கன்னியையும் அவள் செய்த செயலையும் கண்டு பாராட்டி அவளுக்கு **'ஏகாதசி'** என்பதாக பெயரிட்டான். இத்திருவுருவையே **'விஷ்ணு துர்க்கை'** என வழிபடுகிறோம். இவ்வாறு இந்த 'ஏகாதசி' என்பாளின் பிறந்த நாளாகிய மார்கழி மாதம் கிருஷ்ண பட்சத்திற்கு **'உற்பத்தி ஏகாதசி'** எனப் பெயர் உண்டாயிற்று. இந்த ஏகாதசியின் போது உரிய முறையில் விரத மிருப்போருக்கு புகழ், பொருள், ஆரோக்கியம் ஆகியவற்றையும் இம்மையிலும் மறுமையிலும் சுகம் கிடைக்கும் என்பதாகப் பரந்தாமன் அருள் செய்தார். மார்கழிமாத சுக்கிலபக்ஷ (வளர்பிறை) ஏகாதசிக்கு 'மோட்ச ஏகாதசி' என்றும் **'வைகுண்ட ஏகாதசி'** என்றும் பெயர். இதற்கு நேர் ஆறாம் மாதத்தில் ஏற்படும் ஏகாதசி **'ஸயன ஏகாதசி'** எனவும் சிறப்புப் பெயர் பெறுகிறது. மேலும் தைமாத சுக்கில பட்ச ஏகாதசிக்கு **'பீஷ்ம ஏகாதசி'** என்ற சிறப்புப் பெயரும் உள்ளது. இவை தவிர அவதாரங்களின் பெயராலும் ஏகாதசிக்கு சிறப்புப் பெயர் அமைந்துள்ளன..

## 3. நாரத புராணத்தில் ருக்மாங்கதன் கதை :-

புராணங்களில் உயர்வானது நாரத புராணமென்பர் வேதங்களும் உபநிஷத்துக்களும் தோன்றிய பிறகே புராணங்கள் தோன்றியது என்பர். பத்மபுராணம், கருடபுராணம், வாமனபுராணம், மச்சபுராணம், விஷ்ணுபுராணம் என்பன முக்கியமான புராணங்களாகும். அவை தவிர அநேக உபபுராணங்களும் உண்டு. இந்த புராணங்களில் நீதிகளைச் சொல்லக்கூடிய ஆயிரக்கணக்கிலான கதைகள் உள்ளன.

நாரதர் யமலோகத்திற்கு வந்து, யமலோகம் அதற்கான நரகவதை மற்றும் பலவிதமான கொடுமைகள் நிறைந்த தன்மைகளை இழந்து தீமைசெய்தவர் எவருமே இல்லாது போய் யமபட்டணம் பாழாய் இருப்பது கண்டும், சித்திரபுத்திரனுக்கு கணக்கு எழுதும் பணியிலிருந்து ஓய்வு கொடுக்கப்பட்டிருப்பது கண்டும் அதன் காரணம் யாதென்று எமனிடம் கேட்பதிலிருந்து தொடங்குகிறது. எஜமானிடம் சம்பளம் வாங்கிக் கொண்டு அதற்கான வேலை ஏதும் செய்யாமல் அந்த சம்பளப் பணத்தைக் கொண்டு சாப்பிடுவது கீழ்த்தரமானச் செயல் என்பதாக எமன் நாரதரிடம் கூறுகிறான்.

பூலோகத்தில் ருக்மாங்கத மன்னன் மக்களுக்கு ஏகாதசி விரதமிருக்கக் கற்பித்து அவ்வாறே மக்களும் விரதமிருந்த பலனால் நேரே வைகுண்டம் சென்று விடுகின்றனர். எனவே இதற்கு இனி என்ன செய்யலாம் என நாரதரைக் கேட்க, நாரதர் எமனை பிரம்மாவிடம் சென்று முறையிடச் சொல்கிறார். பிர்மாவிடம் முறையிட்ட எமனின் குறையை நீக்கவேண்டி, ருக்மாங்கதனின் ஏகாதசி விரதத்திற்கு கேடு உண்டாக்க வேண்டி பிர்மா மோகினியைத் தோற்றுவித்து மந்திராஜல மலைக்கு அனுப்ப, வேட்டையின் காரணமாக அங்கு வந்த ருக்மாங்கதன் அம்மோகினியைக் கண்டு அவள்

கோரியதுபோல என்றும் அவள் சொல்லைத் தட்டாது கேட்பதாக உறுதியளித்து காந்தர்வ விவாஹம் செய்துகொண்டு அரண்மனைக்கு வரும் வழியில் கல் ஓந்தியாய்க் கிடந்த பிராம்மணப் பெண்ணுக்கு சாபவிமோசனம் அளித்து மகன் தர்மாங்கதனுக்கு பட்டம் சூட்டி மோகினியுடன் சுகமாயிருக்க தர்மாங்கதன் திக்விஜயம் செய்து வந்த பின்னர் அவனுக்கு நாக கன்னிகைகளையும், வருண கன்னியையும் திருமணம் செய்து வைக்கின்றான். பின்னர் ஒருநாள் மோகினி தான் வந்த காரியம் எண்ணி ஏகாதசி நாள் ஒன்றில் தர்மாங்கதனை சாப்பிடச் சொல்லி வற்புறுத்த அவன் மறுத்துப் பேச, தான் பெற்ற உறுதிமொழியைக்கூறி உறுதி தவற வேண்டுமாயின் தர்மாங்கதன் தலையை வெட்டித் தருமாறு கேட்க, சந்தியாவளி மோகினியிடம், பிரகலாதனில் மகனாகிய **விரோசனின்** கதையைக் கூறி தாங்களும் அவ்விரோசனைப் போல கணவனும் மனைவியும் சம்மதப்பட்டு மகனின் தலையை அறுத்துத் தருவதாகக் கூறி தர்மாங்கதன் தலையை வெட்டத்துணிய மகாவிஷ்ணு தோன்றி அவர்களைக் குடும்பத்துடன் வைகுண்டம் ஏற்றிச் செல்வதாகவும் பின்னர் மோகினிக்கு அரண்மனைப் புரோகிதரின் சாபம் கிட்டியதன் காரணமாக சாம்பலாகிப் போய் பிர்மாவை அடைய பிர்மாகொடுத்த வரத்தின் காரணமாக பூலோக மக்களின் கண்மேல் இமையின் மேல் வாசம் செய்து ஏகாதசி தினத்தில் நித்திரை செய்வோரின் பலனை ஏற்பதாக கதை முடிகிறது.

.............................................................................................

அடிக்குறிப்பு: விரோசன் என்பவன் பிரகாலாதனின் மகன் - இவனைக் கண்டு அச்சமுற்ற தேவர்கள் விஷ்ணுவை வேண்ட, வேதியர் உருக்கொண்ட விஷ்ணு விரோசனின் மனைவியாகிய விசாலாட்சியிடம் சென்று பிச்சைகேட்க, அவள் பிச்சை போடவரும் போது தன் ஆசையைப் பூர்த்தி செய்பவர் வீட்டில் தான் பிச்சை ஏற்க முடியுமென வேதியராய் வந்த மகாவிஷ்ணு உரைத்தார். பின்னர் விரோசனும் அவனது மனைவியாகிய விசாலாட்சியும் வேதியர் வேண்டியது போல தங்களது ஆயுளை இருவரும் மனம் ஒத்து தானமாக அர்ப்பணித்தனர். இவ்வாறு இரண்யனின் பரம்பரை வம்ஸம் பூர்த்தியாகியது.

இங்கு நாரத புராணத்தில் உத்தர பாகத்தில் திதி சம்பந்தமான விஷயங்களை கூறுமிடத்து ருக்மாங்கதன் கதை விரிவாகக் கூறப்பெறுகிறது. யமனை - சூர்ய நந்தனா, எனவும் பிரேத ராஜா எனவும் நாரதர் கூறுகிறார்.

பத்துமுறை அசுவமேத யாகம் பூர்த்தி செய்த பலனை ஓரே ஒருமுறை கிருஷ்ணனின் நாமத்தைச் சொல்வதன் மூலம் பெறலாம் என்பது போன்ற விஷயங்கள் தெளிவாக கூறப் பெறுகிறது.

## 4. ருக்மாங்கத நாடகம் - பிறநூலகங்களில்

சென்னை அரசினர் ஓலைச்சுவடிக் காப்பகத்தில் (Govern-ment Oriental Manuscripts Library, Chennai) T.R.144 என்ற எண்ணில் 81 ஏடுகளும் பக்கத்திற்கு ஆறு வரிகள் வீதம் நல்ல நிலையிலும் உள்ள ஒருகட்டு உள்ளது. இதற்கு காப்பீடு வால்யூம் இல்லை. முதல் இரண்டு ஓலைகளில் கோடுகளால் படங்கள் போடப்பெற்றுள்ளன.

பிலவங்க வருஷம் ஆவணிமாதம் இருபதாம் தேதி சோமவாரம் சூளப்பட்டணத்திலிருக்கும் அய்யன் பெருமாள் உடையார் குமாரன் முத்துக் குமாரனின் ருக்மாங்கத நாடகம் எனத் தலைப்புச் செய்தி தெளிவாகக் குறிப்பிடப் பெற்றுள்ளது. முதலில் விநாயகர் வணக்கப் பாடல் பின்னர் திருமகளைத் துதிக்கும் தரு ஆகியவை உள்ளன. **"வளமை சேர் புலியூர் தன்னில் வாழ்ந்திடும் அளகறாயன் தன் பொற்பதம் துதித்து"** எனத் தொடங்கி பாகவதம் எனும் கதையைத் தொடர்ந்து ஏகாதசி விரதத்தின் பெருமை கூறப்பெற்ற பின்னர் ருக்மாங்கதன் நாடகம் விருத்தம், தரு ஆகியவைகளுடன் உள்ளது. தருக்களுக்கு சிலவற்றில் இராகம் மட்டும் குறிப்பிடப் பெற்றுள்ளது. சிலவற்றில் தாளம் மட்டும் குறிப்பிடப் பெற்றுள்ளது. ஆர்வமுடையோர் தொடர்ந்து ஆய்வு செய்ய ஏற்றது.

சென்னை அரசின் சுவடிக் காப்பகத்தில் எண்: டி.383 என்ற சுவடி சுமார் 120 ஓலைகள் கொண்டதாக ஒரு கட்டு உள்ளது.

தமிழ் எழுத்துக்களால் எழுதப்பெற்ற தெலுங்கு மொழி ருக்மாங்கத நாடகம். ஆனால் சில இடங்களில் வசனமாக தமிழிலேயும் எழுதப்பெற்றுள்ளது. ''வினு முனிவரிய நா விண்ணப்பம்பு ஒசுடி சேத தனுயேரி'' எனத் தொடங்குகிறது. தரு, திபிதை, சுலோகம் ஆகியவை உள்ளன. இந்த ருக்மாங்கத நாடகத்தில் வாமதேவர் எனும் ரிஷி ஒருவர் வந்து விதிசாபுரியை ஆளும் மன்னராகிய ருக்மாங்கத மன்னரை வாழ்த்துவதாக வரும் காட்சிக்குப் பிறகு மன்னன் ருக்மாங்கதன், மோகினியின் அற்புத கானம் கேட்டு அம்மோகினியைத் திருமணம் செய்து கொள்கிறான். பின்னர் அம்மோகினியிடம் ''நீ என்னுடன் என்னுடைய அரண்மனைக்கு வருகிறாயா அல்லது நான் உன்னுடன் இந்த கானத்திலேயே இருந்து விடவா'' எனக் கேட்கிறான். அதற்கு மோகினி ''திருமணம் செய்துகொண்ட ஒரு பெண் தன்னுடைய கணவன் வீட்டிற்குச் சென்று வாழாமல், தான் பிறந்த வீட்டிலே இருப்பாளாகில் அவள், **''அந்ததமசுவனம்''** என்னும் நரகத்தில் போய்ச் சேருவாள் என்பதோடு பிற்பாடு சகல நரகங்களிலும் இருந்து பின்னும் ஒரு ஜென்மத்தில் **''உளாப்பன்றியாக''** பிறப்பாள். ஆகவே நாம் உம்முடன் உமது அரண்மனைக்கே வருகிறேன்'' என்கிறாள்.

ருக்மாங்கதனை ஏகாதசி விரதம் மேற்கொள்வதினின்றும் தடுக்கும் சமயத்தில் மோகினி ''ராசாக்களுக்கும், சுமை எடுக்கிறவர்களுக்கும், யுத்தம் பண்ணுகிறவர்களுக்கும் பதிவிரதைகளுக்கும், கர்ப்பமாய் இருக்கிற பெண்களுக்கும் உபவாசம் எனும் விரதம் இருப்பது ஆகாது என்பதாகக் கூறுகிறாள்.

சித்தார்த்தி வருஷம் மாசி மாதம் நாலாம் தேதி குருவாரம் சுவாதி நட்சத்திரம் எழுதினது முற்றும் இந்தப்படிக்கு சூரி

சங்குரு சுப்பய்யர் எழுதிக் கொடுத்த பொஸ்தகம். பிழையிருந்தாலும் பெரியோர்கள் பிழை திருத்திப் போட வேண்டியது. வாசக தோஷம் க்ஷமித்தருளவும் என உள்ளது.

தெலுங்கு மொழி வல்லோர் படித்து ஆய்வு செய்ய ஏற்றது. சுவடி ஏடுகள் படிக்கத்தக்கதாக நல்ல நிலையில் உள்ளன.

மேலும் இந்த சென்னை அரசினர் சுவடிக் காப்பக நூலகத்தில் R.1716, R.1971, R.8662 என்ற வரிசை எண்களில் ருக்மாங்கத நாடகங்கள் உள்ளன. இதில் R.8662 எண் உள்ள சுவடிக் கட்டு 32 சுவடி ஏடுகளைக் கொண்டது. '' பொன்னிற மாமென புவனம் படைத்துக் காத்து'' எனத் தொடங்குகிறது. ஏடு ஒன்றுக்கு ஐந்து ஆறு வரிகள் உள்ளன. பல இடங்களில் தொடர்பு அற்றதான செய்யுள் வடிவிலான வரிகள் உள்ளன. மகா விஷ்ணுவின் அவதாரப் பெருமையைக் கூறும் இச்சுவடி முழுமை பெற்றதாக இல்லை.

சென்னை அடையாறு தியாசபிகல் சொசைடி நூலகத்தில் H.784-408 - Kad - ta - 1 - 7 என்ற குறியிட்டெண்கள் உள்ள ஒரு அச்சுப் புத்தகம் ''உருக்மாங்கத சரித்தரக் கீர்த்தனைகள்'' என்ற தலைப்பில் உள்ளது. இது கும்பகோணம் கலியாணராமய்யர் குமாரத்தி விசாலாட்சி அம்மாளால் இயற்றியதை கும்பகோணம், புஸ்தக வியாபாரம், காயன விகட கேசரி எனும் கே.வி. கதிர்வேல் பிள்ளையால் பரிசோதித்து கும்பகோணம் புஸ்தக வியாபாரம் ஆர். கோவிந்தசாமி நாயுடு அவர்களின் விருப்பத்தின்படி மேற்படி காலஞ்சென்ற . பெ. ஆறுமுகமுதலியார் மருமகப்பிள்ளை ஏ. தீனதயாள முதலியார் அவர்களால், சென்னை ஆதிமூலம் பிரஸ்ஸில் பதிப்பிக்கப்பட்டது -1928. விலை அணா.0-8-0 என்பதாக விளக்கமான விபரங்களுடன் உள்ளது. இதில் தனித் தனிப் பாடல்களாக இருபத்தைந்து உள்ளன. ராகமும் தாளமும் குறிப்பிடப் பெற்றுள்ளது. அருணாசலக் கவிராயரின் இராம நாடகக் கீர்த்தனைகளைப் போன்ற அமைப்பில் உள்ளன.

II. P.H.291 - 34 R.G.P. Em.ta என்ற குறியீட்டில் ஒரு புத்தகம் உள்ளது.

ஸ்ரீருத்திர பகவான் பார்வதி தேவியாருக்கு அருளிச்செய்த ஏகாதசி மகத்துவம் Published by R.G.பதி கம்பனி. (ஆண்டு குறிப்பிடப் பெறவில்லை)

இதில் ஏகாதசி விரத மகிமை ருக்மாங்கதன் கதை, அம்பரீஷன் கதை ஆகியவை வசனமாக உள்ளன.

III. R.H.297 - Mum - EV - ta என்ற எண் குறியீடுள்ள அச்சுப் புத்தகம். ''**ஏகாதசி விரத வைபவ சங்கிரகம்**'' என்ற தலைப்பில் உள்ளது.

மதராஸ் பியராபீஸ் டிராபிக் ஓவர்சீயர் மோசூர் முனிசாமி முதலியாரால் இயற்றப்பட்டு ம.ஐ. பாலகிருஷ்ண முதலியாரால், சென்னை கிச்சனர் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது. 1908 - கீலக வருஷம் மார்கழி மாதம் என்ற விவரங்களுடன் உள்ளது.

இதில் ஏகாதசி விரதம் அனுஷ்டிக்க விரும்புவோர் மார்கழி மாதம் கிருஷ்ணபட்ச ஏகாதசியை முதலாகக் கொண்டு ஆரம்பிக்க வேண்டுமெனவும் அதுவே ஆரம்ப ஏகாதசி என்றும் குறிப்பிடப் பெறுகிறது.

முற்காலத்தில் நாடி, சங்கன் என்பவன் மகானகிய ''மரு'' என்னும் அசுரனுடன் போர் செய்து, இயலாமல் தோற்று ஓடிய இந்திரன், திருமால் சமூகத்தில் சென்று முறையிட, அவரது திருமேனியிலிருந்து ஒரு சக்தி வெளிப்பட்டு அவ்வசுரனைக் கொன்று, இந்திராதி இமயவர் துன்பத்தை நீக்கியதாகவும், இந்த சக்திக்கு ஏகாதசி என்ற பெயர் எனவும், அவ்வாறு கொன்ற நாள் மார்கழி மாத கிருஷ்ணபட்ச ஏகாதசி எனவும் விவரம் கொடுக்கப் பெற்றுள்ளது.

தைமாத சுக்கில பட்ச அதாவது வளர்பிறை ஏகாதசிக்கு ''புத்திரதை'' ஏகாதசி எனப் பெயர் எனவும் இந்த ஏகாதசி தினத்தில் சுத்த உபவாசம் இருக்கும் தம்பதியர்க்கு புத்திர பாக்கியம் உண்டாகும் எனவும் கூறப்பெற்றுள்ளது.

மலையாள மொழியில் ஒரு ஏகாதசி மகாமித்ய நூல் G.O.M.L நூலகத்தில் எண் M.162 என்ற வரிசையில் உள்ளது. இது பந்தளத்து கோளவர்ம தம்பிரான். எஸ்.ஆர்.புக் டிப்போ திருவனந்தபுரம் - கொல்லம் 1105 - இங்கிலீஷ் 1930 என்ற பதிப்பகக் குறிப்புடன் ஒரு புத்தகம் உள்ளது. இதில் ருக்மாங்கத சரிதம், ஆட்டக் கதை, சம்பு, கத்யம், பத்யம், ஆகிய பாடல் வகையாய் உள்ளது. இதன் ஒன்பதாம் பக்கத்தில் ஏகாதசி மகாத்மியம் எனும் கிளிப்பாட்டு உள்ளதாக செய்தி உள்ளது.

இதில் சந்தியாவல்லி மோகினிக்கு வசுதத்தோ உபாக்யானம் என்ற நீதி சாஸ்திரத்தைப் பற்றி கூறுவதாக உள்ளது.

வேசியுடன் உறவு கொள்பவனை விளக்குமாற்றால் அடித்தாலும் தர்மபத்தினிக்குத் தகும் என்பது போன்ற விவரங்களும் உள்ளன.

மலையாள மொழிவல்லோர் ஒப்புமைக்காக எடுத்து இந்நூலை ஆய்வு செய்யலாம்.

சென்னை, டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் நூலகத்தில் எண்.2291 இல் ஒரு சவடி ருக்மாங்கதப் படலம் என்பதாக உள்ளது.

இதன் நூலாசிரியர் பெயர் குறிப்பிடப்பெறவில்லை. இந்தக் கதை எந்த மூல நூலைக்கொண்டு இயற்றப்பெற்றது என்ற விவரமும் இல்லை. நல்ல பாதுகாப்பில் வைக்கப்பெற்றுள்ள சுவடி இது. ஆர்வமுடையோர் முயன்று ஆய்வு செய்துகொள்ள ஏற்றது.

ஸ்ரீநிவாஸ ராமானுஜ தாசர் அவர்களால் இயற்றப் பெற்றதும் 1890 இல் தொண்டை மண்டலம் அச்சு எந்திர சாலை, சென்னையில் அச்சிடப் பெற்றுள்ள ''ருக்மாங்கத மஹாராஜன் திவ்ய சரிதம்'' என்ற நூல் பற்றியும் பிறநூல்கள் வழிச்செய்திகள் கிடைக்கின்றது.

மெலட்டூர், சாலியமங்கலம், தேப்பெருமா நல்லூர் ஆகிய ஊர்களில் ருக்மாங்கத நாடகங்கள் காகித நோட்டுப் புத்தகங்களில் எழுதி வைக்கப் பெற்றுள்ளன. இதில் மெலட்டூரில் ருக்மாங்கத நாடகம் பல ஆண்டுகளாக நடத்தப் பெறாமல் இருந்துவிட்ட காரணத்தால் அந்நாடகத்தில் உள்ள பாடல்களைப்பாடும் முறைகூட மறந்துபோய்விட்ட நிலையில் உள்ளது. மேலும் இந்நாடகத்தில் விரக வேதனை மற்றும் காம உணர்ச்சியை தூண்டும் விதத்தில் காட்சிகள் அமைவதால் பெரும்பாலும் பாகவதர்கள் விருப்பம் கொள்வதில்லை என அறிய முடிகிறது.

தேப்பெருமா நல்லூரில் மேற்கண்ட ருக்மாங்கத நாடகத்தின் நோட்டு காணக்கிடைக்கவில்லை.

சாலியமங்கலத்தில் சென்ற 1952 இல் இந்த ருக்மாங்கத நாடகம் நடிகர்கள் இல்லாத காரணத்தாலும், பொருள் வசதி இல்லாத காரணத்தாலும் கைவிடப்பட்டுவிட்டது. ஆனால் நாடகப் பாடல்கள் கிரந்த லிபியிலும், தெலுங்கு லிபியிலும் எழுதப்பெற்றதாக உள்ள காகித நோட்டுப் புத்தகங்கள் உள்ளன.

மேலும், தஞ்சாவூர் தெற்கு வீதியில் தங்கம், வெள்ளி ஆபரணத் தொழில் செய்வோர்களாகிய தட்டார் எனும் பிரிவினர் சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் ஆண்டு தோறும் இந்த ருக்மாங்கத சரித்திர நாடகத்தை வைகுண்ட ஏகாதசி தினத்தன்று பகலில் சுவாமி புறப்பாடு, பூஜை எல்லாம்

முடித்து இரவில் நாடகம் நடத்தியுள்ளனர் என்ற செய்தியை தற்போது தஞ்சாவூர் அய்யன்கடைத் தெருவில் தஞ்சாவூர் கலைத்தட்டு தயாரிப்பில் சிறந்தவரும், அரசின் பரிசுகள் பல பெற்றவருமான திரு. நடராஜபத்தர் அவர்கள் மூலம் அறிய முடிந்தது. இதுபற்றி விசாரித்ததில், காலம் சென்ற புகழ்பெற்ற திரைப்பட நடிகர் திரு.எம்.கே.தியாகராஜபாகவதர் அவர்களின் சகலை கண்டாமணி பத்தர், துரைசாமி பத்தர் மற்றும் தங்கக் காப்பு சிங்காரம் ஆகியோர் கொண்ட குழுவில் திருவாளர் கணேசபத்தர் என்பவர் சிறந்த சங்கீத வித்வான் எனவும் இவரே ருக்மாங்கத நாடகத்தில் மோகினி வேடம் ஏற்பவர் எனவும் தர்மலிங்க பத்தர் என்பவர் சந்தியாவல்லி வேடம் ஏற்பார் எனவும் இவர்களது குழுவிற்கென சொந்தமான மனைக்கட்டு கூட ஒன்று இருந்ததாகவும், தொடர்ந்து நாடகம் நடத்த இளைஞர்கள் முன்வராத காரணத்தாலும், பழைய நடிகர்கள் காலமாகிவிட்டபடியாலும் ருக்மாங்கத நாடகம் நடத்தப் பெறாமல் போய்விட்டதாக தெற்குவீதி திரு. G. பாலுபத்தர் என்னும் பெரியவர் மூலம் அறிய முடிந்தது. எனவே, தஞ்சையில் மகர்நோம்புச் சாவடி பகுதியில் மட்டுமின்றி வேறு பகுதியிலும் இந்நாடகம் நடத்தப்பெற்று வந்தது என்ற செய்தி கிடைத்தாலும், இந்த தெற்குவீதி நாடகத்தின் பாடல்கள் கூட ஏதும் கிடைக்கவில்லை என்பதும் வருத்தம் தரும் செய்தியாகும்.

மணவாள தாஸர் என்பாரின் ருக்மாங்கத சரித்திரம் 1817இல் வெளியிடப் பெற்றுள்ளது.

ஸ்ரீமத் கந்தசாமி சுவாமிகளால் இயற்றப்பெற்ற பக்த மான்மியம் எனும் நூல் சென்னை - கோரி அச்சுக் கூடத்தில் அச்சிடப் பெற்றுள்ளது. ஆண்டு குறிப்பிடப் பெறவில்லை. மொத்த பக்கங்கள் 149. இதில் பதினான்காவது சருக்கம் உருக்குமாங்கத கதி எனும் பகுதி 92 பாடல்களால் அமைக்கப் பெற்றுள்ளது. (சரஸ்வதி மகால் நூலகத்தில் புத்தகம் உள்ளது).

பதினாறாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான **நாராயண தீர்த்தயோகி 'பாரிஜாத அபஹரணம்', 'ருக்மாங்கதா'** ஆகிய நாடகங்களை இயற்றியுள்ளார். இவரே **கிருஷ்ணலீலா தரங்கினியையும்** இயற்றியவராவார்.

சரஸ்வதிமகால் நூலகத்தில் சுவடி எண்.199 தெலுங்கில் (Cat. Page.123 Telugu) வெங்கடகிரி என்றும் கவிகிரி என்றும் குறிப்பிடப் பெறுபவரால் 'ருக்மாங்கத சரிதம்' எழுதப்பெற்றுள்ளது. இராமச்சந்திர கவிராயர் என்பவர் ருக்மாங்கத விலாசம் எனும் நாடகத்தை எழுதியுள்ளார். இவர் சுமார் பன்னிரண்டு நாடகங்கள் இயற்றியுள்ளார். சென்னை ஓரியண்டல் நூலகப் பதிப்பில் சிறிய அளவிலான ஒரு ருக்மாங்கத நாடகம் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

மறையவர்குல வீராச்சாமி உபாத்தியாயர் என்பவரால் ஒரு ருக்மாங்கத நாடகம் இயற்றப்பெற்றுள்ளது - கலைஞான பிரஸ், திருப்பதி - 1896. தர்மாங்கத விலாசம் எனவும் ஒரு நாடகம் மேற்கண்ட ஆசிரியராலேயே இயற்றப்பெற்றுள்ளது. (நூல் - படிக்க கிடைக்கவில்லை) தமிழக அரசின் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் மூலம் சென்னை அரசின் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திற்குக் கொடுக்கப்பெற்ற வரிசை எண்.134 எனும் ருக்மாங்கத சரிதம் எனும் சமஸ்கிருத சுவடி ஏடு 29 கொண்டது. இதில் இரண்டு ஏடுகள் உடைந்துள்ளன. இது தஞ்சை பதிவு அலுவலர் திரு. கு. தாமோதரன் மூலம் 5.2.1979 இல் நேரில் கொடுக்கப்பட்டுள்ளது. திரு. என். காத்தமுத்து என்பவரால் ஒரு ருக்மாங்கத நாடகம் வெளியிடப் பெற்றுள்ளது. தஞ்சாவூர், தமிழ்ப்பல்கலைக் கழக நூலக வரிசை எண்.10203. திரு. நாராணயசாமிப்பிள்ளை அவர்களால் 'ருக்மாங்கத விலாசம்' நாடகம் வெளியிடப்பெற்றுள்ளது. இந்து ராயல் பிரஸ், சென்னை 1895. மேலும் பல நூலகங்களில் பல அச்சுப் புத்தகங்கள் உள்ளதாக அறியமுடிகிறது.

## 5. ஏகாதசிப்புராணம் :

சரஸ்வதி மகால் நூல்கத்திலுள்ள எம்.379 என்ற எண் கொண்டதும் ஏகாதசிப்புராணம் என்ற தலைப்பு கொண்டதுமான சுவடி ருக்மாங்கதன் கதையை உடையதாகவும் சிற்சில் இடங்களில் சரியான மொழி அமைப்பு இன்றியும் எதுகை மோனை கருதி பொருள் சரியில்லாத முறையில் அந்தாதி வகையில் சேர்க்கத் தக்கதான செய்யுள் நடையில் உள்ளது. கூடியவரை அதனை இங்கு முழுமையாக கொடுத்துள்ளேன். இதில் ஏகாதசியின் உற்பத்தி வரலாறு பற்றி ஏதும் கூறப்படவில்லை. மேலும் ருக்மாங்கதனின் மகனாகிய தர்மாங்கதனை வெட்டிப் பலியிடக் கூறப்படும் இடம் தெளிவாக இல்லை. ஆனால் ருக்மாங்கதனின் விரதம் பற்றியும் அதனைக் குலைக்க ஊர்வசியை சிவனார் அனுப்பியதாகவும் கூறப் பெற்றுள்ளது. ருக்மாங்கதன் வைணவ பக்தனாக இருந்த போதும் கைலை அடைந்து சிவபதம் அடைந்தான் எனக் கூறப்பெறுகிறது. எனவே வைணவ அடியாராகிய ருக்மாங்தனின் இக்கதையை எழுதியவர் சிவ பக்தனாகவும் சைவத்தின் பால் பற்று கொண்டவராகவும் இருக்கக் கூடுமென்று தோன்றுகிறது. சுவடிப் படி முழுதும் கொடுக்கப்பெறுகிறது. (M.379 - D.540 - P.29 - G.395 . Year 1919.) ஏகாதசி புராணம் : Copied Vol.No.140

காதலாலே ஏகாதசிக் கதை தனைப் பூரணமாகத்
தீதிலா வடவன் செம்மை செந்தமிழோர்கள் தங்கள்
பாதமே தலைமேற்கொண்டு பரிவுடன் அன்பர்க்காக
ஆதரவுடனே தோணும் அய்ங்கரன் பதமே காப்பு :

...

உருக்குமாங்கதன் [1]பருதிதன் குலத்திற் தோன்றி
காரியம் செங்கோலோச்சிக் காசினி யாளும் நாளில்
ச(ாரும) ந்த வானக தேவர்க்கே யாகுமென்று
கூறிய வினைகள் போக தொழில் செயப் பண்ணி வித்தான்:

நெடிது காலம் பாரினில் நிலத்தை நன்றாய்
திண்ணமாய் வளைந்து கொண்டு திருத்தமாயாளும்
எண்ணிரெண்டேருடனே இயல்புடன் உழுது நன்றாய்
பண்ணி புழுதியாக்கி
பூ மாம வையப் பிதாபாத மலர் தும்பை
மகிழ் மல்லிகைதான் கொங்கும் செப்பமாம்
பச்சை பிச்சி செண்பகம் கொன்றை
எப்புனத்து மில்லா இயல் மலர் சோலை எல்லாம்
ஒப்பிலாது [2]உம்பர் போற்ற வைத்தனன் உரை
ஓது பூஞ்சோலை எல்லாம் ஓங்கியே வளர்ந்து
நன்றாய்
போது மா மலர் ஓரிரண்டு தோற்றத் துள்ளவர்
வந்தெடுத்துத் தீதிலா மலர்கள்
சாற்றிச் சிவபதம் அடைந்திட லாமென்று
அன்று நீள் பருதிக் காய் அனலது பொறாமல்

அந்தப் புரையிலா தலத்திலுள்ள பூமலர்
திருந்து போகலால்

இந்திரனார் பூசை முற்று மென்றறியா ரங்கே
சென்று தான் அரம்பை
மாதர் சிந்தை கலங்கி நின்றாள்

கலங்கிய கன்னிமாரும் காசினி தன்னிலந்த
அலங்கள் சேர் உருக்குமாங்கதன் அவருடைய பதியில்
துலங்கிய மலர் உண்டென்றறிந்து [3]சோபமும் நீங்கியந்த
தலங்களிலிழிவதாகத் தாம் வினையுற்று நின்றார்

1. பருதி - சூரியன் 2. உம்பர் - தேவர் 3. சோபம் - வருத்தம்

நின்றவர் நெறியே சென்று நிலத்திடை வனத் [1]திழிந்து
அன்று நாள் முதலாய் சேர் அணிமலருள்ளெலாம் சென்று
சென்றெடுத்தே போகத் தயங்கியே மன்றிலுள்ளே
குன்றெனும் ருக்மாங்கதன் தோற்று வித்தாரே!

கொற்றவன் றானுங் கேட்டுக் கோபமோடிருந்து பின்னம்
மற்றம் அங்கருகில் நின்ற காற்கும்
சுற்றுள்ள காவலர் தம்மையே தொடர்ந்து நோக்கும்
இற்றை நாள் சசொர(சோரர்) தம்மை வாவென்றார்

என்றாலும் காவலர் இணையடி தொழுது போற்றி
நின்று, நன்றடி (பணிந்து) அய்யா
நாளொறு முப்பதுக்குள் குன்றுடைச்
சோரர் தம்மை கொற்றவா தந்திடோ மாய்
அன்று முனிந்து எம்மை ஆக்கிணை
பண்ணு மென்றார்.

பண்ணுமா வேந்தன் கேட்டுப் பரிவட்டம் தூதா நீயும்,
நின்றது காவலாளீர் நடவு நீ யென்று சொல்ல,

என்றாலும் காவலாளர் இறைவனை வணங்கி
பொன்வண்ண மலர்கள் பூக்கும் வனமது காக்க லுற்றார்

காக்கின்ற காவலாளர் காவலி லகப் படாமல்
ஏற்கவே அரம்பையர் ஆரண மென்றும்

ஆர்க்குமாம் விந்தை யாலே அந்திர சாதியாக
மார்க்கமாய் வனத்தில் வந்து மலர் கொண்டு
போகவே காவலாளர் போய் வாரும்

சோரர் தம்மை எங்கும் காணா விசார (முற்று)
வேறிடமுங் காணா பொருந்தி யோர் தவசி தானும்

..............................

1. இழிந்து - இறங்கி

தாகமோடிருந்து மின்னும் தவசி தன்(னை அண்டி - அண்ட)
மட்டென விரதங்கள் கருத்துரைத்து அய்யா நீங்கள்
அண்ணொ...தியம்ப தானும்
தண்டியே தவசி தன்னைத் தான்
பிடித்திறுக்கிக் கட்டிக்
கொண்டவன் சோர வன வாசல் புக்கார்
புக்க பின் அந்த வெந்தளல் புரிசடையோனை நோக்கித்,
திக் கெனக் கில்லை கட்டையும்விட்டங்கம் பெற,
தக்கதோர் ஆசனத்தில் சார்புற இருத்தி யாங்கே.
சிக்கெனத் தவசி செய்த சேதியைச் சொல்லுமென்றார்
சொல்லு மென்ற ராசன் கூறத் தொடர்ந்து
காவலர்கள் தாமும்,
மல்லமர் தோளா அந்த வனத்தில் மா மலர்கள் எல்லாம்
அல்லும் நீள் பகலும் இந்த [1]ஆண்டியே கொண்டு போனான்,
கல்லும் மெய்யும் உருகப் பேசுங்
கள்ளனும் இவனே என்றார். என்றலும் வேந்தன் கேட்டு
ஈசனடியார் தம்மை யின்று
நீர் குற்றம் சொல்ல (உண்) மையும் அல்ல
கண்டீர், கண்ணிலோர் தவசி நீரும் கலங்கவே
வேண்டாம் பொய்யன்றி உள் மனதுக்கே
ஏயது உரையு மென்றார்
உரை செய் யென்றே ராசன் கூற ஒண்சடைத்
தவத்தோன் தானும் விரை செறி மா வேந்தேகேளாய்!
கரவுடன் மலர்கள் எல்லாம் களவுநான் செய்தே னென்றார்.
தரை செறிதேன் சொல் லென்றான் :
சொல்லுவ தென்ன கேளாய் சொல்லினி வேறுமுண்டோ,
மன்னா சோரனும் நான் தானல்லவேற
வல்லமை செய்து கொள்வாய் யென்று
மாதவனுஞ் சொல்ல நல்லது நாமதற்கு
உடன் பட்டோம் காண்பது உண்டது கேளாய்
மன்னா உம்பர் கோன் பூசைக் கென்றே அரம்பையர் தான்
அணுகி உன் வனத்தில் எய்தி

1. ஆண்டி - பரதேசி

அணுகி உன் வனத்தில் எய்தி
பண்டை மாமலர்களெல்லாம் பறித்தவர் போக மன்னா
கண்டு நான் காவலர்க் குறைத்தார் அண்ணல்
அண்ணல் தான் மொழியக் கேட்டு அரசனும்
மிக்க மகிழ்ந்தே, கணிணினால் நாம் அவரைக்
காண அருள வேணுமையா,
தண்ணமர் சடையா வென்று தாளினை வணங்கிக் கேட்க
மண்ணு மாதவனும் அகமகிழ்ந்து இவை
கூறலுற்றான் :
உற்ற தோர் [1]மார்க்கந் தன்னை உண்மையாய்
உரைக்கக் கேட்டு,
மற்றுமோர் ஊனக்கண்ணுக்கு எய்தார் -
பத்தியாய் மாதர்தம்மை பார்க்க நீ வேணுமென்றால்
உத்தி யொன்றுஎமக் குரை செய்வீர் என்றான்.
குனிந்தன் வேந்தன் அந்தக் குமட்டி விரையைத் தானும்
அணிந்ததோர் அங்கங்கே பதித்து நன்றாய்
துணிந்து நற்பயிரு மாகி தூவியே செடிகள் தோறும்
மணிந்தொரு (வளர்ந்)தது வனங்க ளெல்லாம்.
வனந்தனில் கொழுந்து விட்டு வளர்ந்ததோர் சேதி தன்னை
(..வன படேட்டுப் போத வெம்மை
கிழந்து தினம் திகழ) மன்னன் தன்னைத்
தவமுனி தானும் நோக்கி தினந்தோறுமதை நீ
சீருடன் காருமென்றார்:
காப்பதற் குரிய வேந்தன் கம்பளி யொன்றைப் போத்திச்
சொப்பக் கச்சை கட்டிச் சீருடன் வாளொன்றேந்தி
பார்ப்பதோர் காவலாளை அப்புறங் காக்கச் சொல்லி
ஏற்பதோர் பலந்தான் காத்தான் எழிலுடை வேந்தனாங்கே!
வேந்தனுமங்கே காக்க மீதிலத்[2] தரம்பை மாரும்
வேய்ந்த ஓர் வனத்திலே எய்தி அவர் மலர் கொய்யும் போது
சாய்ந்த தோர் கொழுந்து தட்டத் தையலும் மருட்டி
தேய்ந்ததோர் பிறையைப் போலே மெத்தத் தியங்கியே

...................................

1. மார்க்கம் - வழி 2. மீதிலம் - வானுலகு

மயங்கி நின்றார்:
மயங்கிய மாது மற்றும் ஒருவரை ஒருவர் நோக்கி
தயங்கியே ஏன் நின்றாய் நின்ற சேதி செப்பு மென்றவர்கள்
கேட்க பாங்கி....படி கொழுந்து தட்டி ஆங்கவர்
அமரர் எல்லைக்கு யான் எவ்வாறு போவதென்றாள்:
....வள..ன..கூற பொற்புடை மங்கை
உறத்தானம் மேகா வென்றவர்கள் சொல்லி
இந்திர பதம் புக்கார் வாகாகச் செங்கோலோச்சி
மன்னவன் வனத்தைச் சுற்றிக் [1]கூகா வென்றமலர்
குல மயில் தன்னைக் கண்டார்:

கண்டனன் பணிந்து போற்றிக் கரதலங் குவித்துநின்று,
அண்டர்கள் போற்றும் தாயே அவணியில்
வந்த தென்ன,
எண்டிசை மன்னர் கேட்க அரம்பையும்
எதிர் நோக்கி,
மண்டலமுடைய மன்னா வந்தவாருரைக்கக் கேளாய்
கேளும் நீர் அமரர் கோமான் கிளர்ந்தெழு பூசை பெற
நீளு மாமலர் கொண்டேகும் நேரிழையார் களொடும்
வாளுரைக் கையா உந்தன் வனத்தில் வந்து புக்கு அங்கு
கோளெனக் [2]கொமட்டியின் கொழுந்து கை தீண்டிற்
றென்றாள்:
...நது தன்னாத் திருவுந்தன்பிலனு மறியா
ஆண்ட இந்திரனார் பாதம் ஆகையால் ஆங்கோர்
மற்றென்று வாகாய் மன்னன் கேட்க மாமயிலிதுசொல்வாள்,
பகரும். ஏகாதசி பலன் தன்னில் பாதிஈய்ந்தால்,
ஏகாது இந்திர நகர்க்கு எய்தலாம்
என்றுரைத்தாள்
ஏகலாம் என்ற வார்த்தை இறைவனும் மகிழ்ந்து கேட்டு
தாகமோடிருந்த தூதர் தம்மை தரணி யெல்லாம்

..................................................................

1. கூகா வென்றமல - குய்யோமுறையோ வென்று கூச்சலிட
2. கொமட்டி - குமட்டி - ஒருவகை மூலிகைச்செடி

போகவே அனுப்பச் சென்று பூதலமெங்குந் தேடி
சோபமாய் விரதங்கொண்டவர் காணோம் என்றவர்
தூதர் மீண்டனர்
மீண்டவர் உரைக்கக் கேட்டு வேந்தனும் மனம்
தளர்ந்து,
பூண்டதோர் விரதந் தானும்
பூதலத்தில் இல்லை யென்றார்
ஈன்றதோர் தாயே நான் தான் என்ன செய்வேன்
என்று சொல்லித், தாண்டிய புகழான் தன்னைத்
தையலும் நோக்கிச் சொல்வாள்
சொல்லுவது கேளாய் மன்னா துயரமது அகற்றியுந்தன்
நல்கிய விரதந்தன்னை நன்னகர் தன்னுள்ளே தான்
செல்வமாய் உனைத் தானொரு சிராய் வளர்த்தெடுத்து
வல்வினை யில்லா மாதே மன்னவர்க் குணர்த்தி யென்றாள்
எண்ணலும் தூதர் தம்மை இறைவனும் அனுப்பவேதான்
சென்றனன் அவனைக் கூவிச் [1]செவிலியும் உடன் கொண்டேகி
நின்றதோர் மாதின் முன்பு நிறுத்தவே தாதி தானும்
அன்புறப் பணிந்திருக்க என்னை அழைத்ததேன்
சொல்லாய் தாயே என்ன
தாயெனும் அரம்பை நோக்கித் [2]தையலே நீதான் செய்த
காவெனும் ஏகாதசிக் கதையினில் விருத்த மாக நீயொரு
பொழுது செய்த நிச்சயம் விரதம் பாதி
ஒளிவிலாதளிப்பை யாகில் உம்பர் பதத்தில் செல்வேனே!
செல்வேன் என்ற போது சேடியும் மவளை நோக்கி
அல்வினை அகற்றும் மாதே அவனியில் தானுமில்லைச்
சொல்வ தென்ன அடியாள் என்று துதித்தவள் முன் நின்றாள்:
முன்னின்ற தாதி தன்னை முகமலர்ந் தரம்பை நோக்கி
கொன்னகர் வேந்தர் உன்னைக் கோவிக்க நீ பயந்து
பொன்னெடுங் கோயில் புக்கு போசனந் துறந்தாயன்று
பன்னுமா ஏகாதசிப் பலன் உனக் காச்சுது என்றாள்

.........................................................................

1. செவிலி - பணிப்பெண் 2. தையல் - பெண்

பாற்பது பரமனார்தம் பருதி யுதையம் செய்ய
ஒலித்திடும் நீரில் மூழ்கி ஒரு பொழுதமுது செய்தாய்
துலைத்து நின் வினையும் போய் துவாதசி பலனுண்டாச்சு
அளித்தெனக்குப் பேர்பாதி அளித்தியோ வென்றே கேட்டாள்:

இயைந்த தோர் விரதந் தன்னால் ஏந்திழை
விண்ணிற்போனாள்
வாழ்ந்ததோர் மன்னனாரும் மகிழ்ந்து கொமட்டியின்
விரையை
ஆய்ந்து தூரப் பிடிங்கிப் போட்டு அவனுடைய
நகரிலெல்லாம்
வேந்தனும் ஏகாதசி விரத முண்டாக்கினானே!
கேட்டநற்தாதி தானுங் கிளர்ந்த இவ்விரதந் தன்னை
வாட்டருங் கண்ணினாள் வருத்தினா ளப்போ நம்மை
தேட்டமாய் முன்னாள் செய்த திருவேகாதசி தன்னை
நாட்டமாய் உனக் களித்தேன் என்றவள் நீரும் ஈய்ந்தாள்
விரதமே யுறுவதாக மேல்வருங் குடிகள் எல்லாம்
துரிதமே நோக்கி எந்தன் சொல்லிய தோழியினாலே
சரிதமே போல இந்த தரணியிலுள்ளோ ரெல்லாம்
பரவியே விரதம் நோற்று பாவங்களை அகற்றினாரே!
பாவங்கள் அகன்று நல்ல பரகதி அடைந்ததினாலே அவர்கள்
யம வாதை அடைபவர்கள் யார் மற்றுத்தவங்களில்
யம தருமன் மனம் சலித்து மாமனமும் நொந்து
கந்துடன் [1]கடாவிலேறி தூதரோடுஅக வுற்றான்

ஏகுங் கயிலை ஈசன் இந்திரன் நன்மாய னொடும்
போதமாம் பூமிவேந்தர் புரந்தர ரொடும் விண்ணோர் ஏக
நான் முகனா ரொடும் இறைஞ்சி அங்கிருப்ப வந்தே
தாகமோடு யமதர்மன் சங்கரன டியில் வீழ்ந்தான்

..................................................

1. கடா - எருமைக்கிடா.

வீழந்தவன் எழுந்து 'விமலனே போற்றி என்ன
தாழ்ந்த செஞ்சடையார்[1] நோக்கி தருமம நீ வந்த தென்ன (என)
வந்தனன் அடியேனுக்குப் பேர்வர வற்றைக் கோர்
நாளில்லாமல்
போந்தென்ன ஈசா போற்றி புனிதனே
போற்றி என்றான்.

போற்றி என்ற இயமனாரும் புவிதனில் ருக்குமாங்கதன்
சாற்றரும் ஏகாதசி தனையவன் நோற்கையினாலே
ஆற்றவும் புவியில் அப்போதே அவனுடைய பதியிலுள்ளோர்
கூற்றனாய் வரையானும் அவர் பால் போகா தென்றான்

என்று தான் இயமன் சொல்ல ஏகுமென்றருளிச் செய்து
அன்று மால் தன்னை நோக்கி அரசனை சோதித்திப்போ
வென்று நலம் ஆண்டு கொள்வோமென்றருளிச் செய்து
வென்று பூங்குழலார் பங்கன் ஊர்வசியை அழைத்துச்
சொல்வான்
நோக்கியே ருக்குமாங் கதனுக்கு மால் விரதந் தன்னை
மார்க்க மோடு அவனைப் [2]புல்கி மாற்றுவா யென்று கூறத்
தூக்கிய தாளா[3] உந்தன் சொற்படியே அடியேன் நன்று
ஆக்குவேன் விரதந் தன்னை அழிப்பேன் என்று அவளும்
போனாள்

போனவள் தானும் அந்தப் பூதலத்தில் இரங்கி. இப்போ
மோனமாய் வனத்தில் எய்தி மோகினி என்ன நின்றாள்.
தானவ ரென்று மன்னர் தக் தோர் வனத்தில் வேட்டை.
சேனைகளொடும் போக சேயிழை தன்னைக் கண்டான்.
கண்டதோரளவில் அந்தக் காரிகை பக்கலில் சென்று.

..................................................................

1. தாழ்ந்த செஞ்சடையார் - சிவபெருமான்
2. புல்கி - அணுகிச் சென்று 3. தூக்கிய தாளன் - சிவன்

கண்டஅவள் நீள் குழலாய் எமைக் கூடுவையாகில் பேர்
அண்டரும் துதிக்கப்பட்ட அரசி என்று உன்னை வைப்பேன்
வண்டமிழ்ச் சொல்லாய் உந்தன் மனந்தனைத் திறந்து கூறாய்

கூறுவை என்று சொன்னக் கொற்றவன் தன்னை நோக்கி
ஏறுமென் சொல்லை அய்யா இகழ்ந்தனை யாலெப்போ
தீருமுந் தன்னை விட்டு செல்வமாய் கருமம் விட்டுப்
பூர்வ சிநேகம் விட்டுப் போகுவேன் என்றுரைத் தாள்
உரைத்த சொல்லதற்கு வேந்தன் [1]ஓமென உடன்பட்டாங்கே
திருத்த சூழ் [2]சிவிகை தன்னில் சேயிழை தன்னை ஏற்றி
இரைத்தெழு சேனையொடும் இயலுடை வேந்தர் சூழ
வருத்தமே இல்லா மன்னன் மாளிகை சென்று புக்கான்

புக்கவன் அம்மாளிகை தன்னில் போதுற புல்கி யங்கே
எக்கியே இருவர் தாமும் அழுந்தியே மயங்கி மன்றாட
தக்கதோர் வேள்வி எல்லாம் தர்மாங்கதன் எனும் மைந்தன்
மிக்கதோர் களிப்புடனே சென்று அரசினை ஆளு நாளில்

நாட்சில கழிந்து செல்ல நாயகி தன்னோடந்த
வாட்சில ஏந்து மன்னன் மகிழ்ந்தினிது இருக்கும் நாளில்
ஆட்சியாம் ஏகாதசி யென்று எனவறிந்து மங்கை
தாழ்ச்சியே சொல்லி வேந்தன் தனக்கு [3]அடைக்காயு மீந்தாள்
ஈய்ந்தனன் மங்கை தானும் நிலையமைந்தாள் அப்போ
பெயர்ந்துலர் நகர் தன்னில் பேரிகை முழுங்கிற் றங்றே
ஏந்தரும் ஏகாதசி இன்றென அறிந்து மன்னன்
சேர்ந்த [3]அடைக்காய் தன்னைத் திரும்பவும் அளித்தான்ஆங்கே!

..........................................

1. ஓமென - சரியென 2. சிவிகை - பல்லக்கு
3. அடைக்காய் - தாம்பூலம்

அளித்தலும் வாங்கோ மென்றே அளித்தலும் அரசை நோக்கிக்
களித்திடும் விரதம் தன்னைக் காக்க நீர் வேண்டு மென்றீர்
குளிர்த் தடங் கண்ணினாளும் கொற்றவன் தன்னை நோக்கி
துணிந்து நான் உமக்குச் செய்த துரோகத்தைச் சொல்லு
மென்றாள்

சொல்லுவ தொன்று கோளாய் சொல்லும் நீ வேறு முன்போர்
நல்லதோர் விரதம் தன்னை நானறியாம லிப்போ
அள்ளுரு குழலே நீதான் அளித்ததோர் அடைக்காய் தன்னை
வல்லரும் வினையில்லாமல் வாங்கினே னென்று
சொன்னான்

வாங்கின குற்றமல்லா மற்றொரு குற்ற மில்லை
தீங்கு தான் இல்லாமல் ஏகாதசி விரதம் என்னக்
கோங்கடாக் குழலினாளும் குற்றம் பாராட்டி யந்தத்
தீங்கிலா அடைக்காய் தன்னை திரும்பவும் வாங்கேன்
என்றாள்

என்றலும் இறைவன் நோக்கி யான் செய்யும் விரதம்
தன்னைக்
குன்றணைக் கொங்கையாள் நீ குலைப் பாயாகில் இப்போ
சென்றுயிர் விடுவதல்லால் செய்தவம் இகழ்வ தில்லை
என்றுலகாள் வேந்தன் கூற ஏந்திழை இது சொல்வாள்

சொல்வதிது கேட்பீராகில் துணிந்து நீர் அடைக்காய் தன்னை
அல்லது மென்றுநீர் அருந்துவீர் அருந்தீராகில்
தொல்லையாம் கானகம் தன்னில் சொல்மொழி
தவறிற்றென்றே

வெல்லரும் புகழாய் போகவிடை எனக்கு அருளு மென்றாள்:
என்றலும் நகைத்தே வேந்தன் ஏந்திழை தன்னை நோக்கி
சென்ற தம் பக்தர் [1]நோற்கும் சீரிய விரதந்தன்னை
ஒன்றியே நோற்ப திந்த உத்தமர்க்கு உறுதி என்றான்.
உறுதி யென்றரசன்கூற ஒண்திரு மாது சொல்வாள்
பெருதியாம் எந்தன் பேரில் பிழைகளேது முண்டாகில் அய்யா
அறுதியாய் என்னோடு உண்மை அருள் செய்வாய்
அல்லதென்னை,
வெறு மலர்க் கானகத்தேக விடைதர வேணுமென்றாள்:
வேணு மென்றவள் தான் கேட்க வேந்தனும்
வெகுண்டெழுந்து
பூணுமா விரதந்தன்னைத் தவிர்ப்பதில் இந்தப்
பூவுலகத்திலுள்ளோர் காணவே யுன்னைத்
தானும் நான் கழிப்பதே தருமமென்றான்:

கழிப்பதே நன்றென்று அந்த காவலனும் கூறப்
பழிப்பில்லா மன்னன் தன்னைப் பார்த்து நன்மயிலும்
போற்றிச்
செழிப்பதாம் அரண்மனையை விட்டுத்தேர் ஏறச்
செல்லும்போது
விழிப்பொடு முன்னம் நிற்கும் மைந்தனும் அவளைக்
கண்டான்

கண்டதோர் அளவில் அந்தக் காவலன் குமாரன் தானும்
எண்டிசை என்றம் சிங்காதனத்திலும் அமிழ்தங் கோடி
வண்டணி மலர்ப்பாதம் வணங்கியே துதித்து நின்று
அண்டர்கள் போற்றும் தாயே அரசனைத் துறந்த தேனோ
என்ன

................................

1. நோற்று - விரதமிருந்து 2. வல்வினை - தீவினை

துறந்ததோர் விசேஷம் தன்னை சொல்லுவேன் [1]மதலையே
கேளாய்
அறந்திகழ் அருளில் அந்த அரசனுக்கு அடைக்காய் ஈய்ந்தேன்
சிறந்ததோர் வேந்தன் தானும் திரும்பவே ஆங்களித்தன்
அப்போ
மறந்து நான் வாங்கோ மென்றேன் மன்னவன் [2]முனிந்தான்
என்னை
என்னவே மைந்தன் தானும் இறைஞ்சியே துதித்து நின்று
அன்னையே வருக வென்று அழைத்துடன் கோயில் புக்கான்
மன்னவர் மன்னர்தானும் மைந்தனைக் கண்டிரங்கிப்
பொன்னகர் தன்னில்வந்த புகழ்வனோடு இனிது சொல்வான்
என்ன சொல்லுவேன் [1]மதலாய் கேளாய் தொல்லையாம்
விரதம்
தன்னை நல்விதிப்(விழிப்)பயன் களெல்லாம் நமக்கு
வந்தெய்தியதே என்று செல்வமோடிருந்து நோற்று
வசிப்பதே பொறாமல் இந்த வல்வினை மாது செய்த
வழக்கினைக் கொள்ளாய் என்றான் :

கேளாய் இனி [2]வல்வினை பொய்க்க கேள்விமிகு குமாரா !
விரதந்தன்னை மாற்றவென்றே மனத்திலெண்ணி
நீளாகவே அடைக்காய் தன்னை நேரிழையும்
சூதாகவே அளித்திவள் தான் [3]தோதகத்தைப் பண்ணினாளே

பண்ணினாள் ஏகாதசிப் பலன் தன்னைக் குலைக்கவென்று
என்றிவளும் ஈய்ந்த அந்த வேளையில் முரசறைந்தார்
வண்ணமாம் அடைக்காய் தன்னை என்கையில்
வாங்கிக்கொண்டு
தாதுசேர் [4]தார் புயத்தா மீளத் தருவையோ வென்றுத்
தீதிலா குற்றம் நான் தான் செய்திட்டேனாகில் அப்போ
ஆதலால் என்னையாங்கே அனுப்புமென்றவள் தான்

1. மதலை - மகன் 2. வல்வினை - தீவினை 3. தோதகம் - இடையூறு - தீமை 4. தார் - மாலை

சொன்னாள்
சொன்னதோர் மாற்றம்கேட்டு சோபத்தோ டெழுந்து நானும்
அன்னவள் தன்னை நோக்கி அரியதோர் விரதம் தன்னை
உன்னுடைய நினைவால் [1]நோற்று உயர் தவம் பெறநான்

வேணும்
என்னவே இவள் தான் இப்போ இசைந்திலள் எழுந்து

போனாள்
போனாளென்றரசன் கூறப் பொற்புடை மங்கை தானும்
தேனுரும் துடையாய் நீ தான் செய்யும் விரதந் தன்னை
யானோதான் தவிர்க்க வல்லை என்று என்கையில் அடைக்
காய் தன்னை,
வானவர் மன்னா நீரும் வாங்கவே மறுத்த தென்ன,

என்னதான் சொல்வீர் இந்த ஏந்திழை செய்த குற்றம்
பன்னாளும் ஏகாதசி பண்ணும் விரதம் தன்னை
எந்நாளும் இன்று தான் என்றறிந்தவள் அடைக்காயு மீந்தாள்
மன்னாகேள் அடைக்காய் தன்னை மாற்றினை என்ன
குற்றமென்றாள்

குற்றமிதல்லாமல் வேறு குற்றம் தான் இவள் மேல் இல்லை
மற்று நீ செய்வ தென்ன மைந்தா நீ சொல்வாய் என்னப்
பற்றறியாய் மலர்கொண்டு ஏற்றிப் பணிந்து மாதேவா
. கேளாய்
கற்றதோர் விரதம் தன்னைக் காப்பது கடனே என்றான்
என்றலும் நகைத்தே அந்த ஏந்திழை மகனை நோக்கி
நன்றது சொன்னாய் அந்த நலம் திகழ் விரதம் தன்னை
இன்று நான் விலக்குவேனோ என்கையில் அடைக்காய்

..........................................................

1. நோற்று - விரதமிருந்து

தன்னைக்
குன்றெனப் புயத்தான் தள்ளும் குற்றம் நான் கூறினேனோ.
கூறுவாயென்ன மைந்தன், குறையில்லைத் தாயே கேளாய்
வீறுமாவிரதம் தன்னை வேண்டியே அடைக்காய் தானும்
ஏறுமே ஏறாதாகில் ஈய்ந்தனன் அரசன்தானும்
ஆறுவாய் கோபம் என்று அவளடி தன்னில் வீழந்தான்

வீழ்ந்தவன் தன்னை நோக்கி மெல்லியாள் இது சொல்வாள்
தாழ்ந்ததோர் அடைக்காய் தன்னைத் தள்ளுவீராகில்
அப்போது
ஆன்றெழு துயரம் நீக்கி அவனியுள்ளோர் களைச்
சூழ்ந்தெழு வாளால் என்னைத் துணித்திடச் சொல்வாய்
என்றான்
என்றலும் விரதம் தன்னை இகழ்வதில்லை எந்தாய் கேளாய்
பொன்றிலர் இறந்தாரெல்லாம் பூதலத்தில் இருப்பாரில்லை
வன்றிறல் வேந்தர் வேண்டும் மைந்தரைப் போலுமாகும்
வென்றிலர் என்னைக் கொல்லி விரதமும் தவிராரெந்தாய்

எந்தனைக் கொல்வீரென்று எழிலுடை மைந்தன் கூறச்
சிந்தையில் தயக்கம் நீங்கித் திகழுடை வாளொன்றேந்திப்
பந்தமதறுக்கவே வேந்தன் மைந்தனைப் பதைத்து நோக்கி
முந்துறத்தோடு வீரென்றே மோதினான் வாளினாலே

வாளது மாலையாக வீழ்ந்தது அப்போது
நீள்சடைக்[1] கடவுள் தானும் நேரிழை உமையுங் கூடத்
தாளெழு ரிஷபமீதில் தோன்றிடத் [2]துளபம் தந்தானக்
காளமா[3] முகிலே போலக் கருடன் மேல்தோன்றினாரே !

தோன்றினார் அயனும் மாலும் சுருதி நான் மறையினானும்
ஆனதோர் வேலின் மீது அண்டர் கோனும் வந்தார் .

....................................

1. நீள்சடைக் கடவுள் - சிவபெருமான் 2. துளபம் - துளசி
3. காளமாமுகில் - கருத்தமேகம்

தோன்றினார் மலர் கொடேற்றி உம்பரும் தொழுது போற்ற
சான்ற நால் திக்குப் பாலர் சத்தமா ரிஷிகள் வந்தார்

வந்தவரல்லார் மற்ற மறியும் இங்கு வந்தான் இந்து
வெம்பதியுள்ளனன் னென்றவ் வசுக்கள் வந்தார்
கந்துறு சித்தர் வந்தார் கற்புடையரம்பை வந்தாள்
முந்தினரிவரென்னாமல் மூவுலகத்தோர் வந்தார்

வந்ததேவர் மாரெல்லாம் மாமழை பொழிந்து வாழ்த்திச்
சிந்தனையற்ற எந்தை தேவர்கள் ஜே ! ஜே ! என்றார்
எந்தையே சிவனே யென்று இரைஞ்சினான் வேந்தனாங்கே
அந்த நீள் சடையார் தாமும் அரசனை எடுத் தணைத்தார்

எடுத்த பின் மன்னன் தேவி இரைஞ்சியே தொழுதுபோற்ற
தடுத்த பூங்குழலினாளைச் சங்கரி தானணைத்தாள்
அடுத்தவன் குமாரன் தானும் மார்புறத் தழுவினாரே !

தழுவிய தேவரோடும் சகலரும் துதித்துப் போற்ற
அழிவிலா விரதம் நோற்று அவன் பதியுள்ளோ ரெல்லாம்
பழுதிலாநல் வேந்தரோடும் பாங்கியர் மாதினோடும்
அழிவிலா மாந்தரோடும் பூமழை பொழிந்து வாழ்த்த

மிக்கதோர் விமான தன்னில் விரைவாயவ ரேறிக் கொண்டு
அகக் களிப்புடனேயந்த அரனுடன் திருமால் சூழப்
பக்கமே தேவர் சூழப் பருவரை கயிலை புக்கார்
கயிலையான் தானுமந்த காகுத்தன் தன்னை நோக்கி
அயலுடைய வேந்தன் தன்னை யழைத்து நீர் கொண்டு

சென்று
பயில் வெயிலாய் முற்றப்பாம்பணை யதனின் மீதே
துயிலும் வைகுந்தம் மென்னும் சொர்க்கத்தில் வைப்பா
யென்றார்:

வைப்பாதாய்ச் செங்கண்மாலை மகிழவே யந்த மன்னன்
செப்பரிதான மங்கை சிறுவனும் பணிந்து போற்ற
அப்பணியான தேவர் அம்பென விமானத் தேற்றி
துப்பனை யருத்துங் கள்வன் தன்னையே துதித்துச் சென்றார்

துதித்த நான்முகனும் போற்றத் தொல்லைனாள்அமரர்

போற்றக்
கதித்த இந்திரனார் போற்றக் காவலர் அமரர் போற்ற
மதித்ததோர் தேவரெல்லாம் மன்னனை மகிழ்ந்து வாழ்த்த
அதித்ததோர் கழலோன் தன்னை அய்யனும் நடந்து வாழ்த்த
நடந்தனன் அடியார்க்குற்றவர் வந்தாரென்று
அடந்தவே ருக்குமாங்கன் ஆண்டவன் வந்தாரென்றும்
படந்த நற்பகைகள் தீர்க்கும் பரமனார் வந்தாரென்று
திடத்துடன் செம்பொற்காளமும் சின்னமும் முழங்கிற்றன்றே

முழங்குறத் தொணியுங் கேட்டு மொய்யுநம்
வையத்துள்ளோர்
வழங்குமா மாடகூட மண்டபம் ஆலயங்கள்
செழுமணிக் கோபுரங்கள் செம்பொன் ஆலயங்களெல்லாம்
அலங்கிறுதத்துடனே[1] சேர அழகுடன் நேர்ப்பித்தாரே!
ஒப்பித்த கயிலாசத்திலுயர் திரு மார்க்கண்டன் பால் பல
பற்றில் ஆகம ஆழ்வார் பரதாழ்வாரோடு கூடி
விற்பத்தில் வைகுந்தத்தில் மேவும் முனிவரோடும்
முற்பத்திலெடு நத்தாதி மூல மென்று எதிர் கண்டார்

எதிர் கண்டு அவரை வணங்கி எம்பெருமானைப் போற்றி
மதிகொண்ட மன்னவன் ருக்மாங்கன் மன்னனைத்
தழுவிக்கொண்டு

........................................

1. அலங்கிறுதம் - அழுகுபடுத்தல் 2. கழுலன் - கருடன் (பறவை)

பதிதனில் விரதம் நோற்றுப் பாலரும் தேவியோடும்
கெதிபெற சிவத்திற் சேரவே வந்தீர் என்றார்.

வந்தாரே கணமுடன் மன்னன் ருக்மாங்கன் என்று
பந்தாடதனைப் போனுண்டுப் பாவையர்கள் மிகப் பணிந்து
கந்தார் மலர் தூவிக் கை தொழுது களித்து மிகச்
சிங்கார ஆரத்தி தெரிவையரும் எடுத்தனரே!

எடுத்தாரே விமானம் தன்னை எம்பெருமான் திருக்கோயில்
எடுத்தாரே கழுலன் என்னும் அயிராவணன் போலிருந்து
தடுத்தார் ஏவல் வேந்தர் தம் இடத்தே இருமென்று
கொடுத்தாரே இடம் அவர்க்கக் கொற்றவரும் அப்போது

அப்போது நான்முகனும் அமரர்களுடன் இந்திரனும்
ஒப்பாரும் வசுக்களுடன் ஓர் வான் ஊர்தித் தானனுப்பி
வைப்பாருமில்லா ஆவார் மார்க்கண்டன் ருக்மாங்கன்
மெய்ப்பான தர்மாங்கனுடன் இருக்குவித் திருந்தார்
ஒரு தனி மேனியானை ஊர்வசி வந்து கண்டு
ஆதியே புவன மெல்லாம் அளந்தெடுத் தெடுக்குமையா
தீதிலா ருக்மாங்கன் செய்தவரம் சோதித்த எனக்கு
ஏதுநீர் வரம் அளித்தீர் என்றவள் பணிந்து வீழ்ந்தாள்:

வாழ்ந்த தோர் மன்னனாரும் மகிழ்ந்து இவ்விரதம் நோற்க
எழுந்தரும் தெய்வ லோகத் தெல்லாரும் கேட்டு மெச்ச
சென்று நீ சோதித்தாய்
சேயிழை கேளாய்யிப்போ
தாழ்ந்த தோர் வரமுனக்குத் தருகிறோமென்றுரைத்தார்:
மாய்கையால் அவனிடத்தில் வாழ்மனைதனில் புக்கு நீ
மதியால் ருக்மாங்கன் நீதியை நிறுத்தினாய்
தோகையே கேளாய் நல்லது துவாதசிப் பாரணையைத்
தாகமோடொருவர் பண்ணிச் சற்றவர் உறங்கும் போது
பாகுசேர் மொழியாய் அந்தப் பலன் உமக் களித்தோம்
என்றார்

கன்னியர் கவரி வீசக் காவலனும் மாநகர் தன்னையாண்டு
மன்னகர் ஏகாதசி யாவரும் அறியத் தன்னைத்
திறமையாய் விரதம் நோற்றுச் சிவபதம் அடைந்தார் தாமே !

இப்படி பூமிதன்னில் யாவரும் அறியத் தந்த
விற்பனை ஏகாதசி விரத முண்டாக்க வேண்டி
மைக்குழல் அரம்பை மாதர் மாநகர் தன்னில் வந்து
இக்கதையை ருக்மாங்கதர்க்கு இயல்படனறிவித்தாரே !
நீதியாம் ஏகாதசி நெறி தன்னை யறிந்து மன்னன்
தாகமோடிந்த நோண்பு தன்னையே நோற்கையிலே
பாவமா மென்னுமந்தப் பாதகந் தன்னை நீக்கிக்
காதலாலே மைந்தனொடுங் கன்னியும் கைலை புக்காள்

புண்ணிய விரதத்தாலே பூமியிலுள்ளோர் களெல்லாம்
மன்னவன் ருக்மாங்கன் வாழ் கைலாசத்தேகித்
திண்ணமாஞ் சிவபதத்தில் திருவடி விளங்க நன்றாய்
பண்ணிய பாவம் தள்ளிப் பரகதி அடைந்தார் தாமே !

மாசிலாமணி ஏகாதசிப் புராணம் எழுதி
முடிந்தது முற்றும்.
-ஹரி ஓம்-

### 6. ருக்மாங்கத சரிதம்

# கதைச்சுருக்கம்

தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின் சரசுவதி மகால் நூலகத்திற்கு என்னால் கொடுக்கப்பெற்ற MS.No.1867 Tஎன்ற இலக்கமிடப் பெற்ற ருக்மாங்கத சரிதம் இசைநாடகச் சுவடிக்கட்டு தஞ்சை மாவட்ட தீபநகர் அம்மாப்பேட்டையில் நாட்டுமருந்துக் கடையும் புத்தக வியாபாரமும் நடத்தி வந்த கந்தசாமி செட்டியார் என்பவரின் புதல்வர் ஆர்மோனிய வித்வானும் அருட்பெருஞ்சோதியாரின் அடிமையுமான திரு. சாமிநாதன் அவர்கள் என்னிடம் மனமுவந்தளித்த சுவடிகளில் ஒன்றாகும்.

இச்சுவடியில் காணும் ருக்மாங்கத நாடகத்தை இயற்றியவர் தஞ்சை மாநகரத்தைச் சார்ந்த தொண்டைமண்டலத்து சுப்பராய கவி என்பவராவார்.

கடந்த 19ஆம் நூற்றாண்டின் இசைநாடக நூல்களில் இதுவும் ஒன்று. நாடக அமைப்பு முழுவதும் தொடக்கத்தில் அமைந்த 'அகவல்' எனும் பகுதியில் ஆசிரியரால் அளிக்கப் பெற்றமையால் நாடகம் முழுமையாகக் கிடைக்கப் பெறாத குறை நிறைவாகிறது.

''சுவடியைக் காத்தவர்கள் செய்த குறை காரணமாக பலமுக்கிமான இடங்களிலெல்லாம் சிதிலமடைந்து சீரும் அசையும் சேர்த்தெழுத இயலாத நிலை ஏற்பட்டுள்ளது. சுவடி எழுதப்பெற்றுள்ள நடையிலும் இலக்கண முறையிலும் பிழைகள் மிக அதிகம் கண்டபோதும் இது போன்ற சுவடிகளின் சுவாசத்தின் ஓசை ஓரளவு அறிந்தமையால் சுவைப்போர்க்குக் குறை தோன்ற இயலாதபடி கூடியவரை சொற்களை முறைப்படுத்தி எழுதியுள்ளேன். எனவே உயர் தமிழ்கற்றோர் குறைகாணின் பொறுத்தருள வேண்டுகிறேன்.''

நாடகமியற்றிய கவிஞர் சுப்பராயன் அவர்கள் பாடல்கள் அனைத்திற்கும் உரிய இராகங்களை முதலில் கூறுவதோடன்றி அப்பாடலிலேயே இராகத்தின் பெயரும் வந்தமையுமாறு இயற்றி இருப்பது போற்றுதற்குரியதாகும். எனினும் தாளத்தின் பெயரை ஏனோ குறிப்பிடாமல் விடுத்துள்ளார்.

ஆயினும் பாடல்களைப் பாடியும், கைத்தாளம் போட்டுப் பார்த்தும், சந்தமுறைகளுக்கேற்றதான தாளம் இதுவாக இருத்தல் வேண்டும் எனக்கொண்டு தாளங்களின் பெயர்களை என்னால் இயன்றவரை கொடுத்து குறையை நிறைசெய்ய முனைந்துள்ளேன்.

சுப்பராயக் கவிஞர் அவர்கள் மகாபாரதம் கம்பராமாயணம் மற்றும் பலபுராணங்களைக் கற்றுணர்ந்த தோடு அதர்வண வேதம் சார்ந்த பல அரிய நூல்களையும் அறிந்தவர் எனபதையும், கற்றறிந்த பெரியோர்களிடத்து மிக்க பயமும் பக்தியும் கொண்டவர் என்பதையும் இவரது அவையடக்கப் பகுதியின் மூலம் காணலாம்.

**'எள்ளுக்குள் எண்ணெய் போலும்'** எனும் சொற்றொடர் கம்பராமாயணத்தில் வீடணன் கூற்றாக வருவதாகும். இச்சொற்றொடரைக் கையாளாத கடந்த நூற்றாண்டுக் கவிஞர்களே இல்லை என்றே கூறலாம்.

நாடக அமைப்பைப் பொறுத்த வரை முறையான இறைவணக்கமும், அவையடக்கமும் கதைச் சுருக்க அகவலும், கணபதி வருதலும் கட்டியக்காரன் வருதலும் மன்னர், மந்திரி மகாராணி வருதலும், நாட்டியப் பெண்கள் வருவதும் இயல்பே. எனினும் இவரது நாடகத்தில் மல்லர்கள் வந்து தமது வீரச் சண்டையை மன்னர் சபையில் காட்டுவது இக்கவிஞரும் ஒரு மல்லுச் சண்டை வீரரோ எனவும் இவருக்கு மல்லுச் சண்டையை கற்பித்த

ஆசிரியரின் பெயர் முத்துராயன் (தோட்டக்காரன் விருத்தம்) என்பதுவோ எனவும் எண்ணிடத் தூண்டும்.

நீதிகளைக் கூறும் சொற்றொடர்களும் பழமொழிகள் பலவும் இவரது படைப்பில் காணப் பெறுவதும் சிறப்பாகும்.

சுப்பராயக் கவிஞர் நாடகம் செய்துள்ள முறையும் அதன் சுவையும் கற்றோர் போற்றற்குரியதே என்பதை முற்றும் படித்திட உணரலாம்.

இனி நாடகத்தின் கதை அமைப்பு எவ்வாறு உள்ளதெனக் காண்போம்.

கவிஞர் சுப்பராயன் அவர்கள் இந்நாடகத்தை இயற்றிட பல்வேறு நூல்களையும் ஆராய்ந்து பார்த்துள்ளதாக கூறுகிறார். கற்றறிந்த பெரியோர்களை பெரிதும் மதிக்கின்றவர். இவருக்கும் முன்னதாக பலரும் இந்த ருக்மாங்கதன் நாடகத்தை இயற்றியுள்ளார் என்பதையும் குறிப்பிடுகின்றார். அவையடக்கம் கூறும்போது கம்பனாகி ''கடலில் விட்ட துளி யது போன்ற தே'' தன் கவிதை என்கிறார். நூல்கள் பலவற்றின் பெயர்களை வரிசைப்படுத்திக் கூறும் முறையைக் காணும்போது அனைத்து நூல்களையும் ஒரு பார்வை பார்த்தவர் தான் இவர் என்று தோன்றுகிறது. வேதமாதி வாகட அந்தம் அனைத்தையுமே குறிப்பிடுகிறார். ஆதவன் குலத்தில் தோன்றிய ருக்மாங்கதன் அரசாட்சியைச் சிறப்புற செய்து வந்தான். மச்சாவதாரம், கூர்மாவதாரம், வராக அவதாரம், வாமன அவதாரம்,நரசிம்ம அவரதாரம், பலராம அவதாரம், பரசுராம அவதாரம், ராமாவதாரம், கிருஷ்ணாவதாரம், கல்கி அவதாரம் ஆகிய பத்து அவதாரங்களையும் வரிசை பிசகாமல் கூறியிருப்பது. புராணங்களை உண்மையில் இவர் நன்கு படித்தவர் தான் என்பதை தெளிவாக உணர்த்துகிறது. இந் நாடகத்தை எழுதியவர், படித்தவர், படிக்கக் கேட்டவர் நாடகத்தைப் பார்த்தவர் அனைவருக்கும் நன்மை பெருகும் என்கிறார். நாடகம் தொடங்குகிறது.

விநாயகர் வருகிறார். அழகான, வாசனை பொருந்திய மலர்கள் சூடி, இவரை வணங்குவோர்க்கு செல்வம் பெருகும், உலகம் செழிக்கும், நற்செயல்கள் அதிகரிக்கும், பண்ணிய பாவங்கள் பறந்தோடிப் போகும், இவ்விநாயகரை பூசிக்க குருக்கள், உடலில் தீரு நீறு பூசிய கோலத்துடன், பஞ்சாட்சரமெனும் நமசிவாய மந்திரமதை ஓதியவாறு கையில் பூசனைக்குரிய பலவித உணவுவகைகளையும் ஏந்தியவாறு வருகின்றார். இவர் ஒருவரே பலகோயில்களிலும் பூசை செய்கிறவர். ஆனாலும் இவரது வீட்டில் வறுமை தாண்டவமாடுகிறது. உறவினர் இவரது நிலைகண்டு நகைக்கின்றனர். இவர் ஒரு சூத்திரப் பிராமணர். பூசை முடிந்தது. கட்டியக்காரன் வருகிறான். இவன் கையில் பிரம்பு வைத்துள்ளான். (இன்னார் சபைக்கு வர உள்ளார் என்பதை கூற வேண்டிய பகுதி இல்லை).

**மந்திரி வருகை:** பொன்னால் ஆன ஆபரணங்களுடன் வில்லும் ஏந்தி வருகிறார். காதில் குண்டலம், காலமறிந்து நீதி உரைப்பவர். முகத்தில் மீசை.

**மன்னர் கொலு விருத்தல்** : வெற்றிமகுடம் சூடி, வேற்று நாட்டரசர்கள் புகழந்து பணி செய்கிறார்கள். கையில் செங்கோல் பிடித்துள்ளான். மேளவாத்தியம் முழங்குகிறது. வேத ஒலி கேட்கிறது. மன்னரின் மனைவியாகிய சந்தியாவல்லி பெற்ற மகனாகிய தர்மாங்கதன் உடன் வருகிறான். இளம் பெண்கள் கவரி வீசுகின்றனர். பாவையர்கள் நடனம் செய்கின்றனர். புலவர்கள் புகழ்க் கவி பாடுகின்றனர். அந்தணர்கள் ஆசி கூறுகின்றனர். கோவிந்த நாம பஜனை செய்யப் பெறுகிறது. இவ்வாறாக வந்த மன்னர் மந்திரியிடம், ''மாதம் மும்மாரி பொழிந்திடும் இம்மாநிலத்தில் உள்ள மக்கள் மனுநீதி தவறாமல் வாழ்க்கை நடத்துகின்றனரா? விலங்கினங்கள் எல்லாம் நல்ல நிலையில் உள்ளனவா? வேதம் ஓதுவோரும், முனிவர்களும் தங்கள் பணிகளைச் சரியாக செய்து வருகின்றனரா ? பறவையினங்கள்

நன்றாக உள்ளனவா ? தீமைசெய்யும் விலங்குகளின் எண்ணிக்கை கூடுதல் ஆகாமல் உள்ளதா ? ஆலயங்களின் பூசனைகள் தவறாமல் நடந்து வருகிறதா ?'' என்று கேட்டறிந்து கொள்கிறார். பின்னர் சபையில் நாட்டியம் ஆட நாட்டிய சாலையிலிருந்து பெண்களை அழைத்து வரச் சொல்லி கட்டளை இடுகிறார்.

மெல்லிடையும் மிரட்டும் விழிகளும், பொன்னாலான அணிகலன்கள் அணிந்தும் இனிய கீதங்கள் பாடியும் நாட்டியப் பெண்கள் வந்து நாட்டியம் ஆடிச்சென்றனர். பின்னர் புதுமையாய் யுத்தம் செய்யும் மல்லுக செட்டிகள் எனும் மல்யுத்த வீரர்களை அழைத்துவரச் சொல்லி மன்னர் கட்டளை இடுகிறார். அவ்வாறே அந்த மல்லர்களும் வருகின்றனர். இவர்கள் நெற்றியில் நாமங்கள் இட்டுள்ளனர். இவர்களை ''சாரணர்'' என்றும் கூறுவர். இவர்களுடைய கைகளும் கால்களும் பனைமரங்களைப் போல உறுதியாகவும் திரண்டும் உள்ளன. இவர்களைப் பார்ப்பவர்கள் பயப்படும்படியாக பற்களை நறநறவெனக் கடித்தும் கண்களை வெருட்டிப் பார்த்தும் ஒருவர்க்கொருவர் ''வல்லமை'' வார்த்தைகள் பேசியும் இடையில் சல்லடம் எனும் காற்சட்டை அணிந்தும் வந்தனர். அண்டங்கள் அதிரும்படி சண்டை செய்தனர். பின்னர் நீண்ட சடையுடன் கூடிய தாதிமார்கள் நெற்றியில் அழகான பொட்டுடன் கூட மகிழ்வான வார்த்தைகளைப் பேசியவாறு மகாராணியின் தோழிகள் வருகின்றனர். இவர்களின் கால்களில் அணிந்துள்ள மெட்டியொலி ''கலீர் கலீர்'' என ஒலிக்கின்றது. கைகளில், கண்ணாடி வளையல்களையும், தங்க வளையல்களையும் அணிந்துள்ளனர், வெண்ணிறப் பட்டாடை உடுத்தியுள்ளனர், கண்களைக் காட்டி மயக்கும் திறன் கொண்டவர்கள், அன்னநடையிட்டு அரசவைக்கு வந்தனர். பின்னர் கதைவெகுவேகமாக அந்தப்புரத்திற்குச் செல்கிறது. அங்கு எனப்பெறும் பணிப்பெண் ஒருத்தி **அமிர்தவல்லி** மகாராணியாராகிய சந்தியா வல்லியைப் பார்த்து நகைத்து விட்டாள் இதனால் கோபம் கொண்ட அரசியார், அவளை அடிக்கப் போகிறார். ''சொன்ன வேலைகளைச் செய்யாமல்

சுற்றித்திரிந்தவளே ! உனக்கு அகந்தை மிகுந்துவிட்டது. மட்டிச் செருக்கியே ! '' எனப் பலவாறு கோபமாகப் பேசிக் கொண்டே தாதியை அடித்தாள் : மகாராணியின் கைப்பிரம்பினால் அடிப்பட்ட தாதியின் உடம்பில் ரத்தம் கட்டி ரணமாகிவிட்டது. அடிப்பட்ட தாதி புலம்புகின்றாள் ! ''நான் ஏதும் குறை செய்திருப்பின் அதனை மன்னரிடம் கூறி அதற்குரிய தண்டனையை வாங்கித்தராமல் தாமாகவே முன்வந்து என்னைத் தலைமயிரைப் பிடித்திழுத்து இழுத்து அடிக்கிறாளே ! தினமும் காலையிலிருந்து மாலைவரை சற்றும் களைப்பில்லாமல் இவளுக்குச் செய்ய வேண்டிய பணிகளை எல்லாம் செவ்வனே செய்தேனே ! மேலும் இவளிடம் நானாகவா வேலை கேட்டுவந்தேன்? சாலையில் என்வழியே போய்க் கொண்டிருந்த போது என்னைக் கண்ட இவள் (மகாராணி) தாமாக வலிய வந்து தம்மிடம் வேலைக்கு வரும்படி அழைத்த காரணத்தால், என் தாய் தந்தையரை எல்லாம் விட்டுவிட்டு இவளுக்குத் தாதியாக வந்தேன். ஆனால் இன்று இவ்வாறு என்னை பிரம்பினால் உடல் நோகும்படி அடித்து விட்டாளே !'' என இவ்வாறு புலம்பிக்கொண்டே, உடல் சோர்வுற்று, பசிமயக்கத்துடன் கூட பட்டணம் விட்டு வெளியில் வந்த தாதி மாலை நேரமாகிய சமயத்தில் ஒரு பிராம்மணர் வீட்டுத்திண்ணையில் வந்து படுத்தவாறு, ''யாருமில்லா அனாதை ஆனேனே ! ஆதிமூலமே என்றழைத்த குரல் கேட்டு ஆனையை அன்று காப்பாற்றினீரே ! காலிங்க மடுவில் பாம்பின்மீது நடனம் ஆடியவரே! பாண்டவர்க்குத் துணையாய் நின்றவரே ! பாஞ்சாலியின் மானம் காத்தவரே! எள்ளுக்குள் எண்ணெய் போல் எங்கும் நிறைவுற்றவரே! என்னைக் காத்தருளவேணும்'' எனப் பலவாறு திருமாலைத் துதித்து வேண்டியவாறு கிடந்தாள்.

இரவு முழுதும் அமிர்தவல்லி இறைவனை வேண்டியது பலனைக் கொடுத்தது. கண்ணனின் மனம் கனிந்தது. இதனால் மகாராணியின் மனம் மாறியது. மனம்வருந்தியராணி வேறு ஒரு தாதியை அனுப்பி அமிர்தவல்லியைத் தேடி அழைத்து வரும்படிக் கூறினாள். ராணியாரின் உத்திரவுப்படி நகர்ப்புரம் சென்று

அலைந்து திரிந்து அந்தணர் வீதிகளிலெல்லாம் கூடத் தேடினாள். அப்போது அமிர்தவல்லியைச் சந்தித்து விட்ட தோழிப் பெண், இராணியார் மனந்திருந்தி 'அமிர்தவல்லியை மீண்டும் அரண்மனைக்கு அழைத்துவரச் சொன்னதாகக் கூறி அவளை அழைத்துச் சென்று இராணியாரிடம் ஒப்புவித்தாள். இராணியும் அமிர்தவல்லியிடம் மன்னிக்கும்படி வேண்டிமனம் குளிரச்செய்து நல்லன்னம் கொடுத்து உண்ணச் செய்தாள். இத்துடன் கதைப்போக்கு இடம்மாறி இந்திரலோகத்திற்குச் செல்கிறது.

சிவன், விஷ்ணு, பிர்மா ஆகிய மூவரின் அன்புக்கு உடையவனான இந்திரன், முத்துக்குடையின் கீழ், மாணிக்க முடிதரித்து, இந்திராணியுடன் கூட ஆசனத்தில் அமர்ந்திருக்க ரம்பை, ஊர்வசி முதலான பெண்கள் வந்து இந்திர சபையில் நாட்டியம் ஆடுகின்றனர். காமதேனுவும், கற்பகத்தருவும் அருகில் இருக்க, மற்ற தேவர்கள் வாழ்த்துக் கூற, முனிவர்களும் கூட வாழ்த்து கூறுகின்றனர். அப்போது அழகான ஆடையுடுத்த, சப்த கன்னியர், ஒய்யார நடைநடந்து அந்த அவைக்கு வந்து ''அண்ணலே போற்றி! ஆயிரம் கண்ணா போற்றி!'' என வாழ்த்தி''நமது பூங்காவனத்தில் மலர்கள் இல்லாது வனம் வற்றிப்போயிற்று'' எனக் கூறினர். இதனைக் கேட்ட இந்திரன், அங்கிருந்த நாரதரிடம் ''நமது இந்திரலோக வனந்தனில் மலர்கள் இல்லாமல் போய்விட்டதாக சப்த கன்னியர் கூறுகின்றனர். எனவே தாங்கள் மலர்கள் நிறைந்த வனத்தை எங்காவது பார்த்தீரோ !'' எனக் கேட்டபோது, நாரதர் ''பூலோகத்தில் ருக்மாங்கதன் என்னும் மன்னருடைய மலர்வனத்தில் பூசைக்குறிய மலர்கள் நிறைந்திருப்பதைக் கண்டேன். நீங்கள் உமது சப்தகன்னியர்களை அவ்விடத்திற்கு அனுப்பி மலர்களை எடுத்து வரும்படி உத்திரவிடுங்கள்'' என்று கூறினார். இந்திரனும் அவ்வாறே சப்த கன்னியர்க்கு உத்திரவிட்டான். அதன்படியே சப்த கன்னியரும், பூவுலகிற்குச் சென்று ருக்மாங்கதனுக்குச் சொந்தமான பூங்காவனத்திலிருந்து, பன்னீர், பாரிசாதம் போன்ற மலர்களை தினமும் எடுத்துவந்து இந்திரன் முன்னே வைக்க, இந்த அற்புத

மலர்களைக் கண்டு அதிசயித்த இந்திரன் ''இதுபோல் நீங்கள் தினமும் சென்று மலர் எடுத்து வாருங்கள்''. என சப்த கன்னியர்களுக்கு உத்திரவிட்டான். இத்தோடு இந்திர சபைக் காட்சி நிறைவுறுகிறது.

பூவுலகில் ருக்மாங்கதனுடைய தோட்டத்தைப் பாதுகாக்கும் காவலர்கள், தோட்டக்காரர்கள் வருகின்றனர். இவர்கள் முகத்தில் மீசையும், நெற்றியில் நாமமும் இட்டுள்ளனர். தோட்டத்தில் மலர்கள் காணாமற் போகும் செய்தியை மன்னரிடம் கூறுகின்றனர். மன்னர் மந்திரியிடம், தோட்டத்தில் களவு போகும் மலர்களைக் கண்டுபிடிக்குமாறு பட்டணக் காவலர்களை நியமிக்க உத்திரவு இடுகிறார். மன்னன் உத்திரவுப்படி மலர்வனம் காவல் காத்திடச் சென்ற காவலர்கள் கண்விழித்துக் காத்தும் மலர்கள் மாயமாய் மறைந்து விடுவது கண்டு, மர்மம் ஏதோவென்று தெரியவில்லை என மன்னரிடம் வந்து கூற, அந்த சமயத்தில் நாரதர் வருகிறார். 'குளிக்கப் போனவன் எதிரில் கங்கையே வந்ததுபோல' நாரதரைக் கண்டு நமஸ்கரித்து மன்னரும் தம் மனைவி சந்தியாவல்லியடன் கூடி அவரை அழைத்துவந்து ஆசனத்தில் அமரச் செய்து, தமது நந்தவனத்தில் மலர்கள் மாயமாய் மறைந்து போகும் செய்தியைக் கூறினார். நாரதரும், 'உன்னுடைய மலர் வனத்தில் உள்ள பூக்களையெல்லாம் இந்திரனின் கட்டளைப்படி தேவகன்னியர்கள் தான் வந்து பரித்துச் செல்கின்றனர்' என்ற உண்மையைக் கூறினார். இதனைக் கேட்ட மன்னன் இவ்வாறு மலர்கள் எடுக்க வரும் தெய்வக் கன்னியரை நான் எப்படிக் காண்பது எனக்கேட்க, நாரதரும் ஒரு மூலிகைச் செடியினைச் சொல்லி இதன் வித்துக்களை விதைத்து வனத்திடையே பயிர் செய்தீரானால் அச்செடியின் கொடிபட்ட தன் காரணமாக தேவ மாந்தர் மீண்டும் வானுலகு போக இயலாமல், மாட்டிக் கொள்வர் எனக் கூறினார். மன்னரும், மந்திரியிடம் கூற மந்திரியும், தோட்டக்காரர்களிடம் கூற, வனத்தில் நாரதர் சொன்னபடி பயிர் வளர்க்கப்பட்டது. சப்த கன்னியரும் மலர் எடுக்க வந்தனர். ஏழுபேரில் ஒருத்தி மட்டும் மீண்டும் தேவலோகம் செல்ல இயலாதவாரு மாட்டிக் கொண்டாள். இந்த செய்தியை காவலர்கள்

மன்னரிடம் சென்றுகூற, மன்னரும் மந்திரியுடன் கூடி, மலர்வனம் சென்று மாட்டிக் கொண்ட அப்பெண்மணியிடம் அவள் யாரென்று கேட்க தான் ஒரு தேவ கன்னியெனவும் இந்திரனுக்காக மலர் கொய்து செல்ல வந்த ஏழுபேர்களில் தான் மட்டும் மூலிகைச் செடிபட்ட காரணத்தால் தேவருலகம் செல்ல இயலாமல் போய்விட்டதெனக் கூற, இனி இதற்கு நாம் என்ன செய்ய வேணுமென மன்னன் கேட்க, அதற்கு அந்த தேவகன்னி, இப்புவியில் யாரேனும் ஒருவர் அரிவிரதமெனும் ஏகாதசி விரதத்தை கடைப்பிடித்தவர் அதனால் கிடைக்கும் பலனை எனக்கு அளித்தால் தான் நான் மீண்டும் தேவலோகம் செல்ல இயலும் எனக் கூறினாள். அதற்கு மன்னன், ''அரிவிரதமெனும் ஏகாதசி விரதமென்றால் என்னவென்றே எங்களுக்குத் தெரியாது. அப்படியிருக்க அந்த விரதம் இருந்தவரை எவ்வாறு அறிவது?'' எனக் கன்னியிடம் கேட்க அவளும் ''கவலைப்படாதீர்''. உனது ராணியின் தாதியான அமிர்தவல்லி என்பவளை கோபத்தினால் ராணியார் அடிக்க அதனால் வேதனை அடைந்த அந்தத் தாதி அமிர்வல்லி நேற்றை தினம் இரவெல்லாம் ஆகாரம் ஏதும் புசித்திடாமல் மாதவனை வேண்டியழுதவாறு இருந்த துவாதசியான இன்று அரசியார் மன்னித்ததன் காரணமாக மனம் மகிழ்ந்து ஆகாரம் சாப்பிட்டுள்ளாள். இதுவே ஏகாதசிவிரதம் ஆகியது. ஆகவே அந்த அமிர்தவல்லி, தன்னையும் அறியாமல் தானிருந்த அந்த ஏகாதசி விரதப் பலனை எனக் களித்தால் நான் வானுலகு செல்வேன்'' எனக் கூற, மன்னரும் அந்தத் தாதி அமிர்த வல்லியை அழைத்து வரச் செய்து ஏகாதசி விரதப் பலனை தேவகன்னிக்கு அளிக்கச் செய்ய அதன் காரணத்தால் தேவகன்னியும் வானுலகிலிருந்து தேர் வர ஏறி ஏகினாள்.

இந்த அற்புதத்தைக்கண்ட மன்னன் மந்திரியிடம், ''அறியாமல் செய்த அரிவிரதமெனும் ஏகாதசிப் பலன் இவ்வாறு இருக்குமெனின் நாமும் அந்த விரதத்தைக் கடைப்பிடித்து பலன் என்னவாகிறது என்று காண்போம்!'' எனக் கூறினான். பின்னர்

இந்த ஏகாதசி விரதத்தை எவ்வாறு கடைப்பிடிப்பது என்பது பற்றி அறிந்துகொள்ள வேண்டி, குலகுருவாகிய வசிஷ்ட்டரை வரவழைத்தான். வந்த வசிஷ்ட்டரும் மன்னருக்கு ஏகாதசி விரதம் அனுசரிக்க வேண்டிய முறைகள் பற்றியும் அதனால் கிடைக்கும் பலனைப் பற்றியும் தெளிவாகக் கூறினார்.

மக்கள் மட்டுமின்றி பட்டணத்துப் பிராணிகளும் கூட விரதமிருக்க வேண்டும். அவ்வாறு விரதமிருக்க இயலாதவர்கள் நாட்டை விட்டே வெளியில் சென்றுவிட வேண்டுமென மன்னர் அறிவித்து விட்டார். அவ்வாறே மக்கள் அனைவரும் அரிவிரதமாகிய ஏகாதசி விரதத்தைக் கடைப்பிடித்ததால் எமனுலகிற்கு எவரும் செல்லாது நேரே சொர்க்கலோகம் சென்றடையத் தொடங்கினர். இதைக் கண்ட எமதர்மன், அதன் காரணத்தை அறிய வேண்டி நாரதரை வேண்ட நாரதரும் '' பட்டணத்தில் உள்ளோர் அனைவருமே நாராயணா வென நாவாலுரைத்து - ஏகாதசி விரதமிருந்த காரணத்தால்தான் இவ்வாறு உன் எமபட்டணம் பாழய்ப்போன'' தெனக் கூறினார். இதற்கினி என்ன செய்வதென எமன் வேண்ட ''நீர் போய் பிர்மாவிடம் சென்றுமுறையிடும் - இதற்கு ஏதும் வழிபிறக்கும்'' எனக் கூற, எமனும் பிர்மாவிடம் சென்று தன்பட்டணம் பாழாய்போனதெனவும் அதற்கு காரணம் ருக்மாங்கதராசன் தன் குடிகளுடன் கூட அரிவிரதமிருந்து வருவதே! எனவும் கூறினான். அதற்கு பிர்மதேவன் ''கவலைப் படாதே! அந்த ருக்மாங்கத ராசன் கடைப்பிடித்து வரும் ஏகாதசி விரதத்தைக் கலைக்க அநேக வழிகளுண்டு. நாம் ஆவன செய்கிறோம். நீர் எமலோகம். செல்வீர்'' எனக்கூறி விடையளித்துவிட்டு பலவாறு யோசித்து - ஒரு பெண்ணுருவைத் தோற்றுவித்தார். அவள் பெயர் மோகினி.

இம்மோகினியின் விழியைக் கண்டவர்கள் நிலை தடுமாறினர். பிடியடங்கும் சிற்றிடையாள். வானவப் பெண்டிர் போன்றவள். சந்திர பிம்பம் போல சபையில் தோன்றினாள். பிறை நெற்றி, வில்புருவம், குவளைமலரொத்த நாசி, செம்பவள

வாயிதழ், முத்துப்பல்; தாழம்பூ போன்ற வாய், சங்குக் கழுத்து, பரந்த மார்பு, நாகமொத்த விரல்கள், ஆற்றில் ஏற்படும் சுழி போன்ற தொப்புள் - மின்னலிடை - இப்படிப்பட்ட ஒரு அழகியை பிர்மன் தோற்றுவிக்கிறான். இவளைக் கண்ட தேவர்களின் இடுப்பு ஆடை அவிழ்ந்து தரையில் வீழ்ந்தது. பின்னர் அம்மோகினி தன்னைப் படைத்த காரணம் என்னவென்று பிர்மனைக் கேட்க, அதற்குப் பிரமன், ''நீ போய் மந்திர கிரி மலையில் இரு, அங்கு வேட்டைக்காகக் காட்டுக்கு வரும் ருக்மாங்கத மன்னன் உன்னைக் காண்பான் - அவனுக்கு உன்மேல் காதல் உண்டாகும் படிச்செய்து அவன் கடைப்பிடித்து வரும் ஏகாதசி விரதத்திற்குப் பங்கம் செய்யவேணும்'' என உத்திரவிட்டான். முதலில் மோகினி இது தகாத செயல் என மறுத்துக் கூறினாலும் பின்னர் தான் சென்று அவ்வாறே செய்வேன் என ஏற்றுக் கொண்டு மந்திரகிரி மலைக்கு வந்து சேர்ந்தாள்.

அடுத்து மன்னன் ருக்மாங்கதனுடைய குடிமக்கள் மன்னரிடம் வந்து, நாட்டிலுள்ள பயிர்களை எல்லாம் காட்டு மிருகங்கள் வந்து அழிக்கின்றன. எனவே தாங்கள் வேட்டையாடி அவைகளை அழித்து எங்களைக் காக்க வேணுமென்றுகேட்க, அப்போது மன்னரின் மகனாகிய தர்மாங்கதன் தான் போய் காட்டுமிருகங்களை வேட்டையாடி வருவதாகக் கூறுகிறார். ஆனால் மன்னரே வேட்டைக் காரர்களுடன் கூடி காட்டிற்குச் செல்கிறார். காட்டுப் பகுதியில் உள்ள மந்திர கிரி மலையிலிருந்து இனிய பாடல் ஓசை கேட்பது கண்டு - தேடிச்சென்று மோகினியைக் காண்கிறான். மந்திரி தடுத்தும் கேட்கவில்லை. இங்கு வாமதேவர் எனும் ரிஷி வந்து வாழ்த்துகிறார். மன்னரின் குலப்பெருமையைக் கூறுகிறார். பின்னர் ருக்மாங்கதன், மோகினியிடம் சென்று அவளைப் பலவாறு புகழ்ந்து இருவரும் கூடியிருந்தனர். இவ்வளவு மட்டில் தான் சுவடியில் எழுத்துக்கள் படிக்கக் கூடியதாகவுள்ளது. இதன் பின்னர் சிதிலமான பகுதியில் சிவனார் வருவதாகவும், இருவரும் சேர்ந்து சிவனைத் துதிப்பதாகவும் சிலபகுதிகள் உள்ளது. ஆயினும் முதலில் உள்ள அகவலில் முழுமையான கதை இருப்பதை அறியலாம்.

இவரது நாடகத்தில் காட்சி வர்ணனைகள் மிகவும் ரசிக்கத்தக்கதாக உள்ளது. கதைப்போக்கு மிகவும் சுறுசுறுப்பாக உள்ளது. உவமைகள் பலவும் சுவையாக உள்ளன. ராமாவதார, நரசிம்ம அவதாரக் குறிப்புகள் உள்ளன. படிப்போர் மனத்தில் ''ஐயோ ! முழு நாடகமும் கிடைக்காமல் போய்விட்டதே!'' என்ற ஏக்கத்தை ஏற்படுத்துகிறதென்பது உறுதி.

கிடைத்துள்ள அளவில் இந்நாடகத்தில் மொத்தம் 72 தருக்கள் (பாடல்கள்) உள்ளன. இதற்கு 29 இராகங்களைப் பயன்படுத்தியுள்ளார் நாடக ஆசிரியர்.

1. மணிரங்கு 2. கண்டா 3. கௌரி பந்து 4. முகாரி 5. ஆனந்த பைரவி 6. அசாவேரி 7. துவஜாந்தி 8. பிலஹரி 9. எதுகுல காம்போதி 10. வராளி 11. அடாணா 12. தன்யாசி ஆகிய பன்னிரெண்டு இராகங்களை ஒரே ஒரு முறையும் 1. கேதார கௌளம் 2. சுருட்டி 3. குறிஞ்சி 4. செஞ்சுருட்டி 5. மத்யமாவதி ஆகிய ஐந்து இராகங்களை இருமுறையும் 1. பந்து வராளி 2. கல்யாணி 3. யமுனா கல்யாணி ஆகிய மூன்று இராகங்களை மூன்று முறையும் 1. சங்கராபரணம் 2. சாவேரி 3. மோகனம் 4. தோடி 5. காம்போதி ஆகிய ஐந்து இராகங்களை நான்கு முறையும் 1. சௌராஷ்ட்ரம் 2. நாதநாமக்கிரியா 3. பைரவி ஆகிய மூன்று இராகங்களை ஐந்து முறையும் புன்னாகவராளி இராகத்தை மட்டும் ஆறு முறையும் பயன்படுத்தி உள்ளார்.

இதன் மூலம் இந்த நாடகம் ஒரு நாள் இரவில் நடத்தப்பெற இயலாது என நன்கு தெரிந்துகொள்ள இயலும். எனவே முதல் நாள் நாடகம் தொடங்கி மோகினி வரும் வரையும் இரண்டாம் நாள் மோகினி மந்திரகிரி மலைக்கு வருவதை தொடக்கமாகக் கொண்டு இரண்டாம் நாள் நாடகமும் நடத்தப்பெற வேண்டியுள்ளதெனத் தெரிகிறது.

இந்நாடகத்தில், வசனப் பகுதி மிகவும் குறைவானதாக இருந்த போதும் பாடல்களுக்கு நாடக ஆசிரியர் அமைத்துள்ள இராகங்களின் வரிசை அமைப்பை நோக்கும் போது ரசிகர்கள் சற்றும் சலிப்பு தோன்றாமல் நாடகத்தைக் காணமுடியும் என்று உறுதியாகக் கூறலாம்.



ஸ்ரீ ஹரிநமோத்து சித்தம்

# ருக்மாங்கதன் - இசைநாடகம்

## திருமால் போற்றி

விந்தையுள்ள புவிமிசை ருக்மாங்கதன்
விருப்பமுடன் அரிவிரதத்தை விரும்பிச் செய்ய
அந்தகனும்[1] அரனிடத்தி லறிக்கை தந்திட
அக்ஷணமே மோகினியை அரசன் சேர
தொந்தமுள்ள விரதத்தில் என்னைச் சேராவிட்டால்
துருசுடனே மகன் சிரமதைத் துணிக்கச் சொல்ல
கந்தமலர்க்[2] கரமதினால் கத்தி ஓங்கும் கைபிடித்த
கார்மேகன் தன் கமலம் போற்றி !

1.அந்தகன் - எமன்; 2.கந்தமலர் - வாசனையுள்ள மலர்கள்

## கற்றோர் அடிபோற்றி !

அலைகடலில் பள்ளிகொண்ட அண்ணல் பொற்
பதத்தில்
அனுதினமும் பணிந்திருப்பான் அரசர் முதலான
மறையோர்கள் மனத்தினால் அன்பாகவே துதிப்பான்
புலவருடைய பாதத் திருந்திடும் தூளியைப் புகழ்ந்து
புத்தி மிகவே பெருகும் பொற் பூவதனில் வாசன்
பூசுரன் "சுப்பராயன்" பலவிதங்களாய் இப்பொருளை
பரிசோதித்துப் பார்த்து பணிந்து நாட்டினில் விளங்க
பரம பாகவதரில் பாகவதன் ருக்மாங்கதன்
பணிசெய்த
அரி விரதத்தை மலையாமல் மானிடரும் மற்று
முள்ளோர் களும்
மகிமையாய்க்[1] கொண்டாடவே !
மதுர கவிப் புலவர்கள் மனங்களது மகிழவே !
வணங்கி இந் நாடகம் அமைத்தேனே !

## ஐங்கரன் காப்பு

சீரணி ரவிகுலத்தில் சேர்ந்திடும் மன்னருக்குள்
வீரணி ருக்மாங்கதன் மேவிய சரித்திரம் பாட
ஏரணியாக ஏகாதசியின் கதையைச் சொல்ல
வாரணி ப்ரணவக்கரன் மலரடிக் காப்பதாமே !

.....

வானவர் தொண்டன் ருக்மாங்கதன் கதையைச்
சொல்ல
வண்டமிழ் உரைக்கும் ஐங்கரன் காப்பதாமே !

1.மகிமை - பெருமை

## வேலவர் காப்பு

கடல்தனிற் கண்வளர்ந்த கார்மேக வண்ணமூர்த்தி
குடல் தனிற் குவலயங்கள் கொண்டவர்[1] ஏகாதசி
நடையினின் உரையாய்ப் பாடி நாடகம் தனைச்
செய்ய
விடை கொண்ட விமலர் பெற்ற வேலவர்
காப்பதாமே !

## வாணி போற்றி !

இச்சையுடன் கவிவாணர் ஏகாதசிக்கு இசைந்த தொரு
பிரபந்தங்கள் செய்தார் கோடி
மச்சமிலாதவர் பாதமலர்த் தாளினையே நாளும்
வணக்கமுடன் கைகுவித்து மனத்தினாலே
அச்சமுடனுரைத்த தமிழுக் கருள் புரிந்து
பட்சமுடன் பதம் வைத்து
உச்சிதமாய்ப் புலவர்கள் உகந்து வியக்க
உரைத்திடவே வாணிபதம் உன்னினேனே !

## அவையடக்கம்

இட்டமுடன் வெண்டிரையில் இகழாத
அண்ட சராசர மெல்லாம் உண்டு
வட்டமிடும் தரணிதனில் மறைந்து வாழும்
மயாவனார் மலரடியைப் பூசை செய்து
திட்டமுடன் [2]மனுக்கலெல்லாம் ஏகாதசி தவசாக
விருத மிருந்த கதையை சாகரத்தில்
விட்ட துளியதுபோல் இவ்வுரையைச் சேர்க்க
மிகுந்த கவிப் புலவோரை வேண்டினேனே !

1. குடல் தனிற் குவலயங்கள் கொண்டவர் என்பது மண்ணையுண்டு வாயில் ஈரேழு லோகம் காட்டியது பற்றியது.
2. மனுக்கள் - மக்கள்.

## வேறு (இதுவும் அது)

சதிரான வேதமும் சாஸ்திர மொழியோடுச் சரியான
[1]வியாக் கரணமும் தர்க்க முடன்
சோதிடமும் வேதந்த சப்தமும் தாரணியில்
மந்திர சாஸ்திர மும்
துதியுள்ள வசியமோடு உச்சாடனம் தம்பனம்
துருசான ஆகர்ஷணம்
கதியுள்ள மோகனம் தாடனம் பேதனம்
செருதானமோடு மாரக நிலையும்
மதியுள்ள மதனசரம் பதினெண் புராணமும்
வாதமுறை வாகடங்கள் வகையான
பரத சாஸ்திரங்கள்
மெஞ்ஞான வழிகண்ட கவி வாணரைத்
துதி கொண்டு [2]எட்டோடெட்டு வித்தை
கற்றோரையும்
குணமாக யான் வணங்கி குறியா துரைத்த மொழியில்
குற்றம் வந்தாலும் குணம் கொண்டுநீர் பொறுத்திடீரே!

## ஐந்து பூதங்கள் போற்றி !

வேதமுறை ஆகம புராணம் எல்லாம் விளக்கமாய்
சொல்லுகின்ற விரதத்தின் மேலே
தீதரவே மானிடர்கள் அத்தினத்தில் ஏகாதசிதனை
விரதமாய்ச் செய்தாராகில்
போதரவே பூமிதனில் போக பாக்கியம்
பிரியமுடன் அனுபவித்து பெருக வாழ்ந்து
ஆதரவாய் இக்கதையை காக்கும் [3]தேவர்
ஐவரையும் அனுதினமும் போற்றினேனே !

---

1. வியாக்கரணம் - இலக்கணநூல்
2. எட்டோடெட்டு வித்தை - 64 கலைகள்
3. தேவர் ஐவர் - பஞ்சபூதங்கள் நீர், நெருப்பு, காற்று, மண் (எனும் கரையான்), ஆகாயம் (திருட்டுப் போதல்) ஆகிய வழிகளில் இக்கதை அழிந்துபடாதிருக்க வேண்டுகிறார்.

## பெரியோரைப் போற்றுதல்

காரணமாய் முனிவர்கள் ஏகாதசி கருத்தறிந்த
கவிவாணர் கலந்து கூற
ஆரணம்[1] சேர் அவணியுள் மன்னர்கள் ஏற்றும்
ஆதவனார் குலத்துதித்து அரசானாக
தாரணியை ஒரு குடையின்கீழ் அரசாண்ட
தயவுள்ள ருக் மாங்கதன் சரிதை கூற
அடியேனும் பெரியோர் தமைப் போற்றி செய்து
ஞாபகமாய்ப் புகலுகி றேன்.

.....

பேறு பெற்ற பெரியோர்கள் [2]பீடுடைய அரிகதையைப்
பூவுலகத்தில்
சீருடைய கவிவாணர் அநேகம் கோடி செய்த
அரிகதையாம்
திரையினுள் ........ சுப்பராயன் சொன்ன கவி
தமிழுரையை
தேசமெல்லாம் அறிஞரும் புலவர்களும் அறிந்து
பாதம் ... அடிபணிந்தேனே !

## தோடயம்

ராகம் : கண்டா தாளம் - சாயு

விசய கணபதி அருளால் வேண்டிடவே
[3]நசையும் ஏகாதசி விரதம் இக்கதையைப் பாட
ஜெய! ஜெய!

.................................................................

1. ஆரணம் - யானை; 2. பீடு - பெருமை. 3. நசை - நன்மை

அசையாத பரப்ரம்மம் அட்சரக் கருப் பொருளை
ஆசையாய் வணங்கி அடியிணைக்
கைதொழுதேன் ஜெய! ஜெய!
அவனியோர் போற்றித் துதிக்க [1]அஷ்டாட்சரப்
பெருமை அரசாளும் மன்னர்
ருக்குமாங்கத ராசன் சரித்திரத்தைப் பாட
ஜெய! ஜெய!
கணமுடைய பெரியோர்கள் கருத்துடனே
இதைக் கேட்க
இனமுடனே கண்டா ராகம் ஜெய! ஜெய!
சரணம் செய்திடும் தாசன் உரைக்கின்ற தமிழை
தயவுடன் ஒப்பவே கருணை புரிந்து
[2]கடாட்ச மாகியதே!

**தசாவதார சரணம்!**

ஓதும் வேதத்தை ஓதித்து விடத்தினில் ஓடி
அசுரனைக் கூடியே வாது புரிந்தவன்
மதத்தை[3] அடக்கியே மச்சமாய்
அமரரும் அசுரரும் அமிர்தம் கடைகையில்
பூசுரர் மலை தனையடியில் சுமந்த கூர்மாவதார
சேவடி தினமும் சிறக்கவே எனை!
ராக்ஷஷ கணத்தினால் அவனியை
சொற்படி அடக்கவே - விசுவ
பூமியை விரித்தருளும் ஆதிவராகன் மகிமை
என்றென்றும் என்று எடுக்கவே!
செங்கண் ..... செய்ய சொர்ண தூறது[4] தோன்றியே!
சங்கரன் பதம் சேர் ஸம்வர்கர் உரைத்த நாமமும்
சிந்தையில் வேண்டியே அண்டம் பலவாய்

1. அஷ்ட்டாட்சரம் - நாராயணாய நமஹ: ஓம் நமோ நாராயணாய
2. கடாட்சம் - அருள் ; மாவலி - மகாபலிச் சக்கரவர்த்தி
3. மதம் - கர்வம்
4. செங்கண் செய்ய சொர்ண தூறது - நரசிம்மன் பற்றியது

அவர்க்குதவியாய் பின் அறிவை போல்
முதல் அகலக் காலிட் டாய்
[1]மாவலி மதத்தை அடக்கியே வர
வாமனராய் வந்து களித்திட்டாய்
இனிய அவனி அழியவே வேள்வியை யழித்து
அரசர்களைக் கருவறுத்த பக்தி நிலை
நிறுத்தவே பரசுராமன் தனைக் கருதி
மனத்தினில் இருத்தவே!
ஆதி முனிவர்கள் அமரரரசர் வேள்வியை அழித்து
அசுரர்களை வதைக்கவே
சோதி சீதா மணாளன் சேவையைத் தினமும்
சிந்தையில் துதிக்க வே!
தேர்ந்த வெகு உத்தரன் சிசுபாலன் கம்சன்
சேர்ந்தவர்களை சம்கரிக்கவே
அந்த [2]மாமடுவில் ஏறும் கிருஷ்ணனை
அறிந்தே மனத்தினில் தரிக்கவே!
பாரிலே மிலேச்சர்கள் பார்ப்போர் எடுக்காமல்
பாரம் பெருக்கிட தேறியே!
காரணமாகிய கல்கி ரூபத்தை கருதியே மனத்தினில்
கூறியே ஆகமத்துடன் உன் அடியில் பணிந்திட
அமரர் தேவர் உன்னியவன் அடியே
சரணம் ! சரணம் !

.............................................................

1. மாவலி - மகாபலிச் சக்கரவர்த்தி
2. மாமடு - காளிங்க மடு

## மங்களம்

ராகம் : சௌராஷ்ட்டிரம் தாளம் : ஆதி

மாயவர்க்கு மங்களம்
வதுவை வளர்த்தவர்க்கு மங்களம் !
தஞ்சை எனும் தாரணியில்
தழைத்து செழித்து வளர்
கஞ்ச நகர் வேதியர்க்கு மங்களம் !
அண்டர் முனி வேதியர்க்கு
அன்பாய்ப் பணிகள் செய்யும்
தொண்டை மண்டலத் தோர்க் கெல்லாம்
மங்களம் !
தீரன் ருக் மாங்கதனுக்கும்
தோகை சந்தியா வல்லிக்கும்
பாலன் தர்மாங்கதனுக்கும் மங்களம் !
இக்கதையை செய்பவர்க்கும் எழுதிப் படிப்பவர்க்கும்
தீர்க்கமுடன் கேட்பவர்க்கும் மங்களம் !
நாடகம் செய்த சுப்பராயன் சொற்களுக்கும் மங்களம் !
பட்சமுடன் நான்முகனைப் பரிவுடன் நினைக்கின்ற
சந்தத மாக நாடக சௌராஷ்ட்டிர ராகம் பாட
மங்களம் !

.....

## கணபதி வருகிற விருத்தம்

வெற்றிகள் மிக உண்டாக ... மானிடர்கள்
பக்தியாய் மலரெடுத்து பரிவான பூசை செய்து
நிருத்தியமாம் ஏகாதசி நிறைந்த தோர்க்
கதையைக் கேளு !

## தரு

ராகம் : நாத நாமக்ரியை  தாளம் : ஆதி

கணபதி வந்தாரே! சுந்தரமான கணபதி வந்தாரே!
கணபதி வந்தாரே! [1]களபம் திகழ்ந்திட
தனமது சேர்ந்திட தர்மங்கள் நடந்திட
கணபதி வந்தாரே!
அடியாரைக் காக்க யாவரும் மனம் களிக்க
நடை யுரைத்தமிழை நாவலர் துதிக்க
நெடிகிய ஞான முற முடிகிய செல்வமும்
கடுகியே தந்தவர் கருணைகள் புரிந்து
கணபதி வந்தாரே!
விண்ணவர் துதிக்க மேதினி செழிக்க
[2]பண்ணவர் வானவரும் பார்த்துப் பரிமளிக்க
[3]கண்ண னார் இக் கதையை கருத்துடனே துதிக்க
தாரணி யோர் வாழ்த்த கவிகள் மனங் களிக்க
கணபதி வந்தாரே!
மன்னவர் பணி ருக்மாங்கத சரித்திரம்
மானிடர் உரைத்திட
தேசம் [4]பவித்ரம் புண்ணியங்களதி கரித்து
பொருந்திய மாத்திரம் பூவுலகு தனிலே
சாளுவ சித்திரம் எண்ணிய கருமங்கள்
உன்னியே தந்திட
பண்ணிய பாவங்கள் பரிவுடன் பறந்திட
நன்னிலம் நாடிப் பணிந்திட
**நாத நாமக்கிரியை** ராக முகந்திட
கணபதி வந்தாரே!

1. களபம் - நறுமணம்
2. பண்ணவர் - பாம்பணையில் துயில் கொள்ளும் திருமால்
3. கண்ணனார் - முக்கண்ணுடைய சிவபெருமான்
கஞ்ச நகர் என்றது தஞ்சாவூருக்கு கஞ்சநகர் எனும் பெயருண்டு என்பதை மகாபுராணம் மூலம் அறியலாம்.
4. பவித்ரம் - தூய்மை

சூத்திரப் பிராம்மணர் சபைதனில் வருதல்

## குருக்கள் வருகிற விருத்தம்

மேனியில் நீருபூசி விதமுடன் கை கள் தட்டி
ஊணியே அஞ்செழுத்தை உவந்துமே உரைத்துக்
கொண்டு
காணியும் நம்முடைய தென்று கையினில் [1]தளிகை
கொண்டு
மேனியைப் பூசை செய்ய வகையுடன்
குருக்கள் வந்தாரே!

தரு

ராகம் : பந்துவராளி தாளம் : அட

கூறிய குருக்களிதோ வந்தார் - அமைந்த
காரிய குருக்களிதோ வந்தார்
ஆரிய குருக்களய்யர் அன்புடன் பூசை செய்ய
[2]வாரீச மலர்கள் கொய்ய வந்துமே பணிகள் செய்ய
எத்தனை கோவிலை நான் தான்
ஒருத்தனாய் பூசை செய்குறேன்
தத்துவமாய் பெண்டு பிள்ளை
தனது நிலை என்ன சொல்ல
ஆரியன் கால் கை எல்லாம் வலிக்க
கண்டபேர் மனம் சலிக்க
தாயாதியர் எனைப் பழிக்க
தலங்கள் எங்கும் செழிக்க!
ஆரிய துத்திமுனை பட்ட தல புராணம் கொண்டாடி
பாந்தம் என்முறை என்றோடி பந்துவராளிராகம் பாடி
ஆரிய குருக்களிதோ வந்தார்.

1. தளிகை - இறைவர்க்கு அளிக்கும் உணவு வகை
2. வாரீச - வாசனை பொருந்திய

## அகவல்

தோன்றினார் சூரிய குலந்தன்னில்
சீறணி உலகில்
அண்டர்கள் போற்றும் அயோத்தி மாநகரை
கொண்டதோர் குடைக்கீழ் குவலயந் தன்னில்
தொண்டர்கள் பணியும் சூரிய குலத்து தித்த
மன்னருக்குள்ளே மகிழ்ந்த ருக் மாங்கதன்
தன்னுடைய தேவி சந்தியா வல்லியும்
வயிற்றினில் பிறந்த மதியுள்ள பாலன்
மெய்த்திறமாய் மகிழ்ந்து எல்லோரும்
விதிசா புரத்தை விரும்பியே ஆண்டு
[1]சதிருடன் மந்திரி தளகர்த்தருடனே
மன்னர் மண்டலீகர் வரிசையாய் நிறைந்து
சொன்ன தொரு கட்டியம் திறமுடன் கூற
மன்னன் ருக் மாங்கதன் மகிழ்ந்து கொண்டாடி
பூமியில் மனுக்களைப் பிரியமுடன் ராசன்
தாமிடமாகத் தளர்ச்சி யில்லாமல்
ஆறில் ஒருகடமை[2] [3]அடவுடன் வாங்கி
சாரியாய் மிருகங்கள் சத்துரு வில்லாமல்
வேங்கையும் பசுவும் வெகு நேசமாக
பொங்கரவத்துடன் பிரியமுடன் கீரி
பூனையும் கிளியும் புகழ்ந்துடன் வாழ
ஆனதொரு புவியை அரசாளுகையில்

விண்ணவரெல்லாம் மெய் மலர் தூவ
பண்ணவர் அனைவரும் பரிந்து கொண்டாட
கின்னரர் கூடி கீதங்கள் பாட
நிர்ணயமாக நிறைந்ததோர் கொலுவில்

1. சதிருடன் - பெருமையுடன்
2. அடவுடன் - முறையாக , 3. கடமை - வரிப்பணம்

அந்தணர் பெரியபோர் ஆசீர் கொடுக்க
சந்ததமாக தருமங்கள் நடக்க

இப்படியாக இருக்குமன்னாளில்
மைப்படாச் சந்தியாவல்லியாள் தனக்கு
பாங்கிய ரான பாவையர்க் கெல்லாம்
ஓங்கிய கன்னி உயர்ந்தவள் தாதி
மெய்யடியாக விடுதியில் பணி களை
[1]தபரிதம் செய்த தாதியின் நடத்தையை
சந்தியாவல்லி தானவளறிந்து
விந்தைசேர் பாங்கியை விரும்பியே அடிக்க
அடியினால் தானே அங்கம் நொந்து
படியது கடந்து பட்டணம் தனிலே
அந்தணர் வீட்டருகினில் நடந்து
வெந்தண லொத்த விரும்பிய பசியால்
.......................................
அய்யன் அவரைப் பரிவுடன் துதிக்க
மங்கையர் மொழியை மாயவனறிந்து
அங்கணை யிருந்த அறிவாற் சிறந்தவன் தன்னை
இங்கிதமாக ஏல ......................
பொங்கியே மனுக்கள் புவிதனில் இருக்க
மாதவன் மனத்தினில் மகிழ்ச்சியாய் நினைந்து
தாதியாள் தனக்கு தகுந்த [2]சாலோகம்
அக்ஷய மென்ன ......................
.................... த்திடார் அரியும்
பக்ஷமதாகப் பாங்கியர் இருக்க
பார்தனிலெங்கும் பகலவன் உதிக்க
தாரக பூவையாள் சந்தியா வல்லி
தாதியில்லாமல் ..... ..............
.......... ........ ............ ......

1. தபரிதம் - தவறாக
2. சாலோகம் - நற்கதி

தாதியை யேகி க்ஷணத்தினில் பாங்கியை
ஆதரவாக அழைத்துவா வென்ன
தாதியும் வந்து சதிருடன் மனையில்
பாலுடன் அன்னமும் பாவையர்க் களித்து
செயலுடன் பணிகளும் செய்தவளிருக்க
இந்திரன் பதியினில் இசைந்த பூங்காவில்
கந்தமா மலர்கள் கருதியே யில்லாமல்
மங்கையர் சொன்ன வசனமே கேட்டு
பொங்கியே மனதில் [1]புரந்தரனிருக்க
நாதங்க ளோதிய நாரதர் தம்மை
போதமா மலர்தனைப் பொருந்தியே கேட்க
மாதவ முனியும் மகிழ்ச்சியா யுரைப்பார்
பூவுலகிற் கெல்லாம் புகழ் ருக்மாங்கதன்
காவல் பதியில் கண்டதை அவர்க்குரைக்க
அம்மொழி அறிந்து [2]ஆயிரம் கண்ணன்
செம்மையாய் அப்சர ஸ்திரீகளை அழைத்து
அப்போது கன்னியர் அவனியில் வந்து
சேம மிப் படியே .. சேர்ந்திடு மலரை
அற்புதமாக அவர் எடுத் தேக
இப்புவியினிலே இசைந்த பூங்காவில் ஒப்பிய
மலர்களை ஒரொன்று மில்லாமல்
...... .......... ...... சேதியை
சீக்கிரம் உரைக்க அது கேட்டு மன்னன்
அமைச்சரோடுரைக்க
பதிதனில் காக்கும் பாதிகா வலரை
சதிரினில் அழைத்து சாற்றினார் அரசன்
கெதியுடன் கேட்டு கீர்த்தி யுண்டாக
[3]அடவியுள் முழுவதும் [4]சடுதியில் சுற்றி
அவனி எல்லாம் ஆராய்ந்து பார்க்க

1. புரந்தரன் - இந்திரன்
2. ஆயிரம் கண்ணன் - இந்திரன்
3. அடவி - காடு. 4. சடுதி - சீக்கிரம்

எவரும் இல்லை என்றுரைக்க
கவனமாய் உரைத்த சொல் கேட்டுமன்னன்
விதிவசந்தானோ வேதனார் சூதோ
மதியது மயங்கி மன்னவர் நிற்க
புதுமை யுண்டாக பூபாலனிடத்தில்
சதிர் பெரும் நாரதர் சதிரினில் வந்து
கோல மாமுனியைக் கோமகன் கண்டு
மாலையாய்க் கன்னி ................
மனதினில் குறையை வகையுடனுரைக்க
இனமுடன் முனியும் இன்பமாய்க் கேட்டு
வானவர் இந்திரன் மங்கையர் வந்து
ஆனதோர் வல்லார் அறிந்துமே எடுத்து
இந்திரன் தனக்கு யியலுடன் கொடுத்து
சொந்தமா யுந்தனைத் துதிகளும் செய்தாரென்று
அந்த சொல் கேட்டு இன்பமாய் மன்னன்
குழறிய[1] மனது குளிர்ந்து பூபாலன்
அண்டர் மா முனியே அருள் மலர் தன்னை
விண்ணிலிருந்து விரும்பியே வந்தெடுக்கும்
கன்னியர் ... .... .... காண
உன்னிதமாய் உரைத்திடுமெனவே
நாரத முனியும் நலமுடன் உரைப்பார்
பார்தனில் வந்திடும் பாவையர் தம்மை
யேரவை ... .... யியுமைக்கு
இன்பமாய் பார்க்க கோர்வையாய் வித்தை[2]
கொடுத்திட முனியும்
காவலன் வாங்கிக் கருத்துடன் விதையை
ஆவலாய் மன்னன் அமைச்சரைக் கேட்க
நாவலர் துதிக்கும் நந்தவனத்தில்
மேவியே வித்தை விதைத்திட்டார் உகந்து
வித்து முளைத்து விளங்கிய வனத்தில்

1. குபறிய - கவலையுற்ற
2. வித்தை - விதையை

தத்துவ மாய் வனமெங்கும் சதிருடன் படர்ந்து
இப்படியாக இருக்கும் அந்நாளில்
மைப்படா கன்னியர் மகிழ்ந்த தோர் காவில்
மலரது எடுக்க மகிழ்ச்சியாய் இறங்கி
வனந்தனில் இருக்க பூண்டைத் தானவள் மிதிக்க
ஆறுபேர் கன்னி ஆகாச மேக
பாரினில் ஒருத்தி பரிவுடன் ஏங்க
தோட்டக் காரன் தெய்வ கன்னிகையின்
தாட்டீக வேசமொடு திருடக் கண்டு
மன்னனோ டுரைக்க மகிழ்ச்சியாய்க் கேட்டு
அன்னவர் காவில் அடவுடன் வந்து
கன்னியைக் கண்டு களித்திடு மன்னன்
உன்னியே வானகமேகு மென் றுரைக்க
விண்ணில் நானேக விளங்குமுன் மனையாள்
கன்னியர் தாதி கருத்துடன் இருந்த
ஏகாதசியில் இருந்த தோர் விரதத்தை
நாகரீகமாக நங்கை எனக் களித்தால்
இந்திரன் சபைக்கு ஏகுவேன் என்று
சந்தமாக தாரிழை சொல்ல
கேட்டதோர் மன்னன் [1]கிலி யெய்தி
ஏகாதசி விரதத்தை ஈயவே சொன்னார்
வாட்ட மில்லாமல் மங்கையாள் தாதி
தாட்டீக விரதத்தை தாரை நீரளிக்க
அப்போது தெய்வ அருளாளவர் தமக்கு
[2]புட்ப ஹாரம் தந்து பிரியமுடன் உகந்து
சம்பிரமாய் விண்ணில் சுருக்குடன் நடந்தாள்
அதுகண்டு மன்னர் அதிசயத்துடனே
புதுமை என்றெண்ணி
பூவையர் தாதி புத்தி பூர்வமாய் அரிவையர் இருந்த
கருத்தினில் பலனைக் காண வொண்ணாது
[3]சுபுத்தியாய் விரதத்தை சிதராமல் இருந்தால்

1. கிலி - பயம்; 2. புட்பஹாரம் - பூமாலை
3. சுபுத்தி - நல்லறிவு

பரத்தில் இனிய பலனை பார்க்கலா மென்று
குலகுருவான குணமுள்ள வசிஷ்டரை
செய்தியாய் அழைத்து செப்பிய மொழியால்
உத்திரவு கொண்டு உறுதியாய் மன்னனை
பரதேசமுள்ள [1]பரான்னியர் தமக்கு
தசமியில் மனம் சேர்ந்தொரு வேளை
பட்சமில்லாமல் விரதம் தன்னை
உபவாசமாக உறுதியாய் இருந்து
தவசாக இரவில் [2]சாகரணம் செய்து
சூரிய உதயத் துவாதசி தன்னில்
பூஜிதமாகப் போஜன மருந்திட
காரியர் காமுகர் நாளோரை யறியார்
வாரியாய் பேரிகை வகையுடன் அடித்தார்
அந்தந்தப் படியே அவனியி லுள்ளோர்கள்
சொந்தமாய் விரதத்தை சிதராமல் இருந்தார்
அந்தகர் தமக்கு அலுவலில்லாமல்
மந்தனமாய் மறலியர் இறையவனிடத்தில்
விந்தையாய்ப் பணிந்து விருப்பமாய் உரைப்பான்
பூலோகம் தன்னில் பிறந்திடும் பிராணிகள்
சீலமாய் ஏகாதசியின் விரதத்தை
கோலமாய் இருந்து குறைக ளில்லாமல்
மாலுடைய பதத்தை மருவியே அடைய
வேதனே உந்தன் விதிப்படி தானோ!
ஓதினேன் குறையை உரைக்கிறேனிப் போது
[4]தென்னரசன் மொழியை சந்திர சேகரன் கேட்டு
சொன்ன தோர் [5]மறலியின் துயரம் நீக்கி
அன்னகர் தமக்கு அனுப்பினார் எமனை
மன்னவர் ருக்மாங்கதன் மனத்தை
[6]பின்னகம் செய்ய பிரமனார் நினைந்து

1. பரான்னியர் - வேற்று நாட்டவர்
2. சாகரணம் - விழித்திருத்தல், தூங்காதிருத்த்ல்
3. அந்தகர் - யமன். 4. தென்னரசன் - யமன். 5. மறலி - யமன் .
6. பின்னகம் - தீங்கு, இடையூறு.

கன்னியை ஆக்க அகத்தினில் நினைக்க
நன்மையாய் எடுத்து செகங்கள் மோகிக்க
அண்டர் தம் மனதில் அன்புடன் எடுக்க
கொண்ட மோகினியைக் குவலயந் தன்னில்
வேண்டிட பூபன் விதிசாபுரத்தில்
மண்டலமா ளும் மன்னவ னிடத்தில்
சென்று நீ சிறப்புடன் கூடி
மருவியே மனத்தை மயங்கிடச் செய்து
அரி விரதம் தன்னை அழித்திட வேண்டி
மந்திராசலத்தில் வரிசையாய் இருந்தாள்
பந்தமுமாய் மன்னன் பரிவுடன் வருவான்
அந்தமாய் அவனை அன்புடன் நினைந்து
விந்தையாய் விரதத்தை விரும்பியே அழிப்பாய்
என்ற உரைகேட்டு இசைந்த மோகினியும்
அண்டனார் அருளை அன்புடன் பெற்று
மன்றில் வளரும் மந்திர கிரியில்
காவலன் திகைத்து கருத்துடன் இருக்க
ருக்மாங்கத னுடைய நிறைந்த தோர் புவியில்
பக்குவமாய் மிருகங்கள் பயிர்தனை அழிக்க
வேந்தனும் கேட்டு வெகுண்டெழுந்து - தன்
சந்ததியான தர்மாங்கதனுக்கு பட்டமும் கட்டி
பாராளுமென்று திட்டமும் செய்து
திறமுடன் வனத்தில் வேட்டையாடவே வேந்தனுமே
மேட்டுமையான மிருகங்களைத் துரத்தி
தாட்டீகமாகத் தனித்திருக்கும் வேளையில்
[1]தேட்டுமையால் வந்த வாமதேவரைப் பணிந்து
தன் மனதுரைக்கத் தகுந்த நன் முனியும்
உண்மையாய் இவ்வுரை கேட்டு அதற்கு உரை தனைச் சொல்ல
அந்தமாய் மன்னன் அகமது மகிழ்ந்து
மந்தர கிரியின் மலையடி தன்னில்

1. தேட்டுமை - பெருமை

விந்தையாய் மன்னன் வகை தகவுடனே
[1]கந்த மூலங்களால் களைத் திருந்து
இப்படியாக இருக்கக் கண்ட வேளையில்
செப்பிய கீதம் செவிதனில் கேட்டு
மன்னவன் மலையில் வரிசையாய் ஏகி
கன்னி மோகினியைக் கண்டு மோகித்து
அதிரூபமான அரிவையர் தமக்கு
சதிருள்ள மன்னன் சம்மதம் உரைத்து
[2]காந்தருவமாகக் கலியாணம் பண்ணி
மங்கையொடு ராசன் மலையை விட்டிறங்க
சங்கையாய் அரசர் சரசமாய் இருக்க
பங்கமாம் பல்லியும் பாதத்தை தொடவே
மங்களமான வசனமும் அறிந்து
நிறைந்த மோகினியாள் நினைவது கலங்கி
சேர்ந்திடும் பதியை போற்றி யன்புடனிருக்க
இப்படியாக இருக்கு மந்நாளில்
செப்பிய தேசத்தின் சிறந்த இந்நாளென
ஒப்பிய பேரிகை உவந்தவர் அடிக்க
ஒப்பியே ராசன் விரும்பியே கேட்டு
மங்கை மோகினிக்கு வகையுடன் உரைப்பான்
நங்கையே இந்நாள் நானுனைச் சேர்ந்தால்
பங்கமே கண்டாய் பரமனார் விரதத் திற்கு
கன்னியே என்னால் கலவியே செய்ய
எண்ணமுடனே இசையா தென்றான்
மோகினி கேட்டு மொழிந்திடும் மன்னனை
ஏகுவீர் என்று இருத்தியே சொல்வாள்
சத்திய மொழியால் சாற்றினாய் முன்னாள்

1. கந்தமூலங்கள் - காட்டில் கிடைக்கும் காய், கனி, வேர்கள்
2. காந்தருவமாகக் கலியாணம் - காதல் திருமணம் - உற்றார் உறவினர் எவருமின்றி காதலர் தாமிருவரும் தனித்து மணம் செய்துகொள்ளல்

உற்றது போலும் உறுதியைக் கண்டேன்
மிகுந்திடும் உரைகளால் மோகினியாள் [1]எள்ளி
[2]துண்டரீக மாகச் சொல்லியே நடக்க
அரசறிந்து உலகில் அரசாளும் மைந்தன்
[3]சதிரினிலிருந்து தானவன் எழுந்து
ஓடியே வந்து உரைத்த மோகினியாள்
ராசனை உரைத்த நல் மிலா மொழியைக்
கூவி என் தந்தையைக் குறைகள் சொல்லாதே
பாவி என்றுரைத்தால் பாவமும் நேரும்
மாதாவே உந்தன் மனதினில் குறைகள்
மீளாது இருந்தாலும் என்னிடம் உரைத்தால்
அரசாளும் மன்னர்க்கு அன்புடன் சொல்லி
அரிவையுந்தன் மனம்போல் நடப்பார்
அப்பாரும் தானென்று சொல்லியே அவளடி
பணிந் தவனேக!
மன்னவன் உகந்து மைந்தனோ டுரைப்பான்
மண்டலம் புகழும் மால் விரதந் தன்னை
துண்டரீகம் சொன்ன துர் மதியா ளிவளை
கண்டு நீ அடிக்கக் காரிய மல்லாது
சென்றிடத் துரத்தி சீக்கிரம் வாவென்ன
மன்னவன் மொழியை மைந்தனும் கேட்டு
அன்னை மோகினியை அழைத்தவ னுரைப்பான்
பெற்ற தாயாரின் மனையில் பிரியமுடனேகி
உற்ற மோகினியாள் உரைதனைச் சொல்ல

..........

1. எள்ளி - நகைத்து மரியாதைக்குறைவாகப் பேசுதல்
2. துண்டரீகமாக - இரக்கமில்லாமல் கடினவார்த்தைகளைப் பேசுதல்

3. சதிர் - சபை, அவை

பல்லியும் பாதத்தைத் தொடவே என்பது கல் ஒந்தியாய்க் கிடந்த பெண்ணுக்கு சாபவிமோசனம் அளித்த கதை - (நாரத புராணத்தில் உள்ளது.)

சித்தமும் கலங்கி சிந்தையில் தேர்ந்து
தத்துவமாகத் தானவள் உரைப்பாள்
அரிவிரதம் தன்னை அழிக்க வொண்ணாது
பிரியமுடன் எனக்கும் பெறுமை உண்டாகும்
உறுதியாய் நினைந்தால் உரைத்துத் தருவேன்
அம்மொழி கேட்டு அரிவை மோகினியாள்
நன்மையாய் விரதத்தை நடத்தினா லெனக்குன்
கண்மணியாகும் காதலன் சிரசை
செழுமையாய் இருவரும் சேர்ந்து கொய்து
தந்திட எனக்குச் சம்மதி என்றாள்.
சந்தியா வல்லி தானவள் கேட்டு
மைந்தனை வதைக்க மாயமோ உனக்கு
சிந்தையுள் நீ புகுந்து செப்பினா யன்றோ.
அள்ளிய செம்பொன் அளிக்கிறேன் உனக்கு
வல்லியே உரைத்த சொல் மறந்திடாய் எனவே
மோகினி கேட்டு மிகுந்த கோபத்துடனே
வேகமாய் உரைகள் மொழிந்திடும் வேளையில்
தாயுரை கேட்டு தர்மாங் கதனும்
நேய மில்லாத நங்கயைப் பணிய
தொண்டனாய்ப் பணிந்த சிறுவன் பால்
வாடியே நான் [1]வரச்சே என் மாதாவிடம் சென்று
பாடியே மொழியால் அழிக்க வொண்ணாது என்று
உரையே கேட்டு உண்மையாய் யானும்
துரையே என் சிரத்தை துணிவுடன் [2]கொய்தே
கரத்தினில் ஈந்தால் கவலையில் லாமல்
பரத்தினில் சேர் விரதத்தை பதிதனில் மன்னன்
திருத்தியே செய்யும் தினமதி லென்னைச்
சேர வேண்டாம் என்று செப்பினேன் புதல்வா
இம் மொழி கேட்டு இசையா மனத்தினளாய்
செம்மை யில்லாமல் [3]தெறிப்புடனுரைத்தாள்

1. வரச்சே- வரும்போது; 2. கொய்து - வெட்டி
3. தெறிப்புடன் - கோபமாக

அம்மொழியாலே அவள் மனதறிந்து
நன்மையாய்ப் புவியில் நடக்குறேன் என்றாள்
தர்மமாய் நடக்கவே தயவுடன் கேட்டு
[1]வர்ம மில்லாமல் மனதுடன் உரைப்பாள்
பேராதரவுடனே பொருந்தியே செய்வேன்
மன்னவனுக்கு வஞ்சனை செய்தால்
தன்னவர் போற்றியை தேவர் ஒப்பாரே!
பொய் மொழி உரைத்தால் பொறுக்குமோ பூமி!
வெய்யவன் ஆதவன் விண்ணிலேற வாயிற்று
என்றவன் மேவியுரைக்க இசைந்த மோகினியாள்
குன்றிய மனதும் கோபமும் தளர்ந்து
மோகினி சுதனை மிகவும் கொண்டாடி
சேயிருந் தானுன் தேசத்தோர் மெச்ச
வாயிரு வழிதவறா மன்னவரிடத்தில்
தாய்மாருடனே தர்மாங்கதன் வந்து
நேயமாய்ப் பணிந்து நின்றானருகில்
அப்போது மன்னன் [2]ஆக்கிரமத் துடனே
[3]சுப்பிரமாய்த் தன்னுடை தேவியைப் பார்த்து
ஒப்புமையாக உரைத்திடு மொழியை
[4]மைப்படா சந்தியா வல்லியும் கேட்டு
பக்தியால் அண்ணலைப் பணிந்தவளுரைப்பாள்
வெற்றிகள் பூண்ட வேந்தனே கேளும்
இத்தலந்தன்னில் இசைந்த மால் விரதத்தை
புத்தியில்லாத பூவை மோகினியாள்
அழித்திட ஊழியம் செய்யுவே னென்று
உரை தனைக் கேட்டு உறுதியாய் அந்தப்
பரத்தினில் அவளைப் புணராமல் போனாய்
தன்னுடன் அரசு செய்யும் சுதனுடைய சிரத்தை
துணித்தவள் கையில் [5]சுருக்குடனீந்தால்

1. வர்மம் - விரோதம்.2. ஆக்கிரமத்துடனே - முறையாக.
3. சுப்பிரமாய் - நேரிடையாக 4. மைப்படா - குற்றமில்லாத.
5. சுருக்குடன் - சீக்கிரமாக.

மாலவன் விரதத்தை மறவாமல் நாமும்
தீமையேது மில்லாமல் செய்யலா மென்றாள்
அதுகேட்டு மன்னவன் அரிஅரி என்று
புதுமையே ஈதென்று பூமியில் வீழ்ந்து
செவிதனில் கையை திறமுடன் வைத்து
புவிபுகழ் மன்னன் புலம்பியே வீழ
தர்மாங்கதனும் தந்தையோ டுரைப்பான்
சேமமாய் அரிவிரதம் செய்திடும் மன்னா
மோகினிக் குறைத்த மொழிப்படி தேவர்
யாகமாம் விரதத்தை உரைத்திடப் போமோ
அச்சமில்லாமல் அன்னையும் நீரும்
பக்ஷமாய்[1] எந்தனைப் பார்த்துநீர் மகிழ்ந்து
மெச்சிய வாளால் விரும்பி என் சிரத்தை
இச்சையாய் மோகினிக்கு இன்பமாய்க் கொடுத்தால்
தோகையர் மனது குளிர்ந்திடு மெனவே
ஓதிய மைந்தன் உரைதனைக் கேட்டு
மன்னவன் சுதனை மார்போ டணைத்து
உன்னிதமாக உச்சியை மோர்ந்து
சொன்ன சொல் தவறாது சிறுவனே செங்கோல்
பின்னமில்லாமல் புவிதனை ஆண்ட
மைந்தனை வதைக்க மனமது துணிந்து
வேந்தனும் [2]சுதனை வேண்டுவ தென்ன வென்று
பாந்தமாய்க்[3] கேட்க பாலகன் உரைப்பான்
அவணியில் மனுக்கள் அரி விரதம் செய்து
குவலயந் தன்னில் அகலாமல் நானும்
பிரியமுடன் சேர பெருவர மளித்து
நேசமாய் என்னை நேரே நீ வாளால்
கூசாமல் கொய்து குணமுடன் சிரசை
மோகினி கையில் விரும்பியே அளித்து
வேகமாய் விரதத்தை வேண்டிடு மென்றான்
காவலன் கேட்டுக் கவலையும் நீங்கி

1. பக்ஷமாய் - அன்புடன். 2. சுதன் - மகன்.
3. பாந்தமாய் - அன்புடன்.

ஆவலாய் மனதில் [1]ஐந்து மூன்று ரைத்து
கையினால் வாளைக் கடுகியே ஓங்கிட
மெய்யதாய் தேவர் மூவரும் வந்து
வெட்டாதே என்று வேகமதாக ராசன்
ஓங்கிய கரத்தைத் தொட்டவர் தடுத்து
தேவர் மகிழ்ந்து மட்டிலா வரங்கள் மன்னனுக் கீய
அப்போது ராசன் அரிதனைப் பணிந்து
சுப்பிரமாய்த் தேவர் திருவடி தன்னில்
அடியேனும் சேர அருள் செய்ய வேணும்
முடி கீழ் வீழ வேண்டினன் எனவே
கருணா கடாக்ஷன் கருத்தினில் மகிழந்து
மருவியே ருக்மாங்கத னோடு சந்தியாவல்லிக்கும்
தகுந்த வரம் தந்தருளி
இன்பமாய் அவர் களும் அவன் துணை அனைவரும்
காயாம்பூ[2] மேனியில் கலந்தவருகந்து
நேயமாய் [3]சாயுட்ச நிலைதனில் நிறுத்த
தந்தையும் தாயும் சாயுச்சியம் சேர
மைந்தனுங் கண்டு மகிழ்ச்சியாய் உரைப்பான்
எந்தனைக் கூட இசைந் துந்தன் பதத்தில்
வந்திடச் செய்ய வரமது அளிப்பீர்
என்ற உரை கேட்டு இருக்கும் ஆண்டவர் அரசர்
குன்றிய மனது குளிர்ந்தவ ருரைப் பார்
பாலனே நீயும் பார்தனை ஆண்டு
காலனார் காணாத காட்சி யாய் நடந்து
வேலையில் பற்றியுறு திருமால் பதம்
அந்தத்தில் மகிழ்சியாய் அடைவாய் என
என்ற உரை கேட்டு இதயமும் குளிர்ந்து
அன்று மாமுனியை அன்புடன் பணிந்து
நன்றது வேண்டும் நல்மனம் கொண்டான்

.................................................................................................

1. ஐந்துமூன்று - எட்டு; ஓம் நாராயணாய நமஹ : தேவர் மூவர் - சிவன், விஷ்ணு, பிர்மா . 2. காயாம்பூ - கருநீல நிறமுடைய மலர், காயாம்பூ மேனியன் - திருமால் 3. சாயுட்சம் - சுவர்க்கம்.

அப்போது விண்ணில் அமரர்கள் மகிழ்ந்து
ஒப்புடன் மலரை உண்மையாய்ச் சொரிந்தார்
மோகினி கண்டு [1]வெதும்பியே மனத்தில்
வாகுள்ள வேத மறையவ னிடத்தில்
தன் குறை சொல்ல [2]சதுர் முகன் கேட்டு
நங்கை மோகினிக்கு நான் முகருரைப்பார்
ஆசையாய் மனுக்கள் அரிவிரத மிருந்து
வாசமாய் துவாதசி மகிழந்தன்னம் புசித்து
பகல் தனில் நித்திரை பாங்குடன் செய்வோர்
சுகமுடன் அவர்கள் செய்திடும் விரதத்தில்
பலத்திலுனக்குப் பதினாறி லொன்று
நலம் பிறவாமல் பதம் நாடுவாய் என்று
மற்று முண்டாகிய வானவருடனே
சுற்ற மாந் தேவ [3]துந்துபி முழங்க
பக்தர்களுடனே பரிமீதிலேறி
ஏறியே அவரவர் ஏகிட்ட பின்பு
அவனியில் மனுக்களரசன் ருக்மாங்கதன்
தவசினால் அரிவிரதம் தவராமல் இருந்து
பலனைப் பார்த்துப் பதின்மடங்கதிகமாய்
நலமுடன் விரதத்தை நாடியே செய்தார்

ருக்மாங்கத ராசன் நிறைந்திடும் கதையை
பக்குவமாய்ப் பாடினோர் பரிந்து கேட்போர்க்கும்
திக்கிலே எமதூதர் களைக் காணக்
கட்டியே புவியில் கணமுடன் நாடகம்
ஆடியபேர்கள் அவனியை ஆண்டு
நாடிய தோர் ஆகாசம் [4]நாரியர் போகம்
தேடிய சேயரென திரளாய் உகந்தபின்
மாறாத செல்வம் வருந்தியே லெட்சுமி
நாரணன் பாதம் நாடி இக்கதையை

1. வெதும்பியே - மனம் வருந்தி 2. சதுர்முகன் - நான்முகன், பிர்மதேவன் 3. துந்துபி - ஒரு இசைக்கருவி 4. நாரியர் - பெண்கள்

சேர்ந்திடும் உரைதனை செவிதனில் கொண்டு
சிறந்திடு நாவில் செப்பிய கவிஞர்
வளர்ந்திடும் மாயன் மலரடி தொழுது
பொருந்திடும் இக்கதையை புகலலுற்றேன்!

## கட்டியக்காரன் வருகிற விருத்தம்

திட்டமுடன் குவலயத்தை செலுத்தும் மன்னன்
தினகரனாம் குலந்தன்னில் சேர்ந்த பாலன்
இஷ்ட்முடனே நேர் கொலுவாய்[1] .......
பத்தில் .... ரவேழு .... பதினாலு உலகம் மெயிக்க
சட்டமுடன் மனுக்கள் தடித்து வாழ்க!
தவசாக விரதமிருக்கத் தகுந்த பூபன்
கட்டளையால் சேய்யும்... சனவாசல்
காவலனாம் கட்டியக் காரன் வந்தாரே!

தரு

ராகம் : கல்யாணி தாளம் : அட

கட்டியக் காரன் வந்தான் - பதமுடன்
கட்டியக் காரன் வந்தான்
அஷ்டதிக்கும் புகழ்படைத்த காசி
அம்புவியாளும் மகிபன் பிரகாசி
இஷ்டஜனங்களுக்கிசைந்த வாசியெனவும்
......... .........னமாங்கள்பேசி (கட்டியக்காரன்)
முத்துத் துளபை முண்டாசின்மேல் வைத்து
மோகன மாலைக்கு முத்துவடம் சேர்த்து
சித்தம .. .. திற் சீத்து.
தேசத்தி லவனை.... ... பேரசிகைந்து
(கட்டியக்காரன்)

1. கொலு - அரச சபை
ருக் - 4

மண்டலமெங்கும் புகழ் ருக்மாங்கராசன்
வாசலைக் காக்கும் மகிழ்ந்த
தொண்டர்களைக் கொண்டார் யிச் சிறந்தநேசன்
தேவர் ... ... மூவர்க்கும் யாவர்க்கும் தாசன்
(கட்டியக்காரன்)

பட்டையும் பிரம்பும் பாங்காக மடித்து
பாரை சீரமைத்த பரமனை அடுத்து
பாசமாகவே யெல்லோரையும் தடுத்திட
**கல்யாணி** ராகங்கள் படித்திட.
(கட்டியக்காரன்)

...

### மந்திரி வருகிற விருத்தம்

[1]சென்னியில் பதந்தன்னைச் சேர்ந்திடும் கரத்தை
உன்னித வச்சிராங்கிக் கிசைந்ததோர் பணிகள்
பூண்டு
பொன்னணி [2]பூஷணங்கள் பரவியவில் தோளணி
யணிந்து
ருக்மாங்கராசன் மந்திரிதான் வந்தாரே!

...

தரு

*ராகம் : நாதநாமக்கிரியா* தாளம் : ஆதி

மந்திரி வந்த விதம் பாரும் - சபைதனில்
மந்திரி வந்தாரிதோ பாரும்
மந்திரி சபையில் வந்தார்
மன்னனும் மனம் மகிழ்ந்தான்

1. சென்னி - தலை. 2. பூஷணங்கள் - ஆபரணங்கள்

தந்திரமாகவே அரவ சீதோ .......
விந்தையாய் அரசை யாளும்
வேந்தனார் அருகினில்

*(மந்திரி வந்தார் ...)*

காதில் குண்டலமணிந்து
கருத்துள்ளோரைக் கண்டுமிகப் பணிந்து
ச.. .. .. .. .... .... .... துணிந்து
சூரருடனே முனிந்து
சாது ஜனங்களுக்கு ஏதும் குறையில்லாமல்
போது அறிந்து வெகுநீதி உரைக்கும் அந்த

*(மந்திரி வாந்தாரிதோ! )*

கத்தி கடாரி[1] பிடித்துக்
கதிர் குலத்துக் காவலன் தனையடுத்து
வேத்தி விந்து பிடித்து
வேத முறை தான் படித்து
முத்து மணி கட்டி ...............
முகத்தில் மீசை துலங்க
சுற்றி மன்னரிலங்க - சூரிய குலம் விளங்க
மந்திரி வந்தானிதோ பாரும் !
[2]அஷ்டதிக்கிலுள்ளோர் அந்தனர் அறிந்தே
அரிகதை கொண்டாட [3]யிஷ்ட சனங்கள் நாட
இரவி போல் முடிசூட கட்டளைப் படியே நாடி
கதிரவன் குலம் தழைக்க இசையதிலிரவோர் நாடி
நாத நாமக் கிரியா பாட

*(மந்திரி வாந்தாரிதோ)*

...

1. கடாரி - கட்டாரி எனும் கத்திவகை. 2. அஷ்டதிக்கு - எட்டுதிசைகள் 3. இஷ்டசனங்கள் - உறவினர்கள்

**விருத்தம்**

நாலிரண்டெட்டு திக்கும் நலமுடன் கட்டியாளும்
மாலுடையரசன் [1]வேலை சூழுலுலக மெல்லாம்
வெற்றி மாமகுடம் சூடி
சாலவே அரம்பையர் மெல்ல சரிவரக் கவரி வீச
கோலமாய் இருக்கும்ராசன் கொலுவிருந்த விதம்
கண்டீரே !

...

தேசமன்னரெல்லாம் தினமும் போற்றி செய்ய -
ராசன்
திவ்விய சபையில் வந்தாரே !

**கதா நிருத்தம் - தரு :**

ராகம் : கேதார கௌளை தாளம் : சாப்பு

பொறுமை உள்ள அந்தப் பூபாலன்
சிரசில் பூசக்கரக் குடை தன்னைப் பிடிக்கவே !
வறுமி யென்று மறுமன்னர் மனதில் கொண்டு
வகையாய்க் காணவே நின்று துடிக்கவே பற்பம்
.... தடித்து செங்கோல் தரித்தத்தரணி யெங்கும்
தெரிந்து மேளவாத்தியம் அடிக்கவே
புகழ்ந்த பூ சுரரெல்லாம் பொருந்தியே யெங்கும்
புதுமையாக வேதம் படிக்கவே
ராச உதார குழலியான சந்தியாவல்லி யாளீன்ற
தாயன் தர்மங்கதன் கூடவே ஆலிங்கனம் தர
அமராதிபன் என்ன அனைவரும் மகிழ்ந்து
கொண்டாடவே!
ஆதரவாகவே அருகில் கன்னியர் நின்று
அன்பாய் வெஞ்சாமரம் போடவே !

..............................

1. வேலை - கடல்

கோதையர் களெல்லோரும் குணமாய் மனதில்
கொண்டு
கேதார கௌளத்தைப் பாடவே
(ராசன் ......)

**விருத்தம்**

வந்தாரே ருக்மாங்கத ராசன்
மந்திரியுடனே
சிந்தையில் மகிழ்ச்சியாக தேர்ந்த செங்கோல்
கோணாமல்
[1]பந்தியாய் மன்னர்சூடி பரிவுடன் கட்டியம் கூற
விந்தையாய் இருக்கும் ராசன் மேவிய சபையில்
வந்தார்

தரு

ராகம் : சங்கராபரணம் தாளம் : சாபு

ராசன் வந்தாரே ருக்மாங்கத ராசன் வந்தாரே!
ராச ராச னெனும் ராசப்ரதாப ராச துரந்தர
ராச ருக்மாங்கத ராசன்
(ராசன் வந்தாரே !)

பாவையர் நடனம் செய் பரந்த
பாரினில் மும்மாரி பெய்ய !
நாவலோர் மகிழ நாட்டிலுள்ளோர் புகழ !
ஆவலாய் அரியைத் துதி செய்ய!
(ராசன் வந்தாரே!)

[2]ஆலத்தி பார்த்தெடுக்க - வெகு
அந்தனர் ஆசிர் கொடுக்க
கோல மாமறலி கொண்ட கொலு வழிக்க .

1. பந்தியாய் - வரிசையாக. 2. ஆலத்தி - ஆரத்தி

கோவிந்த பசனையைக் கூறி மனம் களிக்க
(ராசன் வந்தாரே!)
மருவியே மன்னர்க்கு பணிமார் அருகில்
மந்திரிமார் கட்டியம் கூற!
திருமால் அருளினாலே சென்ம சாபல்ய மாக
தேசத்திலுள்ளவர்கள் செயமொழியைக் கூற
(ராசன் வந்தாரே!)
மேளவாத்திய மடிக்க மேலே உள்ளவர்கள்
வந்துதுதிக்க
சாலமான சங்கிதங்களும் படிக்க
**சங்கராபரணராகம்** ராச சபை மெச்ச
(ராசன் வந்தாரே!)

தரு

ராகம் : சாவேரி	தாளம் : ஆதி

ராச ராசனெவர்க்கும் ராசனான
ருக்மாங்கத ராசன் சபையில் வந்தாரே!
தேசாதிபதிகள் தினமும் போற்றி
திக்கு களிலுள்ளோர்கள் வந்து
சிறப்புடன் வாழ்த்திட
(ராசன் வந்தாரே!)
தார் குழலாள் சந்திய வல்லியும்
தானதாக சப்த பதியை ஆளும்
தர்மாங்கன் மகனாக
பாரிலுள் ளோர்க்கும் மன்னன் பரிந்திடும் [1]தேனுவாக
பார்த்த மங்கையர்க்கெல்லாம் [2]பஞ்ச
பாணனுமாக
(ராசன் வந்தாரே!)

1. பஞ்சபாணன் - ஐந்து அம்புகளையுடைய மன்மதன்
2. தேனு - காமதேனு

மார்பில் பதக்க முடன் மணி வகையுமணிந்து
வைரிகளைச் செயித்து வல்லமைகள் புரிந்து
ஆயிரம் கண்ணர் கத்தி மரமென நினைந்து
அய்யனான் மால்மூவரை அனுதினமும் பணிந்து
ஆலத்திகள் அனேகம் மாதர்கள் எடுக்க
அந்தணர் பெரியோர் ஆசீர்வாதம் கொடுக்க
சாவேரிபாடி ரம்பையர் சரிநடனம் அடுக்க
சாலவே ராச மதனனை சபைதனிலே விடுக்க
(ராசன் வந்தாரிதோ!)

ராசா விருத்தம்

செங்கதிர் குலத்திற் கெல்லாம்
சேர்ந்த மந்திரியே கேளாய்
திங்கள் மும்மாரி பெய்து
செழித்திடும் உலகம் தன்னில்
மங்கல மாகுமந்த
மனுநீதி தவறிடாமல்
பொங்கியப் புகழ் உண்டானால்
புதுமையை உரைத்திடாயே!

தரு

ராகம் : மணிரங்கு — தாளம் : ஆதி

தேசம் தனில் [1]செனித்து செழிக்கும்
பிராணிகளெல்லாம்
தினமும் சுகமோ மந்திரி!
மாச மும்மாரி பெய்ய மானிலத் தோர்கள் உய்ய
தாசர் பணிகள் செய்ய
வீசும் கெந்த வாடை நேசமான சாடை
வாசமலர் ஓடை

1. செனித்து - பிறந்து. 2. சேர்திரு - திருசேர் - செல்வம் நிறைந்த

கேசரி இளமேடை நேசம் மாதவ முனிவர்கள்
மறையவனனைவரும் மகிழ்ந்து இருக்குறாரோ!
நாதன் அருளாலுரை நாவு தவறிடாமல்
நடந்து வருகு ராரோ !
சாதிமுறை தப்பாமல் தரணி மனுக்கலெல்லாம்
சரியாக ஒருக்காலும் பரியாமல் இருக்கிறாரோ!
ஓதும் பறவைகள் பேதகமில்லாமல் தீதுசெய்யும்
மிருக
சாதிகள் அதிகமில்லாமல்
(தேசம் தனில்...)
சேர்திரு வளர்பூமி தேவாலயங்க லெல்லாம்
சிறப்புற தினமும் பூசையும்
முந்தியில் பரிசம் முறையில் குறையில்லாமல்
நீதி தவாறா வரும் அரசையும்
சிந்தையில் யாருமொரு தேசபக்தியினால்
செழித்து மன்னர் கொடுத்து களித்து
வரும் ஓசையும்
விந்தை விதிசையில் சிந்தை அறியாமல் வந்து
குறைகளால் மணியைக் குறியாமல்
(தேசம் தன்னில்....)
தினகரன் குலம் தன்னில் சேர்ந்த மன்னவர் முன்னாள்
செய்யும் முறைமையினாலே சனமும் அனுதினமும்
கருதி யெவரானாலும் கண்ட உகரம் போல
மனமும் உகந்த மன்னர் மணிரெங்கு ராகத்தை
மறவாமல் அனுதினமும் உரையானதுகளா லே
அனைவரும் மகிழ்ந்து இனமொடு புகழ்ந்து
[1]கனகத்தில் மிகுந்து தனத்தினில் உயர்ந்து
(தேசம் தன்னில்.....)

1. கனகம் - பொன்.

ராசா விருத்தம்

கட்டியம் கூறிநிற்கும்
காவலா சொல்லக் கேளாய்
இட்டமாய் இக் கொலுவிலிருந்து
ஏகாந்த மானோம் இப்போது
நட்டின மாகவே தான்
நாடக சாலை தன்னில்
கட்டளைப் படியே யந்த கன்னியை அழைப்பாயே!

விருத்தம்

வண்ணமாய் மன்னன் கொலுவிருந்து
[1]மறுமன்னர் பணிந்து போற்ற
மின்னலிடையாள் பாவை மேல் விழி மிரட்டிக்
கொண்டு
பொன்னணி பூஷண்ங்கள் பிரியமுடன் தரித்துக்
கொண்டு
கன்னியர் கீதம் பாடி கருத்துடன் தான் வந்தாரே!

தரு

ராகம் : சுருட்டி தாளம் : ஆதி

நாடக சாலைப் பெண் வந்தாள் - நடன மசைய
நாடக சாலைப் பெண் வந்தாள்
நாடக சாலைப் பெண்கள் நடனம் செய்யவே தங்கள்
ஆடவர்க்கிவள் கண்கள் அழகிலிவளே திங்கள்
(நாடக சாலை...)
வெகுவாக மனம் கூடி விதிசாபுர வேந்தனையே
கொண்டாடி

1. மறுமன்னர் - வேற்றுநாட்டு அரசர்கள்

தகுமான விதம் தேடி தைரியம் தன்னிலே மோடி
[1]சொகுசாய் மன்னனை நாடி சுருட்டி ராகத்தைப்பாடி
(நாடக சாலை...)

விருத்தம்

அவணியில் கீர்த்தி பெற்ற ஆஸ்தான சந்தோஷி கேளாய்
கர்மமாய் நாட்டியத்தைக் கருத்துடன் பார்த்தோமிப்போ
புவனங்களெல்லாம் மெச்ச புதுமையாய் யுத்தம் செய்ய
எவரும் நிகரிலா மல்லரை யிச்சணம் அழைப்பிப் பாயே!

விருத்தம்

மறையவன் அருளினாலே மண்ணும் விண்ணும்
அதிரவேதான்
நிறையவே நாமமிட்டு நெடுகிய பனை போல் கை கால்.
முறையுடன் மல்லுக் கட்டி மொழிந்திடும் உரைகள் பேசி
தரையினில் யுத்தம் செய்யும் சாரணர் தான் வந்தாரே!

தரு

கல்லுக் கரடுகள் எல்லாம் கடந்து உருண்டு
உருண்டு யெழுந்திருந்து அப்பாலே
வல்லமை[2] பேசி மகிழ்ந்து கொண்டாடியே
வாசலில் மல்லுக செட்டிகள் வந்தார்
சொல்லு பிசகாத சூரிய குலம் தன்னில்
சோபனமாகவே அமைச்சரும்
வல்லபனாம் ருக்மாங்கத ராசன் மகிபன்முன்
வந்தாரே மல்லுக செட்டிகளும்

..............................................................

1. சொகுசாய் - சந்தோஷம், சௌகரியம், சுகமாக
2. வல்லமை பேசுதல் - தானே சிறந்தவன் என
தற்புகழ்ச்சியாய்ப் பேசுதல்

பல்லைக் கடித்துப் [1]பரக்க முழித்துப்
பார்த்தவர்க் கெல்லாம் பயங்கர மாகவே
அல்லும் பகலும் அடவாய் சண்டை செய்ய
ஆவலாய் மல்லுக செட்டிகள் வந்தார்
நெற்றியில் நிறைய நாமத்தை யிட்டு
நேராய் யிடையில் சல்லடங்கள் தொட்டு
சத்தியமாகச் சவுரியம் மேலிட்டு
சபைதனில் மல்லுக செட்டிகள் வந்தாரே!

### சண்டைத் தரு

ராகம் : மோகனம் தாளம் : சாப்பு

சண்டை செய்தாரே மல்லுக செட்டிகள்
சண்டை செய்தாரே!
சண்டை செய்தார் மெத்த கண்ட வாதத்துடனே
அண்டங்களெல்லாம் அதிர்ந்திடவே மேல்
(சண்டை செய்தாரே ...)
நேராக நேர்ந்து நிகரில்லாமல் பாய்ந்து
பாராளுமன்னனைப் பார்த்துப் பணிவாய் நின்று
(சண்டை செய்தாரே...)

### தாதிகள் வருகிற விருத்தம்

சிந்தையில் மகிழ்ச்சிகொண்டு திருவருள் தன்னை உண்டு
விந்தைகள் மிகவேபேசி மிகுந்ததோர் பணிகள் செய்து
சுந்தரப் பொட்டுமிட்டு செறி குழல் தனைத் தொட்டு
சந்தத மாகத் தாதி சபைதனில் தான் வந்தாளே!

1. பரக்க - பெரிதாக அகலமாக.

தரு

ராகம் : தோடி தாளம் : ஆதி

தாதி வந்தாளே - சந்தியா வல்லியின்
தாதி வந்தாளே !
நீதியுள்ள ருக்மாங்க ராசன் நிறைந்த கொலுவைநாடி
மிகுந்த வகை கொண்டாடி
(தாதிவந்தாளே!...)
காலினில் மெட்டிக் கலீர் கலீர் என
கையில் கண்ணாடி கனக வளை மின்ன
[1]பாலில் சிறந்த பட்டாடை யிடையில் மின்ன
பாரில் எல்லோரையும் பழிப்பாள் இவள் என்ன
(தாதிவந்தாளே!...)
தாதியாள் இவள் எவர்க்கும் சரியான மேட்டி
சாதி பெண்களுக்கு தகுந்த சீமாட்டி
மேதினியில் சந்தியா வல்லியின் [2]வெள்ளாட்டி
மெத்த மயக்குவாள் எவர்க்கும் கண்காட்டி
(தாதி வந்தாளே!...)
அன்னநடை கண்டு அரசரெல்லாம் வியக்க
ஆரும் நிகரில்லை யென்றிவள் சொல்லை செயிக்க வென
கொண்டாடியே, தானே அதிசயிக்க
தத்துவமாம் தோடி ராகமதனைப் படிக்க
(தாதி வந்தாளே!...)

**சந்தியாவல்லி - விருத்தம்**

[3]வளவினில் வேலை செய்யும் மங்கை தாதியே நீ கேளாய்
பல வகையாலே என்னைப் பரிவுடன் நகைத்தாயன்றோ!
குலமுள்ள நடத்தையாலே கூறினாய் வசனமிப்போ
நிலந்தன்னில் அலையும் உன்னை நிமிஷத்தில் அடிப் பேன்
பாராய்!

............................................................

1. பாலில் சிறந்த - பாலைவிட மேலும் வெண்மையான
2. வெள்ளாட்டி - வேலைக்காரி 3. வளவு - அரண்மனையில் பெண்கள் இருக்கும் பகுதி

தரு

ராகம் - மோகனம் தாளம் : ஆதி

தாதி வந்தவளை சந்தியா வல்லி கண்டு தாவினாள் அடிக்க
சூதினாலே நீயும் சொன்ன வேலை செய்யாமல்
திரியும் வகையைக் கண்டு கிரியை அறிவேனென்று
(தாதிவந்தவளை...)
அந்தி பகலாய் நீயும் [1]அடைவாய்ப் பணி செய்யாமல்
அகந்தை வந்தவகை நானறிவேனே!
சிந்தை கலங்க உன்னை சிதறிடவே இப்போது
தேடிப் பிரம்பினால் நாலடி நான் தருவேனே!
விந்தை விந்தையாக மெத்தப் பேசுறாய் என்ன!
வீட்டினில் இருக்காமல் ஓட்ட நானறிவேனே !
(தாதிவந்தாளே! ...)
எட்டியே கூந்தலை யேந்திழையால் கண்டுபிடித்தாள்
மட்டிச் செருக்கி உந்தன் வகையை அறிவே னென்று
வாயில் மோகனம் படித்தாள்
குட்டி குலைத்து நாயின் தலையின் மேற் கொண்டாயே
கூறிய மொழி கொண்டு [2]கோதை தனை அடித்தாளே!
(தாதிவந்தாளே!)

விருத்தம்

வாய்மதம் பேசி வந்த மங்கையாள் தாதி தன்னை
தீயவே சந்தியாவல்லி திறமுடன் பிரப்பம் கோலால்
நோவவே அடித்தாளப்போ நொந்த மேனியில் ரத்தம்
பாயவே அவ்விடம் விட்டுப் பதறியே நடந்திட்டாளே!

......................................
1. அடைவாய் - மரியாதையாய் 2. கோதை - பெண்

தரு

## தாதி புலம்பல்

இராகம் : புன்னாகவராளி　　　　　　　　　　தாளம் : ஆதி

அடித்தாளே சாமி அநியாயமாய்
அடித்தாளே சாமி !
அடித்த உன் அரண்மனையை அந்தப்புரத்தில்
விடுத்தேன் இவள் குறையைத் தொடுத்த
படிக்குண்டானால் துரைகளிடம் சொல்லியே
படுத்த வேண்டிய பாட்டை படுத்தாமல்
இவள் என்னை அடித்தாளே !
என் மயிர் பிடித்தாளே !
வாயில் பல்லைக் கடித்தாளே ! அவள்
கையில் எடுத்த பிரப்பம் கோலால் அடித்தாளே !
என்னே சொல்கிறது !
காலமே எழுந்திருந்து களையில்லாமல்
கணபணி செய்து வந்தேன்
சாலை தனிலே இருந்து என்னைக் கண்டிவள்
சடுதியில் ஓடிவந்து
வாடி வாடி யென்று வகை யொன்றுங் கேளாமல்
[1]மோடியுடனே வந்து மெலியும் எந்தன்னைக் கண்டு
(அடித்தாளே சாமி!...)
தந்தை தாயை மறந்தேன் சந்தியாவல்லிக்கு
தாதியாய் சிறந்தேன்
சொந்தமாய் வீற்றிருந்தேன் திறமுடனே
சேர்ந்த **புன்னாக வராளி**
விந்தையாகப் பாடி வந்த எந்தைனைத் தேடி
(அடித்தாளே சாமி ...)

1. மோடி - ஆசைவார்த்தை கூறல்

### விருத்தம்

அடியினால் புலம்பிக் கொண்டு
அன்னையவள் முகம் பாராமல்
படியது கடந்து மெத்தப் பட்டண மெல்லாம் சுற்றி
துடி துடித்திடவே மெத்தச்செறு பசியாலே சோர்ந்து
முடிகியே மறையோன் வீட்டு விடுதியில் வந்திருந்தாள்
இப்படியாகத் தாதி இருக்கின்ற சமயந்தன்னில்
மைப்படாப் பகலவன் தான் மறைந்திட்டான்
அந்தவேளை
வெம்பியே பசிதாளாமல் வேதனை மனதில் கொண்டு
அற்புதமாகும் அந்த அரிதனைத் துதி செய்வாளே!

### தரு - தாதி புலம்பல்

ராகம் : சௌராஷ்ட்ரம் தாளம் : சாபு

என்ன செய்வேன் சாமி ஏது செய் வேன் சாமி !
எந்தன் கதி இப்படி ஆச்சுதே சாமி
அன்னை சந்தியவல்லி அடித்தாள் என் அங்கம் நோக
ஆரும் எனக்கில்லாமல் போச்சுதே சாமி !
[1]"ஆதி மூலமே" என்ற அபயக் குரல் கேட்டு
ஆதரித்து ரட்சித்த ஆண்டவரே சாமி
சோதனையாகச் செய்த துயர் பட்டது போதும்
சொல்லுகிறேன் காலிங்க தாண்டவரே சாமி
சூரிய குலம் தன்னில் தோன்றும் ராசர் தேவிக்கு
தொடுத்துப் பணிகள் செய்து நின்றேனே சாமி
பாரினில் என்னைவிடப் பாவி ஒருவரில்லை
பாதம் சரணம் செய்தேன் தொண்டனே சாமி !
[2]பண்டு நீ அப் பாண்டவர்க்கும் பத்தினிப் பாஞ்சாலிக்கும்

1. ஆதிமூலமே - முதலைவாயினின்றும் யானையைக் காத்த கதை
2. பண்டு - முன்னொரு நாளில்

பரிந்து ரக்ஷித்தப் பரந்தாமரே சாமி !
விண்ணில் தேவருக்கும் வேதாந்த முனிவர் களுக்கும்
வெற்றி கொடுத்தாயல்லோ சோமா சாமி !
அண்டிய எந்தன்னை நீ ஆதரித்து ரக்ஷித்து
அளித்திடுவாய் ஆயிரம் நாமா சாமி !
தெண்டனிட்டேன் உந்தன் திருவடித் தாமரையை
தினம் என் சிரம் கொண்டேன் சோமா சாமி !
எள்ளுக்குள் எண்ணெய் போல எங்கும் நிறைந் திருந்து
இன்பமாய் கொடுத்தாள் உந்தன் வரம் சாமி
உள்ளம் தனிலே உனக்குகந்த **சௌராஷ்ட்டிர** ராகம்
உறுதியாக உரைத்தேன் சரணம் சாமி !

விருத்தம் - (பொது)

விண்ணவர் புகழ் மேதினி உலகில்
மன்னவர் மடந்தை [1]வசை கொண்டு அடியாள்
அன்னமில்லாமல் அரிதனைத் துதிக்க
கண்ணனும் மகிழ்ந்து காட்சியாய் நின்றார்.

விருத்தம் (பொது)

ஏந்திழையாள் தாதியவள் இந்தவாறு
இரவெல்லாம் மாயனை உளங் கொண்டாள்
காந்த முள்ள பசியடங்கிக் களையும் துறந்து
கதிரவனும் வெளியில் வந்தான் கண்டாள் கன்னி
சேர்ந்திருந்த அமிர்தவல்லி சிதறிடாமல் சீக்கிரமாய்
அவள் வரவே சிந்தை கொண்டு
[2]பாந்தமுடன் அழைத்துவர சந்தியாவல்லிப் பார்த்தருகில்
தாதியுடன் பகர்ந்திட்டாளே !

.................................................................

1. வசை - கொடுஞ்சொல்
2. பாந்தமுடன் - அன்புடன்

தரு - ராணி சந்தியாவல்லி

ராகம் : மோகனம் தாளம் : அட

சகியே அமிர்தவல்லிதனை அழைத்து வாடி சகியே!
விகிதமாக எங்கள் வேந்தனும் சொல்லிய படிக்கு
அகிலத்தில் உன்னைப் போல ஆருமில்லை என்று
(சகியே...)

வேகத்துடனே நீயும் விரும்பி எங்கும் தேட
வெய்யில் கானல் என்னும் மிகவும் சோராமல் தேட
ஆசையாலே அவள் அன்பாய் எந்தனை நாட
அரிவை என்னிடம் வந்து அழகாய் மோகனம் பாட
(சகியே ...)

விருத்தம்

ஏகவே சொன்னதாதி யினமுடன் வெளியில் வந்து
தோகையாள் சந்தியாவல்லி சொன்னபடி வீதியெல்லாம்
நாகரீக நகரத்திலெங்கும் நட்புடன் தேடும்போது
சோகமாய் இருக்கக் கண்டு [1]சுருக்குடன் வாவென்றாளே !

தரு - தாதி

ராகம்: குறிஞ்சி தாளம் : ஆதி

அடி வாடி அமிர்தவல்லி உன்னை அழைத்துவரச்
சொன்னாரடி
துடியாதே உன் துன்பமெல்லாம் தொலைந்ததடி
தோகையரே

........................................................................

1. சுருக்குடன் - சீக்கிரமாக

அடி அக்கா நான் என்ன சொல்வேன் அம்மை
அன்புடன் சொன்னது கேள் :
விடிய ஒரு [1]சாம மென்று என்னை
வேண்டி மிகச் சொன்னாளடி
தேடினேனே தேன் மொழியே உன்னை
தெருக்களெங்கும் தேடிக் காணாமல்
பட்டி நீ யல்லோ பெண் பாவி இன்று
பார்த்தேனடி பாவி கண்ணீராலே:
அரியினுடைய செயலோ தான் அன்னை
அடுத்து சொன்னது கேள்
பரிதாபத்துடன் அவளும் பரிந்தழைக்கச் சொன்னாளடி
மனம் பொருத்து மகராசி என்மேல்
மனதுடனே சொன்ன தெல்லாம்
குணங்குறியால் பார்த்தேனடி
எந்தன் கோமானையே
மனங் குளிர்ந்ததடி அறிந்தறிந்து செய்தாலும் [2]வர்மம்
அகத்தினில் வையே னென்று சொல்லி
குறிஞ்சி ராகம் தனைப் படிக்க அன்னை
கூட்டி வரச் சொன்னாளடி:

விருத்தம்

சொன்னதைக் கேட்டேனோ தான் தோகையே சொல்லக்
கேளாய்
வண்ணமாய்ச் சந்தியாவல்லி வரச்சொல்லியதை நீயும்
இன்னமும் எந்தன் ஆவி இருக்குமோ இல்லையானும்
குன்னமே செய்தேனென்று கூறுவாள் தேறுவாளே!

........................................................

1. சாமம் - இரண்டரை நாழிகை நேரம்
2. வர்மம் - வஞ்சம்

தரு

ராகம் : குறிஞ்சி தாளம் : ஆதி

அடியே சொல்லுகிறேன் கேள் - அடி
அங்கம் பதறுதடி எந்தன்
அங்கம் பதறு தைய்யோ என் செய்குவேன்
துடியேன் இனி நான் ஒரு நாளும்
தோகையே[1] நீகேள் துன்பம் செய்தாளே அவள்
துரைத் தனத்தால் கெட்டுப் போனாள் நானறி வேன்
இதனால் வெகு கீர்த்தியுண்டோ எங்கும் கேள்வியில்லை
படியேன் ஒரு நாளும் பாவி செய்தது
பதறுது என் செய்குவேன் பங்கம தாலே
அவளை விட்டேகிய பின் அன்னமே நீ கேள்
அலைந்தேன் அந்தணர் வீதியெல்லாம்
கபடம்[2] மனதில் வைத்து எந்தனை கண்டித்த பின்
மனவருத்தங் கொண்டு பசியால் பர பரத்துப்
பகல் முழுதும் பார்த்த முகமெல்லாம்
வேற்று முகமென்று அலைந்தேன் அகந் தோறும்
அன்னமில்லாமல்
அருகனும் அலையில் சார்ந்தார் அறிந்து கொண்டேன்
தொலையாத பசியுடனே தோகையே என் செய்குவேன்
துடித்துயிர் அயர்வினால் என் கண்கள்
சோராமல் ஹரி ஹரி என்றுரைத்தேன்.
அன்பா லேதோ அடக்கி வைத்தார்
எந்தன் அவதியெல்லாம்
இனிநான் இருக்க அறியேன்
என்னுடைய தேகம் எரிப்பதல்லால்
ஆரை வெறுபதுண்டோ தெரிந்தே செய்தாளடி

1. தோகையே - பெண்ணே!
2. கபடம் - பொய்மை, வஞ்சகம்

தேன் மொழியே கேள் தெம்பாய் உரைத்தேன்
தெரியவில்லை
குறிஞ்சி ராகம் படித்தால் குணமாதாகக்
கூட்டிவரச் சொன்னதால் குளிர்ந்த தடீ !

...

விருத்தம்

அழைத்த தோர் தாதியோடெ அமிர்தவல்லியும் கூட
தழைத்திட சந்தியாவல்லி தயையாய் வாயிலிற் சென்ற
குழைந்த தோர் வயிற்றைக் கண்டு குணமுடன் தெளிந்துப்
பிழைத்து வந்தாய் நீ யென்று பிரியமுடன் சொல்லுவாளே !

தரு

இராகம் : செஞ்சுருட்டி தாளம் : ஆதி

போனாய் பெண்ணே ! எங்கே !
அங்கம்[1] மெத்த நொந்ததோ
அமிர்தவல்லியே அடித்த போது
பிரிய முள்ள தாய் என் சொல்லையே
குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும் என்பதாலே - நீ
கூறிய வசனமது குணத்தாலே அழைத்ததாலே இங்கே
உற்றது எனக்குச் சொல்ல உந்தனைப் போல
உண்மையான பேர்களுண்டோ
குளிர்ந்தது மனமே சேடியே இங்கே
தப்பில்லாச் சூரிய குலந் தானே மேலே :
(எங்கே போனாய்...)
சைனந்திரி[2] போலெனக்கு சகசமாய்க் கூடி
..........................................

1. அங்கம் - உடல்
2. சைனந்திரி - பாஞ்சாலி திரௌபதி

செஞ்சுருட்டி ராகம் தன்னை, நீ சிறப்பாகப் பாடி
(எங்கே போனாய்...)
தஞ்சமென்று வந்து வளர்ந்தாய் தர்மத்தை நாடி
செஞ்சுருட்டி ராகந்தன்னைத் தயவாகப் பாடி
(எங்கே போனாய்...)

விருத்தம்

மருவியே சந்தியாவல்லி வகையுடன் தாதி தன்னை
சருவியே உகந்த வார்த்தை சகசமாய் சொல்லும் போது
பருகியே வேலை செய்ய பதிந்திட மனமே கொண்டு
கருதியே முன்னாள் போல [1]கனபணி செய்யலுற்றாள்:

**இந்திரன் வருகிற விருத்தம் :**

வானவர் தொழுதுபோற்ற மறை முனியோர்கள் வாழ்த்த
தானவரான அரம்பையர் சரிவர நடனம் செய்ய
தேனுவும் தருவும் நின்று சொற்படி பணிகள் செய்ய
ஆனவர் வெற்றிகொண்டு அமரர்கோன் சபையில் வந்தார்.

இந்திரன் - தரு

ராகம் - சௌராஷ்ட்டிரம் தாளம் - சாபு

தேவலோகப் பாவையர் நடனம் செய்ய பார்த்த
தேவர் மனம் உய்ய
(தேவலோகப் ...)
முத்தினால் குடைபிடித்து மூதுரை வேதம் படித்து

.........................................................
1. கனபணி - பலவிதமான வீட்டுவேலைகள்
2. வேணி - சடை, தலைமுடி

வெற்றியாய் மேளம் அடித்து சென்னியில்[1] மலர் முடித்து
(தேவலோகப் ...)
மாணிக்க முடிப் பிரகாசன் வச்ராயுத விலாசன்
வேணியாள்[2] இந்திராணி நேசன்
மூவருக்கும் உகந்த ராசன்
(தேவலோகப் ...)
இஷ்டமாய் தேவர்கூட தோகையர் விருதுஎடுத்தாட
சட்டமாய் அரம்பையர் நாட **சௌராஷ்ட்ர ராகம்** பாட
(தேவலோகப் பாவையர்....)

**சப்தக்கன்னி விருத்தம்**

பெருமையாய்த் துகில்[3] இடையிற் கட்டி
பூவையர் மின்னல் போலே
சித்தமும் மகிழ்ந்து தேவர் சேர்ந்திடும் பணிகள் செய்ய
வெற்றியாய் அலங்கரித்து விமலனார் இந்திரன் முன்னே
தத்துவமாக சப்த கன்னியர் தான் வந்தனரே!

தரு

ராகம் : கௌளி பந்து　　　　தாளம் : ஆதி

கனக மயமாய் சப்த கன்னியர் வந்தா ரிதோ!
தினகரன்[3] ஒளிபோலத் தோகை வந்தா ரிதோ!
(கனகமயமாய் ...)
ஒய்யாரமான நடையும் உயர்ந்த பணி விடையும்
பொய்யாத மின்னலிடையும் புரியம் சொர்ணக் குடையும்
(கனக மயமாய் ....)
தோரணத் தேவர்க்குச் செல்லி சிறந்த பணிக்கு வில்லி
மாறான மங்கையர் நல்லி மலரினை என்று சொல்லி
(கனகமயமாய்....)

.........................................................

1. சென்னி - தலை 2. துகில் - ஆடை 3. தினகரன் - சூரியன்

மங்காத மலரெடுத்து வரிசை பணி தொடுத்து
சிங்காரத் துகில் உடுத்து தேவர் தன்னை யடுத்து
(கனக மயமயாய் ...)

ஆசார வாசலில் கூடி அமரர் பதியை நாடி
கூசாமல் வனத்திலோடி **கௌளி** பந்தில் பாடி
(கனக மயமாய் ...)

**விருத்தம் - சப்த கன்னியர்**

அண்ணலே போற்றி போற்றி ! ஆயிரம் கண்ணா போற்றி !
உன்னிதமாகுமுங்கள் உகந்த பூங்காவனத்தில்
சென்னியில் தேவர் சூடும் சிறந்திடும் மலருமில்லை
புண்ணியா நாங்கள் கண்ட புதுமையை உரை செய்தோமே !

தேவராசர் விருத்தம் :

தேவர்கள் முனிவர்களுக்கெல்லாம் சிறந்த நாரதரே கேளீர்.
ஆவலாய் சப்த கன்னியர் அருமலர் எடுக்கப் போக
காவினில் மலரில்லாமல் கன்னியர் உரைத்தா ரிப்போ
மேவிய [1]தடத்தில் நீங்கள் முதுமலர் கண்டதுண்டோ !

நாரதர் விருத்தம்

வானவர்க் கரசே கேளீர் வனத்தினில் மலரில்லாமல்
போனது தெரியாதய்யா பெரியோர்கள் [2]மகிமை தானோ
மா நிலமாளும் ருக்கு மாங்கதன் மலர் வனத்தில்
ஆனதோர் மலரைக் கண்டேன் அரிவையரை அனுப்புவீரே !

........................................................................

1. தடம் - பூலோகம் 2. மகிமை - பெருமை

## தேவராசர் விருத்தம்

சதிருடன் பணிகள் செய்யும் சப்த கன்னியரே இப்போது
துதிபெறம் பூலோகத்தில் சிறந்திடும் ருக்மாங்கராசன்
பதிதனில் ஏகி நீங்கள் பனிமலர்த் தனையே கொய்து
நிதியுடன் எந்தன் முன்னே நிமிஷத்தில் வருகுவீரே !

## விருத்தம் - பொது

அற்புதமாகுமந்த [1]அமரேசன் உரையைக் கேட்டு
செப்புதல் அப்படியே செய்ய சிறந்திடும் பரலோகத்தில்
ஒப்பிணை ஏதுமில்லா உகந்த ருக்மாங்கதன் காவில்
தப்பிதமில்லா சப்த கன்னியர் மலர் எடுத்தார் களே !

## தரு - பொது

ராகம் - புன்னாக வராளி தாளம் - ஆதி

சப்த கன்னியர் வந்து தாரணி தன்னில்
சகசமாய்[2] மலர் எடுக்கத் தொடங்கினார் :
பன்னீர் பாரிசாதம் பரிமளம்[3] வீச
பார்த்த மங்கையர் பரிந்துமே பேச
வெற்றியாகவே காவில் விருப்பமுடனே
வெகுவாக மலரெடுத்து
விண்ணில் செல்லவே காத்த காவலர் வந்து [4]கடுகியே தேட-
கருத்தினில் **புன்னாக வராளி** ராகமும் பாட

........................................................................

1. அமரேசன் - இந்திரன் 2. சகசமாய் - தடையேதுமின்றி
3. பரிமளம் - வாசனை 4. கடுகி - வேகமாக

**விருத்தம்**

இந்திர னார் அனுமதியால் சப்த கன்னியர்
இஷ்டமுள்ள பூவுலகில் ருக்மாங்கதராசன்
சொந்தமுள்ள சிங்காரத் தோட்டம் தன்னில்
சிறந்த மலரெடுத்து சேர்ந்த தெய்வ கன்னியர்
அங்கமுள்ள அமரர் கோன்முன்னே வைக்க
அதிசயித்து மன்னவனும் அகமகிழ்ந்து
இந்தமலர் அனுதினமும் யேகி நீங்கள்
எடுத்திடீர் எந்தனுக்கு கொடுத்திடீர்!

**விருத்தம்**

தோட்டக்காரன் வருதல்

பார்த்தவரெல்லாம் வியக்க பருத்ததோர் முகத்தில் மீசை
நேர்த்தியதாகவேதான் நிறையவே நாமமிட்டு
சூத்திரமாக மெத்த சொல்களை உரைத்துக் கொண்டு
காத்திரமாகத் தோட்டக் காரனும் தான் வந்தானே!

தரு

ராகம் - யமுனா கல்யாணி தாளம் : ஆதி

தோட்டக்காரன் வந்தான் சுருக்குடன்
தோட்டக் காரன் வந்தான்.
வாட்டமில்லா மலரை வந்தெடுத்த தாரென்று
கேட்ட மன்னருக்கேகி கேள்விகள் தனைச் சொல்ல
(தோட்டக்காரன் ...)
பாவனையுடனே தான் தலைதனில் பாகுமேல்
கொண்டைகட்டி
ஆவலாய் தேவர்க்கு அமைந்திடும் பூபாலர்
மேவியே காவினில் விருதுடன் காத்திடும்
(தோட்டக்காரன்...)

அண்டர்கள் முனிவர்கள் துதிக்கும் அழகுநிறைந்திடும்
பூங்காவில்
எண்டிசையும் புகழவே இசைந்த பூமுடித்து
**எமுனா கல்யாணிராகம் இசையுடன் படித்து**
(தோட்டக்காரன்...)

விருத்தம் : தோட்டக்காரர்கள்

தேவர்கள் முனிவர்கட்கெல்லாம் சிறந்திடும் ராசகோவே
காவினில் மலரையெல்லாம் களவுதான் செய்தாரய்யா
ஏவியே கெந்தர்வரோ இராக்ஷதர் மாயந்தானோ
கூசியே மலரை யெல்லாம் குறிப்புடன் கொய்தாரய்யா

**விருத்தம் - ராசா:**

சிட்டர் புகழ் [1]இக்குவலயத்தில் சேர்ந்த மந்திரி
செழித்திருக்கும் சிங்காரத் தோட்டம் தன்னில்
திட்டமுடன் மலர்களெல்லாம் [2]சோரம் செய் திருடர்களை
பிடித்திடவே செங் கோலுக் குள்ளான
வட்டமிடும் மாநிலத்தில் மனித ரெல்லாம்
வகையுடனே மலர் எடுத்தது அறிய வேண்டி
கொட்டமிடும் பதி காவல் வீரர் தம்மை
குறிப்புடனே இக்ஷணத்தில் அழைப்பிப் பாயே!

**தலையாறி வருகிற விருத்தம்**

**உச்சியில் கொண்டை கட்டி உயர்ந்ததோர் [3]புரவி யேறி**
**அச்சுதன் செயலால் மன்னன் ஆக்ஞையாய் நடக்கும் காவல்**
மெச்சியே [4]சலாம்போட்டு வீசையை முறுக்கி விட்டுக்
**கச்சையும் கட்டிக்காவல் காரனும் தான் வந்தானே!**

........................................................

1. குவலயம் - பூலோகம் 2. சோரம் - திருடுதல்
3. புரவி - குதிரை 4. சலாம் - வணக்கம் செய்தல்

### தரு - காவல் காரன்

இராகம் : பைரவி தாளம் : ஆதி

பட்டணம் காக்கும் பாதி காவல் காரர்
பாங்குடன் வந்தார் பார்புகழ் சபையில்
பக்ஷமாய் அட்டாங்க நெட்டுடன் கட்டியசீடர்
ருக்மாங்கத ராசன்முன் சட்டமதாகவே
(பட்டணம் காக்கும்......)
சாந்து கஸ்தூரி திலகமிட்டு
சரியான மீசை முறுக்கிவிட்டு
பாந்தமாய் மார்பில் பணிகள் இட்டு
பாகுமே முத்துராயன் தொட்டு
சேர்ந்து பரிவாரங்கள் சேனையர் கோடி
தீர்க்கமாக ருக்மாங்கதன் தனை நாடி
(பட்டணம் காக்கும் ...)
மார்க்கமான மக்களை மிரட்டி
வரத ராக்ஷதாள் போல மிரட்டி
தீர்க்கமாய்க் கண்களை விழித்து உருட்டி
தேசமெல்லாம் முழிப்பாய் சுருட்டி
நோக்கமாய் எட்டு திசைகளதாளும்
ருக்மாங்கதன்
நிறைந்த காவல் காரன் சேர்ந்த சபை விநோதன்
(பட்டணம் காக்கும் ....)
பூமியில் கள்ளரடி மடித்து
பேராதரவாக [1]தனுவெடுத்து
ஓமலாய்[2] மன்னவனை தான்அடுத்து
உச்சிதமாகப் பரி விடுத்து

1. தனு - வில் 2. ஓமலாய் - மரியாதையுடன்,
அடக்கத்துடன்

பீம பாஸ்கர மங்கள புகழ்
பொருந்தும் போற்றியே
**பைரவி** ராகம் தன்னை அறிந்தும்
(பட்டணம் காக்கும் ....)

**விருத்தம் காவல்காரன்**

அய்யனே போற்றி! அடிமையை அழைத்ததேது
கையனே தேவர் செய்த கபட மனைத்தும் அறிவேனோ
மெய்யனே எளியேன் செய்த மிகுந்திடும் பிழைகளெல்லல்
துய்யனே பொறுத்தெனக்கு திருவுளம் பற்றுமையா!

**விருத்தம் - ராசா**

பட்டணம் காக்கும் பரிதி காவலரே கேளீர்
சித்தர்கள் போற்றி செய்யும் சிறந்த பூங்கா வனத்தில்
நெட்டணை மலரையெல்லாம் நினைவுடன் சோரம் செய்த
துட்டரைப் பிடித்து நீங்கள் க்ஷணத்தினில் வருகுவீரே!

**விருத்தம் ராசா - வேறு**

பாங்குடன் மலர் வனத்தில் பதித்த காவலரே கேளீர்
தேங்கிய மலரையெல்லாம் திருடின பேரை யிப்போ
நாங்கள் ஒன்றுடனே கூடி நடந்துமே பிடிக்க வேண்டி
நீங்களும் பக்கம் வந்தால் நிலவரம் தெரியும் கண்டாய்:

**தோட்டக்காரன் விருத்தம்:**

அண்ணலே நீங்கள் என்னை அடவுடன் எங்களோடே
பின்னையே வரவே சொன்னீர் புகழ்ந்திடும் மலருக்காக
முன்னமேசோரம் செய்து மெச்சிய திருடரிப்போ
இன்னமும் வருவார் மெத்த உறுதியாய் பார்த்துச்
சொல்வேன்.

தரு

இராகம் - பைரவி                    தாளம் :

அண்ணன்மாரே என்னை அருகில் வாருமென்றீரே!
போனகர்[1] இந்த திருடர் வந்து அடவியில் மலரைக்
கொய்யுவாரே! கொய்யுவாரே!
எண்ணமில்லாமல் நீங்கள் ஏகி கள்ளரைத் தேடுவீரே! வெகு
இச்சையுடனே மன்னனிடத்தில் கூடுவீரே.
உன்னித மலர் தன்னை உகந்து திருடர் எடுத்தாரோ நீங்கள்
ஓதும் மொழியதனால் எங்கும் கவலை கொடுத்தாரே!
கொடுத்தாரே!
சொன்னபடியே மலர்ச்சோரம் செய்தோரைப் பிடிப்பீரே
வெகு துரிதமுடனே பிடித்தே நின்றிட அடி
அடிப்பீரே! அடிப்பீரே!
அறிந்து மன்னர் தவத்தால் மற்ற வரங்கள்
அளித்தாரே - இப்போ
அவனி திருடர் வந்து அருள் மலரெடுத்து
ஒளித்தாரே! ஒளித்தாரே!
சிறந்த வனத்தில் வர வழி
தேவர்க்கும் தேரியாதே - யிப்போ
திட்டிப்[2] பிடித்தாற்போல திருடர்கள் என்னை அறியாரே!
அறியாரே!
மெய்யதாய் மன்னவனை மேதினியில் மிகக் கொண்டாடி
எங்கும் விளங்கிய பூமலராம் [3]கிரத மானதை நாடி
பைய உலகுதன்னில் பதறாமல் திருடரைத் தேடி
எவர்க்கும் பதியவே மனத்தினாலே பைரவி ராகத்தை
பாடி! பாடி!

........................................

1. போனகர் - திருடித்தின்பவர்
2. திட்டி - திருஷ்டி (கண்ணேறு) படுதல்
3. கிரதம் - சிறப்பு

## விருத்தம்

காவிலினில் மலரெடுத்த கள்ளரைப் பிடிக்க வேண்டி
திவ்விய நாட்டிலுள்ள தடத்தை நானறிவேன் இந்த
பூவினில் [1]நெடிகொண்டு பிரியமுடன் எடுத்த பேரை
மேவியே நீங்கள் தேடி விருப்பமாய் பிடித்திடீரே!

## தலையாரி விருத்தம்

விதிசா நகர் தனையாளும் ருக்குமாங்கத ராசன்
மொழியதனால்
பதிகவெல் வீரரெல்லாம் துதி பெறவே
சிங்காரத் தோட்டம் தன்னில்
சேர்ந்த மலர்த் திருடர்களைத் தேடிப்பார்க்க
பதியிலுள்ள பரிவார சேனையோடும்
படைதிரட்டி ஆயுதங்கள்
பதிணெண் மேளம் [2]கதித்திட வே
தேசமெல்லாம் கலக்கம் தீர
கலங்குவார் கவனமதிலோங்கு வாரே!

## காவல்காரன் - தரு

இராகம் - சங்கரா பரணம் தாளம் : அட

நாட்டினில் நாம் செய்யும் நீதியை ராசரறிந்தாலிச் சேதியை
வீட்டில் என்னடா தூக்கம் பொழுது
விடிந்து போச்சுதென்று ஏக்கமா
மன்னவன் கற்பனை தப்பியே இந்த
மானிலத் தோர் மனம் ஒப்பியே - அவர்
சொன்னபடிக்கு நலம் ஒப்பியே மலர்
சோரம் செய்தோர்களை செப்பியே

.................................................

1. நெடி - வாசனை 2. கதித்திட - ஒலித்திட

அந்தமாய் மன்னர்க்கு ஆதியில் இப்பிழை
ஆரோ செய்தார் இந்தச் சோதனை
விந்தையாய்க் கள்ளர்க்கு வேதனை செய்ய
மேவி பிடிக்கிறேன் சாதனை
கொம்பு தம்பட்டத்தைக் கூறடா அந்த
கோடித்தெருவினில் பாரடா
கோட்டைக் கொத்தளத்தைத் தாவடா - வெகு
கோபத்துடன் ஓடி மேவடா
வாட்டமில்லாமலே கூவடா - வெகு
மாயப் பொடிகளைத் தூவடா
தாரணியாளும் மன்னர் கீர்த்திதனைத் தானே
தலைமேல் கொண்டேனே - வெகு
வேத்தியை இரவினில் கள்ளரை [1]நத்தியே - இந்த
உலகமெல்லாம் எங்கும் சுற்றியே
கண்ணுக்குள் கள்ளரைக் காணோமே ! - இந்தக்
காவலன் ஆக்கிணைக் குள்ளானோமே !
உள்ளது உரைத்திட வேணுமே - ராசர்க்கு
உண்மையாக மனம் [2]கோணுமே
தெய்வச் செயல் என்று சொல்லுவோம் - நாம்
செய்யும் தொழிலாலே வெல்லுவோம்
மெய்யதான கடைவீதியில் நாம்
மேவி பார்த்ததொரு சேதியை
உற்றதோர் மன்னனை நாடியே - இப்போ
எல்லோரும் ஓட்டமாய் ஓடியே
தத்துவமகாக் கூடியே தானே
**சங்கராபரணம்** பாடியே !

.................................

1. நத்தி - அருகில் சென்று
2. கோணுமே - கோபம்

### விருத்தம் - காவல்காரர்

நாட்டினில் கீர்த்திபெற்ற ரவிகுலத்தரசரே கேளீர்.
வாட்டமில்லாத காவில் மலர்தனைச் சோரம் செய்த
தீட்டிய மனிதரில்லை தெய்வ சோதனையே யல்லால்
மேட்டுமையாக என்னை வேந்தனே ஆக்கிணை செய்வீரே!

### விருத்தம் - ராசா

உலகினில் காவலரே உங்களை ஆக்ஞை செய்தால்
பலனுள்ள மலரே எனக்குப் பரிவுடன் வருமோ சொல்வீர்
குலமுள்ள வானவர்க்கு குறைகளும் செய்தேனோ நான்
தலையினில் விதியை நொந்து சாதிப்பேன் போதிப்பேனே!

### விருத்தம்

ஆதவனார் குலத்துதித்த ருக்மாங்கதராசன்
அன்புடன் சிங்காரத் தோட்ட.ந்தன்னில் - பேர்
ஆதரவாய் மலர்களெல்லாம் சோரம் போக
பூவுலகில் வேதியர்க்குப் பிழை செய்தேனோ
தாரணியுள்ள பெரியோர்கள் சாபம் தானோ
சோதனையாய் அய்யன் விதித்த விதியோ வென்று
சோருவான் மந்திரியுடன் கூறுவானே!

### தரு

இராகம் : காம்போதி — தாளம் : ரூபகம்

மாயமோ அறியேன் மந்திரி என்ன
மாயமோ அறியேன்

..........................................

1. மேட்டுமை - மேன்மை
2. ஆக்கிணை - தண்டனை

மாயமோ அறியேனே மனத்திலொன்றும் குறியேனே
(மாயமோ ....)
விந்தையாய் வனத்தில் மந்திரீ இந்த மேவிய தினத்தில்
பந்தமாய் குறித்தானோ பார்த்து மலர் பறித்தாரே!
(மாயமோ ...)
சீலமாய் சிவனோ மந்திரீ மாயனரி துதிக்கும் சூதனோ
காலனோ ரவிதானோ காந்தருவ ராசன் தானோ
(மாயமோ ...)
அஞ்சதே மனதுமந்திரீ யிங்கே ஆகுமோ தனது
மிஞ்சிய ராக்ஷதரோ விதித்த மாயன் விதிதானோ
(மாயமோ...)
சொல்லிய திசையில் மந்திரீ இது தேசத்தோர் வசையில்
வல்லமை யதனாலே மகிழ்ந்து மலரைக்
கானாம் இதுவும் கனவு தானோ.
(மாயமோ...)
அந்தணர்க்குகந்த மந்திரீ யிந்த அவணியிற் சிறந்த
சுந்தரமாம் நம் நகரம் இப்போது
சேர்ந்திடும் இதற்குக் [1]கியாதி
(மாயமோ...)

விருத்தம்

உரிமையாய் எனக்கு உரைக்கும் மந்திரியே கேளாய்
பெருமையாய் மலரெடுத்துப் போவார் தெரியக் காணேன்
விரும்பிய முனிவர் தேவர் மாயங்கள் செய்திட்டாரோ!
அருமையாய் எந்தனுக்கு அறிவிப்பாய் அறிவிப்பாயே!

.....................................

1. கியாதி - பெருமை
ருக் - 8

## நாரதர் வருகிற விருத்தம்

ஏங்கியே ருக்மாங்கத ராசன் இருக்கின்ற சமயந்தன்னில்
பாங்குள்ள அவணிதன்னில் பரிவுடன் திசையதை
ஓங்கியே அறிந்து மெத்த உலகெல்லாம் சஞ்சரிக்கும்
தாங்கிய விதிசா மன்னன் சபைதனில் நாரதர் வந்தார்

## விருத்தம்

விண்ணவர் முனிவர் போற்றும் வேதனார் அருளினாலே
உன்னிதராகத்தானே ஈரேழு உலகம் சுற்றிக்
கண்ணினில் கருமம் கண்டு கடுகியே ஓதிக்கொண்டு
நன்றிது வென்று சொல்லி நாரதர் தான் வந்தாரே!

## தரு

ராகம் : பந்துவராளி                                        தாளம் : ஆதி

நாரத மாமுனி வந்தாரே - நான் முகன் வியக்கும்
நாரத மாமுனி வந்தாரே!
நாரத முனிவர் தான் கானாமிர்தம் உகந்தார்
பரத சங்கீத மீந்தார் பாரிலுள்ளளோர் மகிழ்ந்தார்
(நாரதமாமுனி ...)
ராமா கோவிந்தா என்று நாமத்தை உண்டு
நீலா அழகா என்னுங் கோவென்று
காமக் குரோதம் அகன்று
காயவவை அதனால் வென்று
பாமரர்க்கு வழியென்று பரப்பிர்ம ரூபங்கொண்டு
(நாரத மாமுனி...)
தேசா தேசத்தினில் கூடி தினங்கள் தோறும்
திவ்ய சுகத்தைக் கொண்டாடி
வருவேன் சபையில் ஓடி வையகம் முழுதும் தேடி
ராசன் ருக்மாங்கதனை நாடி
ராகம் பந்துவராளி பாடி     (நாரதமுனி...)

### விருத்தம்

கட்டியம் கூறி நிற்கும் காவலா சொல்லக் கேளாய்
மட்டிலா உலகமெல்லாம் [1]மகிமையாய் [2]சஞ்சரித்து
நட்டனை யாகவே தான் நாரதர் வந்தாரென்று
கட்டளை தப்பாமல் நீ கடுகியே உரைசெய்வாயே!

### விருத்தம்

எத்திசையும் புகழும் கீர்த்திக்கிசைந்த மன்னவரே போற்றி
சுத்தமாம் விண்ணில் வாழும் சுரமுனி சார்ந்தாரப்பா
வெற்றியாய் ஆசாரத்தில் விரும்பியே இருக்கக் கண்டு
உற்றது தேவர்க்கு உண்மையாய் உரைசெய்தேனே!

### சத்தியாவல்லி வருகிற விருத்தம்

செண்பக மாமலர் வாடை மேனிதன்னில் சேர்ந்திடவே
களப கஸ்தூரி பூசி
இன்பமுடன் திலகமிட்டு மதிமுகத்திற் கிசைந்தபடி
நவரத்தின பணிகள் பூண்டு
அன்புடைய அருந்ததியாள் அகலிகை இந்திரை
அரிவையரில் அழகான அவணி தன்னில்
சம்பிரமுள்ள[3] ருக்மாங்கதராசன் சபையை நாடி
[4]தாரிழை சந்தியா வல்லியும் தான் வந்தாளே!

### தரு

இராகம் : மத்யமாவதி தாளம் : ரூபகம்

வந்தாள் சந்தியாவல்லி வந்தாள்
மன்னன் சபையில் வந்தாள் சந்தியாவல்லி வந்தாள்

1. மகிமை - பெருமை 2. சஞ்சரித்தல் - போய்வருதல்
3. சம்பிரமுள்ள - பெருமையுள்ள
4. தாரிழை - மாலையணிந்த பெண்

அந்தமான ருக்மாங்கத மகிபன்
சிந்தை மெச்சிட மிக சந்தோஷமாக
(வந்தாள்...)
குங்குமம் அதிர்ந்த கொங்கை குலுங்கவே
கோதையருகினில் கொஞ்சிக் கொஞ்சிக் கொண்டு
(வந்தாள்...)
மதிமுகமிலங்க மாதர்கள் கை தாங்க
கதிர் குல வேந்தனைக் கண்டு மனங்களி பொங்க
(வந்தாள்....)
வெற்றிக் கரந்தன்னில் மேல் வளை மின்னவே
மெல்லடிச் சிலம்பு மிகுந்து கலீரென்னவே
(வந்தாள்...)
சிற்றிடை[1] துவண்டு [2]சிறுநகை கொண்டு
மத்யமா வதியில் மனதில் உற்சாகம் கொண்டு
(வந்தாள்...)

## விருத்தம்

சட்டமுடன் உரையைக் கேள் சந்தியாவல்லி சதிருடைய
மந்திரியே தரணி தன்னில்
திட்டமுடன் புனலாட சென்றபேர்க்கு தீர்க்கமுள்ள
கங்கையது எதிர் வந்தார்ப் போல
நட்டமதாய் மலர்போன சமயந்தன்னில் நாரதமுனியும்
வந்தார் அரச சபையில்
கட்டளையாய் மூவரும் போய் அவர் பாதத்தில்
கதிசெய்வோம் அடித்தொழுது துதி செய்வோமே!

1. சிறுநகை - புன்னகை 2. கோரம் அழகின்மை

தரு

ராகம் : மோகனம் தாளம் : அட

மானே சந்தியாவல்லி மந்திரியுடன் நாமும்
மாமுனியைப் பணிவோமே !
தேனுவுடன் தருவும் தினமும் தானுள சிறப்பாம்
வானுலகத்திலிருந்து வந்தார் மகிமை உய்ய
(மானே...!)

அமரர் முனிவர் நரர் எவராகிலும்
சொல்லி அறிந்தார் சொல்லுவதவர் பாரம்
நமது கவலை எல்லாம் நாடி உரைத்தார் - மிக
நடக்கும் வழி சொல்வானின் னேரம்
மமதையுடன் இருந்தால் வானோர்
சபை முன்னே வகுத்து சாபமிடுவார் கோரம் :
சமய மறிந்து நாமே தயவாயவருட தாளிணையை
பணியத் தருண மிதுவே! சரசமுள்ள
(மானே !)

வேதன் அருகிக் காவினில் முனிவன் வர
மேதினியோர் செய்த பாக்கியம்
சாதகமாய்த் தடத்தை விரும்பிவர தானாய் வந்ததே
வெகு சிலாக்கியம்
தீது குறையிருந்தால் தீரும் அவர் பாதத்தை
தெரிசிக்கலாம் பெரியோர் வாக்கியம்
ஓதும் மறைமுனியை உகந்து அழைத்து வந்து
உயர்ந்த மணிபீடத்தில் இருக்க வையவரை போக்ய

(மானே !)

ஆதிமுதல் மாயவனருட் சரணப் பொருளை
அணிந்தார் நாரதர் அன்புடன் தேடி
வேதன் உமையான் வாணி கீதம் அருள் செய்தாளே !

மிகுந்த தவசி யென்று நாடி
மேதினிதனிலிந்த விதி சாநகரந்தன்னில்
**மோகன** ராகத்தைப்பாடி பேராதரவாய்வந்த பெரியோர்
தன்பாகத்தில்
பேதகமில்லாமல்[1] பூசிப்போம் மனம் கூடி...
(மானே...)

தரு

ராகம் : சுருட்டி தாளம் : ஆதி

சரணம் சரணம் அய்யனே!
தற்காத்துக்கொள்வாய் தாள்பணிந்தோம் அய்யனே!
மறு சென்ம மில்லா மகானுபாவரே - நல்ல
தருணத்தில் வந்தீர் சொல்ல - தாபசோபத்தை வெல்ல
(சரணம் ....)
கிரீடியாக பதம்பெற்றேன உங்களைக்
கண்ணால் கண்டபின் மனம் ஒத்தேனே!
சுருட்டி ராகம் பாடித்தானே சுகிர்தமாய் மனம் களித்தேனே
அரட்டிகள்[2] எல்லாம் அற்றேனே
அன்பாய்ப் பதம் நினைத்தேனே!
(சரணம்...)

விருத்தம்

ஆதிபர முனியே போற்றி அமரருக் குகந்தாய் போற்றி
சோதி உன் பாதம் சதமாய் நிதம் நினைந்தேன்
சரணம் சரணம்
என்ஜென்மம் சாபல்ய மானேன் ஆதரவாக தேவரீர்
மனை தனிலே வந்து
பேதகமில்லாமல் உயர் பீடத்தில் இருத்திடீரே!

............................................................
1. பேதகம் - மாறுபாடு சந்தேகம் 2. அரட்டி - பயம்

தரு

ராகம் : சாரங்கா தாளம் :

மாமுனியுடன் ருக்மாங்கத ராசன்
[1]மருவி நடக்க லுற்றாரே!
பூமி புகழ் மன்னன் பொருந்தி அருகில்வர
சாமிநாதனே நேர்முகமாகவே!
ஓமென்று புகழ்ந்துடன் நாம முறை செய்யும்
மாமுனி யிஷ்டமுடன் ராசனும் இருகரங்களைத் தாங்க
இணங்கியே சுரரெல்லாம் எங்கும் வேதங்களோங்க
புருஷனானவர்க் கெல்லாம் தேகம் பூரித்துப் பொங்க
தேவசிகாமணியைத் தெரிசிக்க மனம்போல
மாமுனி சுத்தமுடன்
நாரதர் சிந்தை மகிழ்ச்சி கொண்டு
சிறந்த முறையில் அந்தப்புரம் தேடி
சித்தம் மிக மகிழ்ந்து ராசன் தேவி
உரிமையுடன் தாதிகள் பணிகள் செய்ய
கோரிக்கையாக நாடி மாமுனி பாரெங்கும்
புகழவே பதித்த ரவி குலத்தில்
பாங்குடன் மன்னனும் பிறந்தாரே
ஊரெங்கும் ஓது மொழியாலிந்த
சாரங்கா ராகத்தைப் பாடி
சபைதனில் சேர்ந்தானே! (மாமுனி...)

விருத்தம்

மாமுனி யோகி மெச்சும் வானவ ரிஷியே போற்றி
திருவருள் கொண்டு இந்த தேசத்தில் வந்தாய் போற்றி
கருவினைக் கருமமெல்லாம் கடந்துநான் முத்தியானேன்
பெருமையாய் தேவர் கூடி புகழும் நாரத தேவா போற்றி!

1. மருவி - அருகில்

விருத்தம்

நீதியது தவறிடாத ருக்மாங்கத சேயே இந்த
மேதினி தன்னில் வாழும் விரும்பிய மனுக்களெல்லாம்
சோதியாய் முறைதப்பிடாமல் சுகமதாய் இருக்கிறாரோ
ஓதியே எந்தன் ராசனார்க்கு உகந்துநீர் உரைத்திடீரே!

ராசா விருத்தம்

வானவ ரிஷியே இந்த வையக [1]மனுக்களெல்லாம்
தேனுவும் தருவும் போல செழிக்க அவர்
இருக்கும் நாட்டில்
ஆனதோர் மலரை எல்லாம் அன்புடன் சோரம் செய்து
போனது தெரியாதய்யா புண்ணியா புகலுவீரே!

விருத்தம்

மாநிலமெங்கு மந்த பாஸ்கரன்[2] குலத்து மன்னா
சீருள்ள மலரையெல்லாம் தெய்வ கன்னிகையர் வந்து
பேருள்ள விண்ணில் வாழும் புரந்தரர்க் களித்தாரன்றே!
பாரினில் உந்தன் பாக்கியம் [3]சேஷனாலும்
செப்பொண்ணாதே!

தரு

ராகம் : யமுனா கல்யாணி தாளம் : ரூபகம்

நாராயணா நாராயணா
நாராயணா நாராயணா

..........................................................................

1. மனுக்கள் - மக்கள் 2. பாஸ்கரன் - சூரியன்
3. சேஷன் - ஆதிசேசுஷன் என்னும் ஆயிரம் நாவுடைய
பாம்பு

நாராயணா வெனவே சொல்லி
பாராயணம் செய்தாப்போலே
நாநாவிதக் கருமங்களும் நடப்போர்களும் மெய்யால்
தானாதிகள் செய்யும் பலன் தனதாய் வரும் கையால்
(நாராயணா...)

விதிசாபதி ...தரும் வேளைப் பயனாலே
சதியாகவே நினைந்தாலிப்போ செயம் வந்துசேரும்
அமராபதிக் கரசனந்த அப்சரஸை அடுத்து
திமிராகவே பூலோகத்தில் திரிய விடை கொடுத்து
விதிசாபுரம் தனிலே சென்று விரும்பியே மலரெடுத்து
புதுசாய் தினந்தோறும் நீங்கள் பூ தனைத் தொடுத்து
தருவாய் என்று சொல்லவே தெய்வ
தோகையர்களெண்ணி
குருவாய்மொழி தனைப் போலவே செய்ய
கூடி மனம் பண்ணி விதியால் மலர் வேண்டி.
தெய்வ மாதர்கள் பரிந்து பதியில் வந்து
பயந்தே கொய்த பாவை தன்னை அறிந்து
விதியானதை அறிந்து சொன்னேன் மகராசனே கேளும் உன்
கெதியானெது கிடைத்த தப்பா
கேட்பீரே எந்நாளும் !
(நாராயணா...)

### ராசா விருத்தம்

மாதவங்கள் செய்த மறை முனியே தேவா
வாய்மொழியைக்
கேட்டு மனம் மகிழ்ந்தேன் நானிப்போ
தீதரவே இந்திரர்க்கு மலரெடுத்து செலுத்தி வைக்கும்
தெய்வகன்னி சேர்ந்த நாட்டில்
போதரவாய் மலரெடுக்கும் போது நானும்
பூதனாரைக் கண்டு நானும் போற்றி செய்ய
சாதகமாய் எந்தனுக்குக் கிருபை யோங்கி
சாத்திடீர் மனம் மகிழ்ந்து வாழ்த்திடீரே !

## விருத்தம்

முன்னவர் ரவி குலத்தில் வாழ்ந்திடும் அரசே எங்கள்
விண்ணினில் பணிகள் செய்யும் மெல்லியைக்
காண வென்றால்
முன்னமே பெரியோர் செய்த [1]மூலவித்தை
அறிந்தேனிப்போ
சொன்ன மூலிகையினாலே தோகையைக் காணலாமே !

## விருத்தம்

ஓங்குபுகழ் விதிசாமன்னன் மதியாலிப்போ
உண்மையுடன் நாரதரைத் துதிகள் செய்து
தீங்கு மனக் குறைகள் எல்லாம் தீர்ந்தாரப்பால்
சேர்ந்த முனி வானுலகு சென்ற பின்பு
பாங்குடைய வித்துக்களை மந்திரியிப்போ
பதித்திடவே சிங்கார வனத்திலெங்கும்
தேங்கியதோர் செழிப்புடனே படர வைக்க
தெரிவிப்பாய் தோட்டக்காரர்க் கறிவிப்பாயே !

## விருத்தம்

மந்திரி உரையைக்கேட்டு மலர் வனத் தோட்டக்காரன்
சிந்தையும் நொந்துமெத்த தேகமும் நடுநடுங்கி
விந்தையாய் மிகவேசெய்யும் மெல்லியரரசை விட்டு
சொந்தமாய் ராசர் முன்னே தோட்டக்காரன் தானும்
வந்தானே !

.......................................................................

1. மூலவித்தை - மூலிகைகள் பற்றி விவரம்

### தோட்டக்காரன் விருத்தம்

பாற்கரன்[1] குலத்துதித்தப் பாராளு மன்னா போற்றி
தீர்கமாய் மலர்களெல்லாம் தினந்தோறும் களவுபோக
தாக்கிய தேவரீர்க்கு சதி செய்த எனை [2]கழுவில்
தூக்கியே வைக்கச் சொன்னால் என்ஜென்மம் ஈடேறுமையா

### ராசா விருத்தம்

தோட்டக்காவலரே வேனில் ..... செறந்.........
நாட்டமாய் மலர் வனத்தில் நலமுடன் முளைக்க வைத்து
வாட்டமில்லாமலிப்போ .... படர வைத்தால்
காட்டினில் மலரெடுக்கும் கன்னியைக் காணலாமே !

### தோட்டக்காரன் விருத்தம்

அப்படியே செய்வேனய்யா ஆதவன் குலத்து வேந்தே
செப்பிய வித்தினாலே தெய்வ கன்னியர் வந்தால்
கற்பனைப் படியே நாங்கள் கண்டபேர் ஓடிவந்து
ஒப்பிய தேவரீர்க்கு விரும்பியே உரைசெய்வோமே !

### விருத்தம் - பொது

வெற்றியாய் மலர் வனத்தில் மேவிய தோட்டக்காரன்
சுத்தமாய் [3]முனிவரீந்த சிறந்திடும் விதையை எல்லாம்
பத்திரமாய் தோட்டமெல்லாம் பரிவுடன் முளைக்க வைத்து
கொத்துடன் படரவைத்து குதிகொண்டு வீற்றிருந்தான்.

.................................................................

1. பாற்கரன் - பாஸ்கரன் - சூரியன்
3. கழுவில் - கழுமரம் - தூக்குதண்டனைக்குரிய
சூரான் மரம்
3. முனிவருந்த - நாரதமுனிவர் 4. குதிகொண்டு - சந்தோஷமாக

## விருத்தம் - பொது

புரந்தரன் பணிகள் செய்யும் பூவையரேழுபேரும்
நிரந்தரமாக வேதான் நிலைத்த பூலோகந்தன்னில்
துரந்தரன் ருக்குமாங்கத ராசன் சிங்காரத்தோட்டந்தன்னில்
இருந்திடும் மூலிகையாலொருத்தி இறங்கினாள்
புவியின் மீதே!

## விருத்தம்

பூமலர் தன்னைக்காக்கும் பிரியமுள்ள தோட்டக்காரன்
நேமமாய் மலர்வனத்தில் நினைவுடனிருக்கும் போது
ஓமலாய் சப்த கன்னியர் ஒளியுடன் இருக்கக் கண்டு
சேமங்கள் ராசர்க்கென்று சிறப்புடன் சொன்னாரே!

## தரு

ராகம் : சாவேரி தாளம் : ஆதி

அண்ணன் மாரே இங்கே வாரும் - ஒரு
அரிவை நிற்கிறாளிதோ பாரும்
எண்ணமாகவே எல்லோரும் ஏகி மன்னனிடம் சேரும்
கையைக் கட்டிக் கொண்டு நில்லும்
கன்னியைக் கண்டதைச் சொல்லும்
மனமிரங்கி மகராசன் நம்மேல் மனம் வைக்கனும்
மனு போஜன்
கண்ணில் கண்டோமிந்த கன்னி யிப்போ
கருத்தில் வைத்துச் செய்த நன்றி
[1]பரத்தினனாக நம்மை எண்ணி
ஏங்கச் செய்தாளிந்த அம்மை
மன்னவர்க்கு மகிமையாச்சே - இனியவர்

.................................................................

1. பரத்தினன் - வேற்றுமையாக - வேறுயாரோவாக

நிலந்தன்னிலிந்த பேச்சே
விண்ணில் வானோரிதை அறிவாரே வெகு
விருப்பமாய்.... வார்
மனதுக்குப் பிடித்த பேரன்பால்
மன்னவன் செய்த கண்காட்சி
நாட்டினில் நாம் பட்ட கோலம் - இனி
நல்லவர் நமக்கு நல்ல காலம்
...... சரி சின்னம் ஏது - அட
வாடாப் பிடிப்போம் வரவன்னம்
சகசமாய் மன்னனை நாடி
சாவேரி ராகத்தைப் பாடி

### விருத்தம் தோட்டக்காரன்

கதிர் குலத்தரசே கோனே! காவினில் கன்னியாக
மதியுள்ள விண்ணில் வாழும் மங்கை போலிருக்குதய்யா..
சதிருள்ள மலரெடுத்துத் தயங்கியே மயங்கி நின்றாள்
பதிதனில் கண்டசேதி பார்த்துரை செய்தோமையா

### விருத்தம்

விண்ணில் வாழும் மங்கையரிலே மூவரில் பின்வந்த
கன்னியவள் மிதித்தாள் பூமி
கன்னியுடன் தொடர்ந்து வந்த ஆறுபேரும்
கருத்துடனே ஆகாசம் தனில் நின்றார்
எண்ணமுள்ளக் காவலர் [1]ஏந்திழையைக் கண்டு
ஓடி வந்து உரைத்த மொழி நீதிகேட்டு மன்னன்
குண்ணுமன மகிழ்ச்சியுடன் மந்திரி யோடும்
கோர்த்தான் மன்னன் மனம் பூரித்தானே!

.............................................

1. ஏந்திழை - பெண்

**விருத்தம்**

மந்திரியே நம்முடைய மலர் வனத்தில்
வானவர் உலகத்து மங்கை வந்தாளென்று
கந்தமலர் தனைக் காக்கும் காவல்காரன் கருத்துடனே
உரைத்த மொழி கேட்டோமிப்போ
தந்திரமாய்ச் [1]சதுரங்க சேனையோடும்
சகலமணி பணி வரிசை தானெடுத்து
அந்தமுள்ள பூங்காவின் அருகில் சென்று
அறிவிப்போம் அரிவயரைத் தரிசிப்போமே!

தரு

ராகம் : கேதார கௌளம் தாளம் : ஆதி

அடவி[2] தன்னில் வந்த அரிவையரைக் கண்டு
அன்புடனே அறிவிப்போம் வாராய்:
திடமுடனே பரி சேனைகள் சூழவே தேவ
கன்னிகையைக் கண்டு தரிசிப்போம் வாராய் :
பண்ணுமா முனி தேவர்க்குகந்த
பாவையர் காவில் பதிவாக வந்த
வர்ணமான வரிசை மிகுந்த
வாடாத மல்லிகை சூடி வளர்ந்த
(அடவிதன்னில்...)
தேவர் போற்றும் சிங்கார வனத்தில் சேர்ந்த
பறவை திரியும் புனத்தில்
ஏவலாய் அன்னம் பேடு யிதோடே
ஈடான கன்னியர் தேடும் தினத்தில்
(அடவிதன்னில்...)
அன்று மா முனி அருள் செய்த சேதி
அரிவையர் வந்தாளிந்த நிசியில் நீதி

1. சதுரங்க சேனை - நான்குவிதபடைகள்
2. அடவி - காடு - தோட்டம்

கொண்ட மங்கையர் கலவியில் ப்ரீதி
கேதார கௌளத்தை குறிப்புடனே ஓதி
(அடவிதன்னில்...)

### விருத்தம்

அம்புவியில் ரவி திசைகளாலும் மன்னா
[1]அழகான அப்சர கன்னிகை வந்து
கொம்பு தன்னை சப்த கன்னியர் அப்பாலே
கோடி ரவி ஒளிவான தோகையே நீ
இன்பமுடன் இத்தலத்தில் வந்தசேதி
ஏந்திழையே எந்தனுக்கு சொல்வாயென்று
பண்புடன் பாவையரை மனதிலெண்ணி
பார்த்தவனும் சாத்திரத்தால் ஓதினானே!

### தரு

ராகம் : செஞ்சுருட்டி தாளம் : ரூபகம்

ஆர் சொல்லாய் பெண்ணே என்றான்
...பேதை கண்ணே!
நீ யார், மன்னரைப் பார்த்திருந்தாலும்
என் பேரானது ருக்மாங்கதன் சொன்னேன்
(நி ஆர் சொல்லாய்...)
வானவர் போற்றி உந்தன் மனதவர் தேற்றி
நேசமதாக நிறைந்த மொழியவர் சாற்றி
(நீ ஆர் சொல்லாய்...)
மலர் தனை எடுத்துஅந்த வானோர்க்கு கொடுத்து
நிலந்தன்னில் இறங்காமலே அடுத்து
[2]நிஷ்களங்கமான ரூபத்தை விடுத்து

.....................................................

1. அப்சர கன்னினை - தேவருலகப் பெண்
2. நிஷ்களங்கமான - தூய்மையான - களங்கமற்ற

நாடு நகர் விளங்க காடுகாவலர்கள் விளங்க
ஓடும் இவையெல்லாம் உன்னால் ஒதுங்க
ஒண்டியாய்[1] வந்து ஒதுங்கிப் பதுங்க
(நீ ஆர் சொல்லாய்...)

பூவுலகை நாடி இந்த பூங்காவனம் தேடி
வானவர்கள் தன்னை அனுதிமும் கொண்டாடி
செஞ்சுருட்டி ராகம் சிறப்பாகவே பாடி
(நீ ஆர்சொல்லாய்...)

## விருத்தம்

ஆதியாம் சகுத்திதரனோ
சோதியாய் உன்மேனி துலங்கவே தேசத்தன்னில்
நீதியாய் மலரெடுத்து நியமங்கள் முடிக்கும் உந்தன்
சேதியை எந்தனுக்கு ...சொல்லுவீரே !

## விருத்தம்

மன்னனே ருக்குமாங்க மார்த்தாண்ட குலத்து வேந்தே
உன்னுடைய வனத்தில்மெத்த ஒளி மலர் இருக்குதய்யா
பன்னவர் முனிவர் சொல்லால் பார்தனில் வந்தேனென்று
கன்னிவாய் மொழியால்மெத்த கரைந்திட்டாள்
உரைத்திட்டாளே

## தரு

ராகம் : தோடி தாளம் : ஆதி

சொல்லுகிறேன் கேளும் ராசனே !
சொல்லுகிறேன் கேளுமே

..................................

1. ஒண்டியார் - தனியாக

தொல்லுலகிலிருந்து வல்லமை யுடைய நான்
நல்ல மலர் கொய்து
செல்லும் வகை யதை சொல்லுகிறேன்.
(சொல்லுகிறேன்...)

இந்திரன் மதியில் யேகியமுனி ஓதிய துதியில்
வந்தேன் உன்பதியில் மலரைக் கொய்து
சொந்தமுடனே கந்த மலரைக் கொய்ய
வந்த வகை தன்னை உந்தனிடத்தினில்
(சொல்லுகிறேன்...)

மன்னவர் செருது மலர்க்காவினில் அன்னவர் கொருது
பண்ணவர் கருது பாவித்து வந்து பாரினில் விருது
அந்நகரிலிருந்து சொன்னபடி சிந்து
கன்னிகை யொருத்தி மண்ணிலுதித்ததை
(சொல்லுகிறேன் ...)

அண்டருக்குகந்த அவனி மலராகுமோ மிகுந்த
தொண்டர்கள் புகழ பூந்தோடி ராகத்தை செப்பினேன்
மகிழ்ந்தே
மண்டலம் புகழும் விண்டிலர் அரசர்க்கு
கண்ட மலர் கொய்து நின்றேன் நிலத்தினில்
(சொல்லுகிறேன்...)

**விருத்தம்**

மண்ணிலுள்ள மானிடர்க்கு மன்னா உந்தன்
காவில் மலராலே எங்கள்
விண்ணாளும் இந்திரனை எந்தனோடே மிகுந்த
மலர் இருக்குதென்றே விரும்பியே வந்தோம்
இந்நிலத்து மூலிகையை மிதித்த [1]தோஷம்
இறங்கி இந்த புவியில் உன்னெதிரே நின்றேன்
அண்ணலெனும் ஆதிமூலம் பணிகள் செய்யும்
அப்சரஸ் நானொருத்தி அறிந்திடீரே!

..................................

1. தோஷம் - குற்றம்

### விருத்தம்

வானவர்க்குப் பணிகள் செய்யும் மாதே உந்தன்
வாய்மொழியைக் கேட்டு மகிழ்ந்தேனிந்த
ஈனமுள்ள[1] மலரைஎல்லாம் எடுத்துச் சென்றால்
இன்பமுடன் இந்திரர்க்கு ஏற்குமோ தான்
மானமுள்ள ரவிகுலத்து மன்னர் முன்னாள்
மனுநீதி தவறாத மகிமை தானோ
ஆன மலரெடுத்து விண்ணில் [2]அமரேந்திரர்க்கு
அளித்திடாய் எந்தன் மனம் களித்திடாயே !

### சப்த கன்னி - விருத்தம்

மன்னவரே நேராக வந்த சப்த கன்னியருள்
ஆறுபேரும் தயங்குகிறார் ஆகாசத்தில்
அன்னவருடனே கூடி அமரர் பதியின் முன்
செல்லாவிட்டால்
கன்னி மெல்லடிக்கியவர் சாப மீவார்.

### விருத்தம்

திருவருளும் திசைநகர் தேசமாண்டு
தீர்க்கமுடன் சத்தியங்கள் செய்தேனோ
பருவமுள்ள மொழியாரைப் பழித்திட்டேனோ
படையில் நின்று பின்வாங்கிப் பதுங்கினேனோ
குருமொழியை மிஞ்சிமிகக் கொலை செய்தேனோ
கூடவைத்து யோசித்தேனோ !
குறையில்லாமல் மருவி மலரெடுக்க வந்த மங்கையர்க்கு
மருத்துவனார்[3] சாபமிக வகுப்பிப்பாரே !

.............................................................................

1. ஈனமுள்ள - பெருமையற்ற 2. அமரேந்திர் - இந்திரன்
3. மருத்துவனார் - இந்திரன்

தரு

இராகம் : முகாரி

என்ன காரண மிதேதோ மந்திரிமாரே - இந்த
ஏந்திழை தயங்கிடவே மந்திரிமாரே !
மன்னனொருவன் இருந்தும் யிப்போ
வகையொன்றும் சொல்லாமல் போனால்
மந்திரிமாரே !
மண்ணிலுள்ளோர் நகைத்திடாரோ மந்திரிமாரே !
மாரி மழை பொய்த்திடாதோ மந்திரிமாரே !
பண்ணவர் ஊரிலுள்ளவரெல்லாம் மந்திரி மாரே !
பாவியென்றுரைத்திடாரோ மந்திரிமாரே ! முன்னாள்
செய்யும்முறை தப்பினேனோ மந்திரிமாரே !
அன்புடைய தேவர் பாதம் அதன் பின்னாடி யெங்கும்
அறிந்திட முகாரி ராகம் சொல்லி பாடினேனே
மந்திரி மாரே !

விருத்தம்

மனு நீதி தவறாத ருக்மாங்க ராசன் மலர் வனத்தின்
முல்லையின் தேர் பூஞ்சோலை
வனிதையெனும் அப்சரஸ் மயக்கம் கொண்டால்
வையத்தில் [1]அபவாதம் ...
தினந்தோறும் மலரெடுத்து இந்திரர்க்கு தேன்மொழியாள்
கொடுக்கும் மலர் தெரியக் காணேன்
கணமுள்ள கன்னியரைக் கண்டு மெத்த
கதிசெய்வான் மன்னவனும் துதி செய்வானே !

........................................................

1. அபவாதம் - கெட்டபெயர்

## விருத்தம்

வெற்றியுள்ள ரவிகுலத்துதித்த வேந்தனே! வேதனை
தானடைந்து என்னால் [1]வெதும்ப வேண்டாம்
உத்தமியாள் சந்தியா வல்லிக் குறுதியுடன் பணிகள் செய்ய
உகந்த தேவி வினயமுடன் அரிவார விரத மிருந்த
பலனை யவள் எனக் களித்தால் பரத்திலேகி
சித்தியுள்ள மலரெடுத்து தேவேந்திரர்க்கு
தெரிவிப்பேன் நான் அறிவிப்பேனே!

## விருத்தம்

அப்சரசு மொழிகளெல்லாம் அன்பாய் கேட்டு அதிசயித்து
அகமகிழந்து அரசனும் அவர்க்கு
ஒப்பிடவே பணிகள் செப்பி உயர்ந்த தாதிக்கிசைந்தபடி
மன்னவனும் உரைகள் சொல்லி
அற்புதமாம் அமிர்தவல்லி அருகில் சென்று
அரிவையரே உந்தன் மனதறியாமல் நீ
கற்பனையாய் விரதமிருந்த பலனைத் தெய்வ
கன்னியர்க் களித்து மனம் களித்திடாயே!

## விருத்தம்

தாதியே அமிர்தவல்லி தையலே நீ இருந்த
தீதரவாக ஏகாதசி விரதந் தன்னை
தெய்வகன்னியின் தெய்வக் காதலைத் தனக்களித்தால்
காக்ஷியும் [2]மோக்ஷமும் உண்டாம்
வாதுரை செய்யாமல் நீ வகையுடன் அளித்திடாயே

.....................................................

வெதும்ப - வருத்தப்பட 2. மோக்ஷம் - சுவர்க்கம்

### தாதி - விருத்தம்

அய்யனே ராசகோவே! அறிகிலேன் அரிவிரதத்தை
மெய்யதாய் வெண்ணெய் தன்னில் வெண்பாலும்
முளைத்தாற் போலே
பையவே பணிகள் செய்து பரிவுடன் இருந்தேனல்லால்
உய்யவே விரதம் தொண்டு அறிகிலேனய்யா!

### ராசா - விருத்தம்

அந்நகரம் தன்னில் வாழும் அப்சரசு கன்னியே கேளாய்
சொந்தமாய் பணிகள் செய்யும் சொரிகுழல் தாதி செய்த
விந்தையாய் ஏகாதசி விரதமதை அறியேனென்றாள்
மந்திரத்தாலே நீயும் வானுலகு ஏகுவாயே!

### விருத்தம்

பரிதிகுலம் தனிலுதித்துப் பலரையாண்ட பார்த்திபனே
உன்தேவி பாங்கிதன்னை
உறுதியுள்ள பணியில் குறைகள் செய்திட்டதாலே
உகந்திட்டாளே உகந்திட்டாள் உண்மையாக
பெருவுடைய ஆகாரம் புசித்திடாமல் பிரியமுடன்
இரவெல்லாம் பொழுது போக்கி
கருதியவள் இருந்த தினம் ஏகாதேசி
காவலனே அவளுக்கினி

### தாதியைப் பார்த்து - ராசா - விருத்தம்

சுந்தரமாம் என்தேவி சந்தியா வல்லி சொன்னபடி
நீ யவளகப் பணி செய்யாமல்
அந்தமுடன் உன்னை அடித்தாளப்போ
அகம்மெலிந்து அவ்விடம் விட்டகலவே ஓடி

தொந்தமுள்ள பசியதனால் இரவினில் நீ கண்
சோராமல் அரிநாம துதிகள் செய்தாய்
சிந்தை தனில் குறியாமல் ஏகாதசி
தினத்திலிருந்த பலனைச் [1]செப்பொணாதே !

### விருத்தம்

மனதறியாமல் நீயும் மால் விரதமிருந்த தெல்லாம்
எனதிடம் தெய்வகன்னி யினமாய் உரைத்தாலிப்போ
உனதுள்ள பலனை எல்லாம் [2]உகந்தவளுக்கீந்தால்
கனமுடன் புகழுண்டாம் கன்னியே அளித்திடாயே !

### தாதி - விருத்தம்

கற்பனையாய் வானவர்க்குப் பணிகள் செய்ய
களித்திடவே மலரெடுக்க வந்த மாதே !
இப்புவியில் அடியாளும் ஏகாதசி எந்தன்
மனதறியாமல் விரதமிருந்து
செப்பியதோர் விண்ணுலகில் எந்தனுக்கு
சேர்ந்திடவே பலனிருக்கு என்றுணர்த்தி
ஒப்பமுடன் உலகறிய உமக்கேயாம் உண்மையுடன்
அரி விரதத்தை ஈந்திட்டேனே !

### புஷ்பக விமானம் வருகிற விருத்தம்

கூறிய மொழியால் தாதி குறியுள்ள ஏகாதசி
தேறிய சிந்தை தன்னில் தெரியாமல் விரதமிருந்து
பாரியாய் இப்பலனை தெய்வப் பாவையர்க்களித்தபோது
வாரியாய் மலர் விமானம் மாதுமுன் வந்த தங்கே !

.............................................

1. செப்பொணாதே - சொல்லுதற்கியலாது
2. உகந்து - உவந்து - அன்புடன்

## விருத்தம்

விண்ணுலகிலிருந்து வந்த விமானந் தன்னை
விருப்பமுடன் தெய்வகன்னி மிகவணங்கி
அன்னவளும் மனம்மகிழ்ந்து அருகே சென்று
மன்னவர்களும் பார்த்திருக்க ....
என்னுடைய மனத்துயரம் தீர்ந்தேன் தாதி !
இருந்ததொரு அரிவிரதத்தை எனக்களித்தாய்
இவ்வுலகில் உந்தனைப் போல் காணேனென்று
மதிசொலாள் பின்னுமவள் [1]துதி செய்வாளே !

## விருத்தம்

மேதினியில் புகழ்படைத்த விதிச வேந்தே
வீனுடைய உந்தன் குலம் மிகவும் வாழ்க !
நீதியுடன் புவியாளும் மன்னவ ரெல்லாம்
நிறைவுடைய உந்தன் செங்கோட்குள்ளாய் வாழ்க !
சாதிமுறை தவறாமல் தரணி வாழ்க
சந்ததியார் உந்தனுக்கு தழைத்து வாழ்க !
ஓதுமறை முதியோர்கள் உகந்து வாழ்க
உத்தமரே விண்ணுலகத் தேகுவேனே !

## ராசா விருத்தம்

வெற்றிகள் படைத்ததோர் மந்திரி விருதுடன் நமது தாதி
புத்தியில்லாமல் செய்த புகழுள்ள அரிவிரதத்தால்
முக்தியாய் சப்தகன்னி விண்ணுகத்திற் சென்றாள்
பக்தியாய் விரதமிருந்தால் பலனையும் பார்ப்போமென்றான்

.......................................

1. துதிசெய்தல் - புகழுதல்

விருத்தம்

மந்திரியே மாநிலத்தை ஆண்டுவந்த
மகிமையினால் மனமகிழ்ச்சி இல்லைகண்டாய்
தந்திரத்தால் ஏற்றெவரும் தவம் செய்தாலும்
தரணிதனில் மனுக்களுக்குத் தாழ்வில்லாத
மந்திரத்தைக் கற்றதாலும் மறையோர் கூட
மகத்துவமுள்ள மன்னரென்று மகிழ்ந்திட்டாரே!
அந்த மதியினால் அவனியாண்ட அரசர்க் கெல்லாம்
அடைவது நரகமென்று அறிந்திடாயே!

விருக்தம்

தனமது படைத்திந்த தரணியை ஆண்டாலென்ன
கனமுடன் பவியோடும் காவலர் பணிந்தாலென்ன!
சினமது முக்தியாக செய்தொழில் கருமமெல்லாம்
மனதுடன் அறியவேண்டி வசிஷ்ட்டரை அழைப்பிப்பாயே!

விருத்தம்

கையிலே தண்டம் கொண்டு கருத்துடன் சோமன் கட்டி
மெய்யதாய் முன்னூலிட்டு விரும்பியே சனகரோடு
உய்யவே அஞ்சுமூன்றும் பரிவுடன் ஓதிக்கொண்டு
வையகம் மகிழும் வேத வசிஷ்டரும் தான் வந்தாரே!

தரு

ராகம் : புன்னாக வராளி தாளம் : ரூபகம்

வந்தாரே வசிஷ்ட்டர் மன்னன் சபையில்
வந்தாரே வசிஷ்ட்டர்
அந்தமாக ராசவிந்தன் அனுதினமும் நாடி

விந்தையாய்ப் பாடி மனதில் விருதுடன் கொண்டாடி
(வந்தாரே ...)
சங்காதி ரிஷிகளோடும் வசிஷ்ட்டருக்கு
சதுர்வேத முறை யோடும்
தினகரன் ஒளி கூடும் செய்தவங்கள் செய்யும்
[1]நிஷ்ட்டையில் நாடும்
இனமுடன் வேள்வி மெய்ப்ப இசைந்த மொழிகளுய்ய
கனமுடன் மன்னருய்யக் காரியம் அறிந்து செய்ய
(வந்தாரே...)
பூசுரர் உடைதரித்துப் புவியிலுள்ள பூபாலன்
மனம் பூரித்து
ஆசனம் தன்னை விடுத்து ருக்குமாங்கனை மனதில்
அன்பாய் குறித்து
கூசாமுனிவன்[2] பொல்லா கூற்றுவனவனை வெல்ல
ஆசையுடனே நல்ல அரிவிரதம் தன்னைச் சொல்ல
(வந்தாரே...)
விதிசாபுர நகரதைத் தேடி விந்தையுடன் அவ் வேந்தன்
தன்னை யோடி
புதுமையுடனே கூடி பூவுலகில் புன்னாகவராளி பாடி
தாதியர் அறிந்துநின்று சனகாதியுடன் சென்று
பதிவாய் மனதில்கொண்டு பரத்தைக் காட்டவென்றும்
(வந்தாரே...)

**விருத்தம்**

வேதவேதியரே போற்றி! விப்ரமா முனியே போற்றி!
சாதகமாகு மெந்தன் தனைபெற்ற குருவே போற்றி!
பாதக வினைகளெல்லாம் பறந்திடச் செய்வாய் போற்றி!
போதரவாய்வந்த பிராமண ரிஷியே போற்றி!

.........................................

1. நிஷ்ட்டை - தவம் 2. கூசா - தயக்கமில்லாமல்

**விருத்தம்**

கதிரவன் குலத்துதித்த காவலனே ஆசீர்வாதம்
பதிதனில் மனுக்களோடும் பரிவார சேனையெல்லாம்
துதியுடன் சுகமோ மன்னா சுருக்குடன் எனை அழைத்த
மதியுடன் கருமமெல்லாம் வகையுடன் உரைத்திடீரே!

**ராசா - விருத்தம்**

பூமியில் மனிதராகப் பிறந்து நான் ரவிகுலத்தில்
காமிய[1] பலனை யெல்லாம் கர்த்தனே அனுபவித் தேன்
சாமியே அடியேன் வாடி ஜென்ம சாபல்யம் வேண்டினேன்
நீதியாய் தனக்குள் நினைக்க அருள் செய்குவீரே!

தரு

ராகம் : ஆனந்த பைரவி தாளம் : ஆதி

கர்ம வினையைக் கடக்கத் தீருமே காட்சி பெறவே
கருத்தில் நினைந்து கடைக்ககண் பாருமே
ஜன்ம மிருந்து என்ன சௌக்கியம்
சரியோ சரி பெரியோர் வாக்கியம்
வன்மையான விரதத்தின் யோக்கியம்
வகுப்பதால் அல்லவோ எனது பாக்கியம் :
(கர்மவினை ...)
மானிடனாகி மண்ணில் பிறந்தேனே
வையகந்தன்னில் வகைபெறவே மகிழ்ந்து வாழ்ந்தேனே!
பானுகுலத்துதித்து[2] நிறைந்தேனே பாரையாண்டு
பதித்திடும் சிங்காதனத்திலிருந்தேனே!
மானமுடைய தேவர்பாதம் மலரடியிலே தொழுது
வேதஞானம் பொருந்திய நற்குரு நாதா
ஈசனென்ற மொழி பாசம் தீராத

1. காமியம் - ஆசையினால் விளைவது 2. பானு - சூரியன்

கர்ம வினையைக் கடக்கத்தீருமோ காத்திருப்போமா
சலிக்காமல் இத்தரணியை ஆள்வதும்
சம்சாரமான சாகரத்தை நான் தழுவிக் கொள்வதும்
வலிந்த மறலி மாய்கையில் வீழ்வதும்
மாதவத்தோரே மகிழ்ந்தெனக்கு உபதேசம்செய்வதும்
பலிக்குமே அந்தப் பரம பதத்தில் பாசமுடன்
நான் ஆண்ட சம விதத்தில்
கெலித்திடும் எந்தன் குருவே சகத்தில்
கிட்டுமோ இந்தமட்டும் கேதத்தில்

(கர்மவினை...)

ஆசாபாசம்[1] அகன்று நானுமே அதை அறிந்திடே னழைத்து
அநுக்கிரகம் செய்ய வேணுமே
தேசாதிபதி என்றும் தோணுமே
சென்மம் தொண்டும் தேகமாய்கையைக் காணுமே
காசினியிலுள்ள பேருக்குக் கைக்கனிபோல பொருளைக்
காட்டி
தாசனுக் கனுக்கிரகம் [2]கண்காட்டி
தெய்வ ஆனந்த பைரவி மீட்டி

(கர்மவினை...)

## விருத்தம்

ஆதவனார் குலத்துதித்து அவனியெல்லாம் அய்யனே
அரசாண்ட முறைமையால்
தேவர் ஓது மொழி தவராமல் யிருந்தேனிப்பால்
ஓதிவந்தது உணராமல் உரைபோல் ஆனேன் யான்
கதலையறியா தாதியவள் அரிவிரதத்தை கருவில்லா
விருப்பமுடன் கருதிக் கொண்டு

..........................................

1. ஆசாபாசம் - வேண்டுதல் வேண்டாமை எனும்
ஆசைகாரணம் பற்றியது
2. கண்காட்டி - கண்காட்டி களிம்பறுத்தல்
என்னும் பொருளது.

சாதகமாய் விரதபலனை சப்தகன்னி தயவுடனே
கைக்கொண்டாள் வழிகண்டேனே !

### விருத்தம்

ரவிகுலம் தன்னில் வந்த ருக்மாங்கதனே யிந்த
புவிதனில் நதிகள்கோடி பூசையில் தவமிகுந்த
கவியுடன் வேதசாஸ்திரம் கலந்திடும் கர்மம் தானம்
பவித்திர விரதத்தின் பலனும் பார்த்து நான்
தேற்றிச் சொல்வேன்

### தரு - ஏகாதசி விரதபலன்

ஏகாதசி விரத மகிமை எவரால் சொல்லப் போமோ !
ஆகாச முதலளந்த மாயன் அவர்பெருமை புகழ்
அறிந்து தெரிந்து சொல்ல
(ஏகாதசி ...)
காயகல்பம்[1] செய்து கங்கா ஸ்நாநம் செய்வதும் பின்னும்
கண்டு பணிந்து தேவர்களைக் கனபூசை செய்வதும்
ஞாபகமாக தானதருமம் நடத்திவைப்பதும் - யிந்த
நாலுதிரைக்குட்பட்ட பூமி நல்மறையோர்க்கீவதும்
தாய்தந்தையைப் பூசை செய்த தவத்தினாலும் மிகுந்தவர்
பதத்தினை
அறிவாரோ இந்த ஏகாதசி
(ஏகாதசி...)

### விருத்தம்

மன்னனே ஏகாதசி வகையுடன் விரதமிருந்தால்
உன்னிதமாகத் தேவர் உகந்திடும் வேள்வி செய்யும்
பண்ணவர் முன்னுக்கெட்டார் பரமனார் பதத்தில் சென்று
இன்னமும் [2]ஜன்மம் வேறு இல்லை என்றுரைக்கலாமே !

.......................................................................

1. காயகல்பம் - உடலை அழிவற்றதாக்குதல் 2. ஜன்மம் - பிறவி

### விருத்தம்

கூறியமொழியாலெந்தன் குலத்தினிலுள்ளோரெல்லாம்
தேறியே முக்தியானார் தேவரீர் கிருபையினாலே
வாரியாய்[1] அரிவிரதத்தை வகையுடன் எந்தனுக்கு
பாரியாய் உபதேசித்தால் பரகதிதுணை உண்டாமே !

### விருத்தம்

திட்டமுடன் விரத மிருக்கச் சேர்ந்த மன்னா
தெசமி தன்னில் ஒருபோது போசனம் பண்ணி
இட்டமுடன் அரிவிரதம் தன்னில் மேலும்
உபவாசமிருந்து இரவு தன்னில்
கட்டளையாய் அரிநாமம் தனையே உண்டு
கருவிழிகள் சேராமல் கதித்தாராகில்
சிட்டர் தொழும் துவாதசி சிறப்போர் உண்டு
புவியில் விழிசோராமல் சேர்ந்திடாயே !

### மந்திரி விருத்தம்

வெய்யவன் குலத்துதித்த வேந்தேயிந்த
விதிசைமா நகராண்ட முறைமையினால்
உய்யவே ஹரிவிரத்தின் மகிமை யெல்லாம்
உகந்த குரு தேவரீர்க் குபதேசித்தால்
வையகத்தார் வரவு கொள்ள விலையே கேட்க
மதுரமுள்ள விலை வேறுவகைபோலாச்சு
செய்யவே புவியிலுள்ள பிராணி யெல்லாம்
சேர்க்கவே அரிவிரதத்தை சேர்க்கொண்ணாதோ

.......................................

1. வாரியாய் - முறையாக

**விருத்தம்**

மந்திரி உரையைக் கேட்டு மன்னவன் ருக்கமாங்க ராசன்
விந்தையாய் குருமுனியை மிகவுமே பணிந்து கேட்பான்
செந்திரு வருளுமிந்த தேசத்துப் பிராணிக் கெல்லாம்
அந்தமாய் அரிவிரதத்தை அன்புடன் அருள் செய்வீரே!

**விருத்தம்**

உலகமெல்லாம் ஒரு குடையினுக்குள்ளே ஆண்ட
ஓங்கு புகழ் ரவி குலத்து மன்னர்க் குள்ளே
நிலைபெறவே யித்தலத்தில் நிறைந்த செங்கோல்
நெகிழாமல் மனுக்களெல்லாம் நேசமாய்
சிலை[1]பிடித்த மன்னவனே உன்னைப் போலே
சேர்ந்திருக்கும் பிராணிகளும் அரிவிரதத்தை
தலைமுறையாய் விரதமிருக்க வைகுந்தத்தில்
சாதிப்பார் பின்னுமவர் போதிப்பாரே!

**விருத்தம்**

மன்னனே கல்வி வித்தை மனதிலுறுதியாக
சொன்னதோர் மொழிதப்பாமல் சேர்ந்திடச் செய்யாராகில்
பொன்னகர் தன்னிலுள்ள பெரியோர் சொல்லை
வின்னவும் முன்னவே நகரைவிட்டு விசையுடன்
துரத்தலாமே

**விருத்தம்**

ஆதவன் குலத்துக் கெல்லாம் அறிவொளி வாகும்
குருவேயிந்தப்
போதினில் ஏகாதசி புகன்ற நல்விரதத்தை அன்பால்
மேதினி தனிலுள்ளோர்க்கும் விருப்பமாய் அடியேனுக்கும்
ஆதரவாக மோக்ஷம் அளித்திட்டீர் களித்திட்டேனே!

.................................

1. சிலை - வில்

## விருத்தம்

சூரிய குலத்தில் வெற்றி சேர்த்திடும் ருக்மாங்க ராசன்
வாரியாய் முனிவர்க்கு [1]வரிசையாய் அளித்தானப்பால்
காரியமுடன் சீஷர் கருத்தினில் மகிழ்ச்சி கொண்டு
தேறியே [2]ஆஸிரமத்தில் சிறப்புடன் நடத்திட்டாரே!

## விருத்தம்

வசிஷ்ட்ட மாமுனி உரைத்த மால்விரதத்தை மந்திரியே
மாநிலத்து மனுக்களெல்லாம்
பரிசித்தமுடன் [3]பேரிகை கரிமேலேற்றி
பரிவுடன் தேசந்தன்னில் பரிந்து மெத்த
உசிதமுடனடித்து வந்தால் அரிவிரதத்தை
உகந்திருப்பார் மனுக்கள் மனம் மகிழ்ந்திருப்பார்.

## விருத்தம்

விதிசை நகர் தனில் வாழும் மனுக்களெல்லாம்
விசயமுடன் அரிவிரதத் துயர்ச்சி யாலே
துதிபெறவே செகந்தன்னில் செழித்து வாழும்
துலையாத சென்மமெல்லாம் சேர்க்கையாக
கெதிபெறவே மனுக்களுடன் பிராணி யெல்லாம்
குணமுடனே ருக்கமாங்கராசன் ஆக்ஞை விண்டு
கதிபெறவே விரதத்தை மறந்தால் மன்னன்
கண்டிப்பார் எவர்களையும் தண்டிப்பாரே!

........................................................................

1. வரிசை - பரிசு 2. ஆஸரமம் - சிறுகுடிகை (தவசிகள் வசிப்பிடம்) 3. பேரிகை - முரசு

தரு

ராகம் : சௌராஷ்ட்ரம் தாளம் : ஆதி

மன்னவர் விதித்தபடி வகுத்து சொல்லுகிறேன் நான்
செனங்களே உங்கள் மனதில் உறுதியுடன்
மால் விரதம் தனை செய்யும் தினங்களே
தன்னரசன் விரதம் தப்பாமல் செய்திடும் எனுங்களே
யிப்போ
சதிர் பெறும் தர்மத்தைத் தள்ளி வருமிந்த விரதங்களே
ஒப்பியே வேத புராணங்களெல்லாம் சொல்லும் மூர்த்தி
உங்கள் உறுதியாலே ஏகாதசி விரதமிருந்தால் கீர்த்தி
தப்பிதமில்லாமல் தசமி தினம் தனை எண்ணி
வெகுதயவாகவே ஒருவேளையாய்
போசனங்கள் பண்ணி சுத்தமுடன் அரிவிரதந் தன்னில்
உபவாசம்
இரவில் தூங்காமல் இருந்திட நீங்குமே பாபங்கள் நாசம்
இதமாய் எல்லோரும் [1]ஈராறு நாமனைத் துதித்து அப்போ
எங்கும் விளங்கிட உகந்த பாணர் வந்தித்து
திட்டமுடன் ஏகாதசி விரதமென்று கூறி
மாயன்[2] சேவடியில் நீங்கள் செய்யும் பணிவிடைகள் தேறி
ஆவுடன் பூசுரர் அன்புடன் நீங்களும் கூடி - நல்ல
அன்னம் புசித்து அரிகதை மெத்த கொண்டாடி
தேவர்க்கும் கிட்டாத துவாதசி திதியில் நித்திரை
தள்ளித் தேர்ந்திட நேருமே
மாயவன் முத்திரைப் பசுவாகிலும் மச்சப்
பாலனாகிலும் யிந்தப்படியே வெகு
பக்தியுடனே பரிந்து சொல்வது மன்னன் கேட்டே
அசையாமல் அனைவருக்கும் அரிவிரதத்திற்கு
அடியேன் இதை அன்புடனே செய்தாலறியலாம்
வைகுந்தம் நாடியே

.......................................

1. ஈராறு - இரண்டும் ஆறும், இரண்டுடன் ஆறும் சேர எட்டு என்க 2. மாயன் - திருமால்

ஒப்பியே மந்திரம் ஓதும் குருவேயானாலும்
உடனே உள்ளத்தால் ஏத்த
உகந்த தகப்பனானாலும் தப்பிதமாகத்
தவறிநடந்தோர் வேளை மன்னவன்
சரியான ஆக்ஞைகள் குறையாமல் செய்குவார் நாளை
இப்போது மன்னனான நான் சொன்னதே யுறுதி - இதை
எவராகிலும் தப்பி இகழ்ந்து நடந்தால் வரும் [1]விரிதி
செப்பியதோர் ஏகாதசி விரதம் தன்னை உறுதிசெய்தால்
தேவர்க்கும் யாவர்க்கும் சிறந்திடுமே இதுப் பிரீதி
எத்தனை சென்மமெடுத்து இறந்திடும் தேகம் இதில்
இஷ்ட்டமுடனே இருப்பவர்க்கு அஷ்ட்டாங்க யோகம்
சித்த முனிவர் பெரியோர் தவத்தனுபோகம் - யிந்த
தேசத்திலுள்ளோர்கள் செப்பிடும் சௌராஷ்ட்ர ராகம்
குருஉபதேசம்கொண்டு குணமுள்ள ருக்மாங்கராசன்
மருவியே மன்னரோடும் ...மன மகிட்சி காண்பர்
நவதானங்களாகப்[2] பசுமுதல் பாலகனோடும்
விரதத்தை விரும்பிச்செய்ய வேந்தனும் தொடங்கினானே!

விருத்தம்

அற்புதமாம் அரிவிரதத்தை ருக்மாங்கராசன்
ஆக்ஞையினால் அவனியிலுள்ள மனுக்க ளெல்லாம்
மெச்சியதோர் பசுக்களுடன் பிராணிகளும்
விநயமுடன் விரதமிருந்து விசய ராச
அச்சுதனார்[3] மலரடியை அன்பாய்க் கண்டு
அவனியில் அந்தகனை அனுகொட்டாமல்
உச்சிதமாய் அனைவரும் உகந்து வாழ்ந்து
உகந்திட்டார் வைகுண்டம் உகந்திட்டாரே!

............................................................

1. விரிதி - தீமை 2. நவதானம் - ஒன்பதுவகையான தானங்கள்
3. அச்சுதன் - திருமால்

## எமதர்ம ராசா வருகிற விருத்தம்

கத்தியுள்ள முடிதரித்து கண்சிவந்து
விருப்பமுடன் கரந்தனில் சூலம் கொண்டு
பக்தியுடன் பணிந்தன்று ஈரேழு பூலட்சம்
பிராணிகளை அபகரிக்கும் பாசம் ஏந்தி
சுற்றிவரும் தூதரோடும் சேனை சூழ
திசைகள் எல்லாம் நடுங்கிடவே இடபமேறி
சக்தியுள்ள தென்திசையில் அரசு செய்யும்
தீர்க்கமுள்ள எமராசன் தான் வந்தானே!

தரு

இராகம் : மத்யமாவதி  தாளம் : ரூபகம்

ராசன் வந்தாரே - எமதர்ம
ராசன் வந்தாரே!
தேசத்தில் சேதித்ததைக் கேளுமென்று
பாசக் கயறதாலே பாரிலுள்ளோரே என்று
(ராசன்...)
நாமும் நடக்கும் நடத்தைகள் பொய்யோ - நல்வழி
நாட்டார் நடக்கிறார் மெய்யோ!
காமன் எரிந்த கதை தானறியாயோ
பாலன் என்பதைக் கடந்தார் அய்யய்யோ
தீமைசெய்திடும் மானிடர் நேமமுறையை
இவர் நெறியை யறிந்து எமன் மனக்குறைகள்
எண்ணியே எங்கும் அதிர்ந்திடவே
(ராசன்...)
அரன் அயன் மால் மூவரறிந்த மட்டில் இந்த
அதிசயம் கண்டதில்லை
வரமுனிபோல ருக்மாங்கராசன் மாநில மாண்ட தொல்லை
பராசரன் முதலாய் பின் பாரிலிப் பிராணிகள் எல்லாம்

பட்டாரே என்னால் [1]சவலை
மறவாமல் இவனை நான் மயங்கியே என் பாசத்தால்
மட்டுப் படுத்தாவிட்டால் மறலிஎன்ற பேரில்லை
திரு உலாவிய சித்திர குப்தனும்
நிருபணமாய் எவரையையும் நினைக்கும் பக்தனும்
கர்ம வினைகளை கடந்த சுத்தனும்
கதிரவனைப் பெற்ற காகுத்தனெனும் ராசன்
(வந்தானே ...)

கைதனில் சூலமும் தெண்டமும் கண்டோர்
மனங்கலங்கச் செய்யும்
கிடாவிலே சிறப்புடனேறியே தெற்குத்திசை
விளங்க மெய்யுரையாக விளங்கும்
நல்லோர்களை வேண்டி மனம் துலங்க
பொய்யுரை வெம்பு கொலை செய்தாரை
பூட்டி யிழுத்துப் பிடித்து நரம்பு குலுங்க
செய்கையில்லா மனங்கள் திடுக்கிட
சீறும் விழிகளால் செகங்கள் நடுங்க
வையகத்தி லெல்லோரையும் பற்றிட
மத்தியமா ராகந்தனில் மனந் தேடி
(ராசன்...)

விருத்தம்

பூலோகத்தில் வாழும் பிராணிகளெல்லாம்
பிரியமுடன் அரிவிரதத்தைப் பெரிதாய் எண்ணி
சாலோக சாரூப சாருப்பியத்தில்
சந்ததமும் சாயுச்சியம் தனிலே சேர
கோலிழந்த குருடன் போல கூற்றுவனுந்தான்
கொப்பரையில் விழுந்த புழுப்போல் குண்ணி[2]
ஆலோசனை செய்துமே எம ராசன்
அறிவான மந்திரியிடம் கூறுவானே!

1. சவலை - இளைப்பு துன்பம் 2. குண்ணி - வருத்தமடைந்து
3. குண்ணி - வருத்தமடைந்து

## விருத்தம்

ஊழியன் படியே யிந்த உலகினில் பிராணிகளுக் கெல்லாம்
நாழியில் கணக்குப் பார்த்து நாட்டிடும் சித்ர குப்தா
வாழியாய் மக்களெல்லாம் மால் விரதமிருந்துமெத்த
ஆழியாம் எந்தன் ஆக்ஞை அகன்றிட நீதியோதான்

## நாரதர் வருகிற விருத்தம்

இப்படி தருமராசன் இருக்கின்ற சமயந்தன்னில்
தப்பிதமில்லாமல் தான் தயவுடன் எம தருமனுக்கு
ஒப்புடன் எட்டெழுத்தை உறுதியாய் நாவினாலே
செப்பிய க்ஷணத்திலந்த சேர்ந்த நாரதர் வந்தாரே !

## தரு

*ராகம் : நாத நாமக் கிரியை* *தாளம் : அட*

நாரத மாமுனி வந்தார் - எங்கும்
நாவினாலே நாராயணரைப் புகழ்ந்தார்
நாரத மாமுனி வந்தார் - ராமா கோவிந்தனே என்று - இந்த
நாருக்கு[1] இதைவிட நலமுன்டோ வென்று
பாமரர்க்கு வழிகொண்டு எங்கும் பார்த்து
**நாத நாமக் கிரியை** ராகம் உண்டு

(நாரதர் ...)

## விருத்தம்

விண்ணவ முனியே போற்றி !
வேதனார்க் கருவே போற்றி

................................

1. நரர் - மனிதர்

மண்ணினில் மடுவில் வீழ்ந்து
மயங்கிய [1]மதசுரிக்கு
கண்ணன் வந்துதவி செய்த
கருமம்போல் யிந்த வேளை
என்னுடைய கவலை தீர்க்க
இசைந்திங்கே வந்தீரய்யா

## விருத்தம்

சீஷர்கள் கேட்டாறிந்த தென்திசைக் கரசே உந்தன்
பட்டணம் தன்னில் வாழும் பரிவார சேனை யெல்லாம்
வாட்டமாய் மருளே கொண்டு மனதினில் குறையாய்
தருமம் கட்டளைத் தவறி நின்ற கர்மம்....
உண்மையாய் அரிவிரதத்தை மகிழ்ச்சியாய் இருந்து மெத்த
திண்மையாய் வைகுந்தத்தில் [2]உலகளந்தான்
தாள்சேரலுற்றார்.

## விருத்தம் (பலவரிகள் விடப்பட்டுள்ளன)

அற்புத மா முனியே யென் ஆசையெல்லாம் கேளாய்
வந்த வகை யெல்லாம் ... செய்தவினை அகன்றிடவே
........... செய்தார் மாயன்
கற்பனையாய் எமலோகம் பாழாய்ச் செய்த
கருத்துடைய நாரதரும்... கொள்ள ஒப்பமுடன்
மால் விரதத்தை இருக்கா வண்ணம்
உபாயமதை யெந்தனுக்கு உரை செய்வீரே!

.......................................

1. மதகிரி - மதம்பிடித்த யானை
2. உலகளந்தான் - திருமால்

## விருத்தம்

பெருமையுடைய மறலியே உந்தன்
மதிமயக்கம் செய்த மாநிலத்தோர்
அரிவிரதத்தின் மகிமையாலே
திறமையுடைய ரவிகுலத்துதித்த மன்னன் செய்துவரும்
விரதம் அழிக்க வென்றால் தேசந்தன்னில்
மறவுடைய பிராணிகளும் மன்னவனாணை
மறவாமல் அரிவிரதம் மனதில் கொண்டார்
நிறைவுடைய தேவரால் செப்பொண்ணாது
நீதியதை உந்தனுக்கு ஓதினேனே!

## விருத்தம்

மனமில்லா வார்த்தை சொன்ன மறிலியின் மகிமை கண்டு
இனமில்லை என்றுசொல்லி இருசெவி தன்னை மூடி
தனமதைப் பறிகொடுத்த தன்மை போல் தயங்கிச் சோர்ந்து
கனமுடன் நாமந்தன்னைக் கருத்தினால் துதித்தானப்போ

## தரு

இராகம் : சங்கராபரணம் தாளம் : ஆதி

நாராயணா வென்னுங் கோ - நாவாலே எப்போதும்
நாராயணா வென்னுங் கோ
நாராயணா வென்னுங் கோ
நாராயணா வென்று நாவா லுரைசெய்த
நரரும் சுரரும் எவரும் நரகம் சேரார்
(நாராயணா...)

........................................

1. செப்பெண்ணாது - சொல்ல இயலாது

எங்கும் நிறைந்த மூர்த்தி
ஈரேழு லோகத்திற்கும் தோதான பரம மூர்த்தி
சங்கையில்லாமல் போற்றி
**சங்கரா பரணம்** சொன்னால் போக்குவார் [1]நாஸ்தி
(நாராயணா...)

அந்தமுள்ள நாமன் [2]அபயம் அளிக்கும் தாமன்
சொந்த முள்ள தாமன் சொல்லும் ஆயிர நாமன்
(நாராயணா...)

நாரதர் விருத்தம்

முனிவரும் தருமருக்கு விரும்பியே உரைக்கும் போது
சினமதில் கோடிகாலம் சேர்ந்திட்ட பாவி யெல்லாம்
வினையுள்ளவர்களாகி மேவியே நரகம் சென்றார்
கனமுடன் உரையைக்கேட்டு கடுகியே விண்ணில் சென்றார்

விருத்தம்

அண்ணலே முனியே யிந்த அடிமையான பேர்கள்
சொன்னதோர் மொழியைத் தேவர் சித்தத்திலறிந்தீரன்றோ
விண்ணவரறிந்தால் என்னை மெத்தவும் நகைத்திடாரோ
கண்ணனார் விரதமழிக்க காரணமுரைத்திட்டீரே!

நாரதர் விருத்தம்

ஆதவன் மைந்தா இந்த அவனியில் பிராணி யெல்லாம்
தீதறவாகச் செய்த சிறந்திடும் அரிவிரதத்தை
ஓதிய மொழியாலிந்த எமலோகம் பாழய்க் கண்டோம்
வாதுறை பேசாமல் தான் மறையவனிடம் செல்வீரே!

..................................
1. அபயம் - அடைக்கலம் 2. நாஸ்தி - அழிவு

## பிர்மா விருத்தம்

சிரக்கமலம் தனிலுதித்து செகம்படைத்து
சிறந்திடவே நால்வேதச் சென்னியாக
கரந்தனில் [1]அக்ஷயார்த்த அறிவுடைய
குண்டிகையும் அன்பாய் கொண்டு
சங்கையில்லா பிராணிகளை தரணி தன்னில்
தகுந்தபடி அவரவரக்குத் தலையினேட்டில்
மங்களமாய் விதிக்குமந்த மகானுதேவர்
மகிழவே தேவர் வந்தாரே நான்முக
பிர்மதேவர் வந்தாரே!

### தரு

ராகம் : நாத நாமக்கிரியா தாளம் : ஆதி

தேவர் வந்தாரே - திவ்ய மங்களம் போல
தேவர் வந்தாரே!
ஆவலுடன் மறலி அலைந்து வருவதாலே
(தேவர்...)
வேதத்தைக் கடந்தோன் பிர்மானந்த லோகத்தில்
நடந்தோன்
பூதல மண்டபிண்டமெல்லாம் கண்ட ஆதவன் - மதி
பூண்ட அமரர் மகிமை கொண்ட கீதப்பிரியன் என்ற
கீரவான் மகனை உண்ட
நாதமறிந்து நின்ற நவசித்தம் துதிகொண்ட
வேதமூவர்க்கும் முதல்வன் வேலையில் பள்ளி
விடுத்தோர்க்குப் புதல்வன்
பூவை வாணி மணாளன் பிரீதியுள்ள கோலாகலன்
யாவர்க்கும் அநுகூலன் அமரர்க்குள் குணசீலன்

..........................................

1. அக்ஷயார்த்த - குறைவுபடாத
2. குண்டிகை - தண்ணீர் வைக்க உதவும் சிறிய பாத்திரம்

தூவிய மலர்த்தாளன் சதுர் வேத பரிபாலன்
மேவிய சக்கர வாளன் விசயம் கொண்டிரு தோளன்
(தேவர்வந்தாரே...)
சீஷர்க்கு வெற்றி தேவாதிதேவர் [1]சிருஷ்டிக்கும் புத்தி
மட்டில்லாப் பகழ் சோதி வானவர்க் கிவர் ஆதி
நட்டமில்லாத சாதி நாதநாமக்கிரியை ஓதி
நெட்டுடன் சொல்லும் நீதி நிறைந்த தவத்தில் வேதி
வட்டமதான வாதி....ஓதி
(தேவர்வந்தாரே...)

## விருத்தம்

வெற்றியுள்ள மாமுனியும் விருப்பமுடன் மொழியுரைத்து
விண்ணில் சேர்ந்தார்
சத்தமுடன் குத்துவதும் பாசம்சூலம் சுருக்குடனே
தானெடுத்து சூழ்ந்து நின்ற
சித்திரனார் [2]கயத்தாருடன் சேனைசூழ திறமுடனே
முடிதரித்து தேசம் விட்டு
சித்தியுள்ள பிர்மாவின் சபையை நாடி திட்டியுள்ளான்
சத்திய லோகம் தான் கண்டானே!

## விருத்தம்

வேதனே போற்றி போற்றி! விமலனே போற்றி போற்றி!
ஆதரவாகவேதான் அண்டர்க்கு முதல்வா போற்றி!
சாதகமாக இந்தத் தரணியைப் படைத்தாய் போற்றி!
நாதமும் பொருந்தி நிற்கும் நான் முகா போற்றி போற்றி!

..............................

1. சிருஷ்டி - உற்பத்தி
2. கயத்தார் - துணைவர்கள்

## பிர்மா விருத்தம்

[1]அருக்கனுக்குகந்த மைந்தா அந்தகா ஆசிர்வாதம்
பெருக்கமாய் உந்தனுக்குப் பொருந்திய தரும நீதி
வருக்கமாம் பதியையும் விட்டு வந்திட கர்மமேது
உருக்கமாய் இங்குவந்த உண்மையை உரை செய்வாயே!

## எமதர்மராசா - விருத்தம்

அய்யனே பூலோகந்தன்னில் வாழும் ஆதவனார்
குலத்துதித்த அரசனான
மெய்யனே விதிசாபதி ருக்மாங்கராசன் விருதுடனே
அரிவிரதத்தை விரும்பிச் செய்து
வையகத்தில் மனுக்களெல்லாம் மன்னனாலே
மனமகிழ்ந்து அரிபதத்தில் மகிழ்ந்து சென்றார்
தீமையை வெல்லும் என்னுடைய ஆக்ஞை இல்லை
தென்திசை பாழான விதம் செப்புவேனே!

## தரு

ராகம் : பைரவி தாளம் : ரூபகம்

அந்தமாகவே அவனியிலுள்ள மானிடரெல்லாம்
அரிவிரதத்தால் சிறந்தார் சாமி
விந்தையாகவே விதிசா நகரினை யாளும் வேந்தன்
ருக்மாங்கதன்
விதிக்கும் மொழியைக் கேளும்
தொந்தமாய்ச் [2]செனித்து சோர்ந்த பிராணிகளும்
தொடர்ந்தார் வைகுந்தத்தில் எந்நாளும்
(அந்தமாகவே...)

....................................

1. அருக்கன் - சூரியன் 2. செனித்து - பிறந்த

ஆதிஅந்தனே உந்தன் ஆக்ஞைப் படியே யிந்த
அவனியில் பாவிகளை நான் அறிவேனே
சோதி பிர்மாவே எமன் என்னுடைய சூலத்தினால்
தென் திசை தலைவனாய் செய்வேன் நானே!
மேதினிதனிலிந்த விதிசா நகரையாளும்
வேந்தன் மனதையும் தெரியேனே!

தரு (சுவடி சிதிலம்)

ராகம் : பைரவி தாளம் : அட

அந்தமாகவே அவன் நினைத்த படியே யுந்தன்
தனத்தையும் குறைத்தேனே! (அந்தமாய்)
நாடும் எமலோகத்தை நடத்த பாபி யில்லாமல்
மோடி பிடித்த சித்தினார்க்கை
ஏங்கி [1]விசாரமிட்டார் சொன் னோம்
எமதூதர்களைப் பார்த்து சிந்தை தேங்கியவர்
நரக லோகம் எல்லாம் இளைத்துப் போச்சே
ஓடும் பசுவைக்கண்டு ஒளிக்கும் வேங்கையைப் போலே
உத்தமனே யார்க்கும் நாக்கு புளித்துப் போச்சே
அதிகமாச்சே
விரத நில தேவரும் மண்ணிலெவரும் தவசினால்
முக்தியடைந்தா ரல்லோ வீரம் மன்றினில்
பாவியர்க்கு மாவிரதம் தவமில்லை
அதிகாரம் உந்தன் மாநகரம் தனில் நின்றுரை
சிவனாருரைத்த[2] தெந்தன் சென்மத்துக்கும் போதும்
வீரம் ... சால அரிவிதரத்தின்
அடைந்தோர்க்கிது பழித்தார்ப் போலாச்சு திந்த
பைரவி ராக சுரம்
(அந்தமாகவே...)

................................

1. விசாரம் - வருத்தம்
2. சிவனார் உதைத்தது எந்தன் சென்மத்துக்கும் போதும் என்பதுஎமன் மார்க்கண்டேயனின் உயிரைக்கவரச் சென்ற போது லிங்கத்திலின்றும் வெளிப்பட்ட சிவன்எமனை உதைத்து - மாரக்கண்டேயனைக் காத்த கதை

## விருத்தம்

மன்னவன் ருக்மாங்கன் தன் ஆக்ஞை தன்னை
மாநிலத்தோர் தவறாமல்
மால்விரதத்தை சொன்னபடி விரதமிருந்து
சொர்க்கம் சேர்ந்தார்
மண்ணுலகில் மறலியென்ற மகிமையெல்லாம்
வகையில்லா பழங்கதை வகைபோலாச்சு
பின்னமுடன் மனமுருகி வந்தேனய்யா
விதி செய்வீர் எந்தனுக்குப் பதிசெய்வீரே!

## பிர்மா விருத்தம்

தருவதை யறிந்து [1]காலாந்தகனே அரி விரத்தைப்
பெருமையாய் ருக்மாங்க்ராசன் பிரியமாய் இருந்தானல்லோ
வறுமையாய் அவனை வெல்ல வகையது மெத்த உண்டு
உரிமையாய் உகந்துன் எமலோகத்திற்கு நடந்திடீரே!

## விருத்தம்

நாரதனார் உரையைக் கேட்டு வெதும்பியே எமராசன்
சாதகமாக வந்து சதுரங்க சேனை யெல்லாம்
ஏகமாய் என்றுரைத்திடாமல் எமலோகம் தன்னை நோக்கி
நூதன பாண்டத்துள்ளே நுழைந்திட்ட ஈபோலுந்தன் உரை
மெத்தவே உரைக்கின்ற கூற்றுவன் எமலோகத்தில்
திறமுடன் சென்றபின்பு...
............ தேவருண்மையாய் யோசித்தாரே!

........................................

1. காலாந்தகன் - எமன் - கூற்றுவன்

## மோகினி விருத்தம்

வானவர்கள் மங்கை மோகினி மாதரசே!
[1]பானுவுடன் நாலிலிரு கோடி சேர்த்து படைத்தாரே
நம்பிபூண்ட அங்கையர்க் கண்ணி விழி
கண்டோர் நிலை மாற
மானமுடன் மோகினிப் பெண்ணாக மதித்த
எந்திரம் பதித்த சிற்றிடையது பிடியடங்க
அந்தர வானுலகியர்கள் அழகிலொருத்தி
மறையவனருளினாலே சந்திர பிம்மம் போலே
சபையில் மோகினி வந்தாளே!

## விருத்தம்

வான்பிறை நெற்றியும் வகையான வில்புருவமும்
வையகமதனில் குவளை மலரொத்த நாசி - வடிவான
செம்பவளத்துக் கொப்பான வாயிதழும்
குலைமுத்துப் பல் வரிசையும்
குவிந்ததொரு தாள வாயும்
குணமுள்ள செவிகளும்
வீராசை சங்கத்துக் கீடான கண்டமும்
இசைந்த தொரு வாயுமே
இஷ்டமுடன் [2]புறக்கமதனை ஒத்த மார்பினில்
......துதிக்கை வாகாய் கரங்களின்
வைர நாக மொத்த விரலும் - வடிவான
ஆற்றில் சுழி கொண்ட தொப்புளும்
தேவர்கள் மெல்லியைக் கண்டுடன் மெய்யகல
மின்னலிடையும்
வீசு மத ராசன் சிறு வாசன் உவக்க
அண்டர்கள் மயங்கிட நின்ற தொரு
கன்னிகள் இவள் காலடிக் கீடாகுமோ

.........................................
1. பானு - நிலவு 2. புறக்கம் - முறம்

அருகான கரணக் கால் வளை வந்து முகந்தாளும்
மண்டலம் ஆளவே மால் விரதம் செய்திடும்
மன்னனை செயிக்க வேண்டி மாறாத மையலுடனே
நடையில் அன்னம் போல் எண்ணவும்
கண்டவர் மயங்கிட இந்திர முகவீணை
காட்டியே மீட்டிவந்த....விண்ணுலகில்
கன்னி மோகினியும் வந்தாள்

**தரு (ஏடு சிதிலம்)**

ராகம் : புன்னாக வராளி தாளம் - ஆதி

மோகமாகியே இந்த மோகினி வந்தாளே !
மந்தகாச மான மகிமை மனதில் கொண்டு
அந்தரப் பறவை சூழ் சுந்தர னுற்ற
மந்திர விந்தையாகப் பார்க்க
இந்திர சாலங்கள் மெத்தவோடி
சித்திர ரேகையாள் வெற்றியும் விசித்ரமான
தென் பிறைக் கிசைந்த நெற்றியும்
நாகரீகமான புத்தியும்
மின்னலிடை போலிடை மேனிதுவள முகத்தைக் கண்டு
விண்ணிலுள்ளோர்கள் உடை பொறபாதத்தில் துவள
கண்டு பூவைப் போல கின்னரி முகத்தில் கூடி
கேலியான லீலை தேடி **புன்னாக வராளி** பாடி
...தன்னைக் கொண்டாடி மோடி;
(மோகமாகி...)

விருத்தம் (சிதிலம்)

மோகினி...அந்தம்,,,முதலாம்
வேதந்தனை அகிலமும் அறிந்ததே ...கன்னி
சாதியில் கள்ளியாகச் சபைதனில் வரவழைத்த
சேதியை எந்தனுக்கு திருஉள்ளம் பற்றுமையா

தரு (ஏடு சிதிலம்)

ராகம் - சாவேரி　　　　　　　　　　தாளம் - ஆதி

அண்டநாதனே [1]தெண்டம் சாமி அண்டநாதனே!
ஆதாயமாய் உன்னை அடுத்தேன் சாமி
(அண்டநாதனே...)
வேத நாதனே மிகவும் நாடினேன்
நாதமாம் சாவேரியைப் பாடினேன்
(அண்டநாதனே...)

**பிர்மா விருத்தம்**

பூவையரெல்லாம் மெச்சக் கேளாய்...
தரவான ருக்மாங்கராசன் கனத்ததோ ரேகாதசி
ஆவலாய் விரத மிருந்து அழித்திட்டார்கள் எமலோகம்
செஞ்சடை சிவனானாலும் ஓதியே தவசு செய்யும்
உயர்ந்த.....

தரு

இராகம் : காம்போதி　　　　　　　　　　தாளம் : ரூபகம்

வேந்தன் நெற்றிப் புருவம் களமாக
தேவ கன்னி சுற்றி வலமாய் வந்து
வரைப்படி வணங்கிடச் செய்வேன்
எத்தனையோ தன்னை எப்படி நடப்பார்த்தான்
வருணன் வாட்ட குபேர தேவன் வந்து எனைக்
கண்டார்கள்.
தேவ துந்துபி நாரதர்கள் தினம் கானங்கள் செய்தாலும்
எந்தன் புயங்கள் கண்டால் இடி தாங்கார் எனச் செய்வேன்

..................................
1. தெண்டம் - வணக்கம்

யாராகினும் எந்தன் [1]வாலைப் பருவம் கண்டால்
அலங்கோலமாகிப் பின்னும் அடியில் வீழ கண்ணால்
செய்வேன்
(தேவ...)
சேயேனென் தண்டைச் சிலம்பு கண்டால்
பிணி அநியாயம் செய்வேன்
என்னை ஆதரிப்பாய் கண்டேன் தேவரீர்
(தேவ....)
என் [2]அங்கையர் கண்ணால் பார்த்தால் நடப்பரோ
கொங்கை ரெண்டையும் கண்டால் கூடுமட்டும்
மயங்குவா ரென்றெ ...
ஆராகிலும் மன்னர் மன்னர் அரச ரெவர் எனக் கெதிர் :

### பிர்மா விருத்தம்

கன்னிமோகினியே யிப்போ கருத்துடன் சொல்லக் கேளாய்
மன்னன் ருக்மாங்கராசன் மந்தர கிரிக் கோட்டை
இங்கிதமாக ஏகிட உகந்தவர் வருவாரங்கே

### தரு

இராகம் : அசாவேரி ராகம் : திரிபுடை

மானே நானே சொன்ன வசனம் நாடுவாய்
மனம் கொண்டேன்
தானே அறிந்து செய்வதேதும் புரியாமல் (மானே...)
கண்ணே விதிசையாளும் காவலனும் மெள்ளக் காண

..........................................................

1. வாலைப் பருவம் - இளமைப்பருவம்
2. அங்கையர் கண் - மீன்போன்ற அழகிய கண்கள்

அக்ஷணத்தில்[1] கண்டார் மோகம் கொண்டார்
மன்னரே மாநிலந்தன்னில் மால் விரதம் தனைத் தள்ள
மங்கும் நரகமெல்லாம் மனுவாய் நிறைந்து கொள்ள
பண்பு மில்லாமல் போக எங்கும் மகிழ்வேயாகி
(மானே...)

மண்ணில் விண்ணில் எங்கும் மகிழ்வாகி வரிசையாக
என்முக வந்த...தாம் யோக அரசன் வேட்டையாடி
அடுத்துன் மேல் மையலாக
கண்ணில் கண்டனம் பின் [2]கடுகியே ஏகி யுன்பால்
வாங்கவன் கனம் போக
தண்ணீர் காணும் முன்னே தாம்பால் மொள்ளாதே
தனதாய் அங்குவந்தால் தத்துவமாய்க் கொள்ளாதே
கோதை யான் சொன்னகுணமதைத் தள்ளாதே !
(மானே...)

நத்தும் அரிவிரத மிருந்து பாலகன்
சிர மரிந்து தா!வென்றாலே
சித்தமதை தயவாய் செய்வாய் நீ தாறு மாறு
செகமெங்கும் குறிப்பாய் தெறிப்பாகவே நீ கூறு
எய்தும் வகைக் கெல்லாம் நீ இடம் கொடாமல் நாடு
இணங்கி உன்னுடனே இருக்க கொண்டாடி
மற்று மன்னர் வணங்கேனென்று வாடு
மகிழ்ந்து அசாவேரி மயங்கும்படி பாடு
(மானே...)

## விருத்தம்

வானுலகத்தில் வாழும் மறையவா சொல்லக் கேளாய்
மாநிலந்தன்னில் ருக்மாங்கதன் ஏகாதசி தன்னில்
நாநில மாந்தர்கள் நடந்திடும் மாண்பதை அழிக்காதே
தேனிலும் இனிய மொழியா லிப்போ தேவரே
போய் வாரே னென்றாள்.

..........................................................

1. அக்ஷணம் - அதேநேரம் 2. கடுகி - வேகமாக

தரு

இராகம் : நாத நாமக்கிரியை                                    தாளம் : ஆதி

அடியாள் நான் போய் வாரேன் சாமி
இருடியாம் மால் விரதந்தன்னை கெடுக்க நான் நேமி
(அடியாள்...)
விதிசை ஆளும் மன்னன் நாணிடா
செப்பமாய் கூற சதிசெய்து விரதம் தள்ளி வாட
எனக்குச் செயமாக நாதநாமக்கிரியை பாட
(அடியாள்..)

தரு

இராகம் : துவஜா வந்தி                                    தாளம் : திரிபுடை

ஏது உபகாரங்கள் செய்து நீ
ஏகாந்தம் தனையறிந்து யிப்போ
குறைகுண நம ளென்னை இசைத்தான் மலை காக்க
சாம[1] கானங்களும் தோற்க சங்கீதம் சொன்ன
தடத்தையே வந்து பார்க்க
கான கிரணங்களை விட மேவி நகரமே விட்டு
சோம னொளிவுகள் தொட்டுதுவஜாவந்தி ராகம் கேட்டு
நேமமுடன் ஆயிரம் நாமத்தைச் செய் எங்கும்
ஓமமுடன் விரதமிருந்து க்ஷேமமொடு உகந்த மன்னன்
காம சரசம் பொருந்தி [2]தாமசமில்லாமலே
வீமன் எந்தனைத் தேடி பூமகன் சொன்னபடி

.......................................

1. சாமகானம் - சாமவேதத்தின் இசையொலி
2. தாமசம் - தாமதம்

விருத்தம்

சிந்தையில் மகிழ்ச்சி கொண்டு சேர்ந்த மோகினி கையில்
விந்தையாய் வீணைதன்னை மீட்டினாள் மலையில் மேலே
........தாக்கிய கண்களாலே
முந்தியே கதைகள் சொல்லி மேவியே விரைந்து
கொண்டாள்.

ருக்மாங்கதன் வருகை

தரு

இராகம் : சங்கராபரணம் தாளம் : ஆதி

அன்னமே உன்னை ராசர் அழைத்துவரச் சொன்னார்
அன்னமே அன்னமே உன்னை - (ராசர்..)
தேசமெல்லாம் புகழ் செயமான கீர்த்தியாலே
வாசவர் நிகரான அடியேன் ருக்மாங்க ராசன்
அரிதான மேதினியில் அம்புவி கூடியே
அண்டத்துப் பாவைகள் அழகாகப் பாடியே
சிறிதான தெண்டனென்று சிநிதையில் நாடியே
சித்தம் வைத்து நீயும் சுறுக்கிலே ஓடியே....
விண்ணினில் இந்துவும் வெண்தணலாய்ச் சுடும்
வீசியதென்றலும் மீறா மையல் கொடுக்க
கண்டுமனம் மயங்கி தேனும் கசந்திடுதே
தெய்வகுறையோ என் தேகம் மிகக் களைத்திடுதே
கும்ப தனங்கள் இரண்டும் பித்தமளிக்க
இதழ் வாய்க் கொஞ்சி நிகழ் அரம்பையர் என்றும்
சிந்தை நெகிழ்ந்து மயங்கி நேராகவே எண்ணிமயக்க
(ராசர்...)
சாந்தமும் அழகு சந்தம் அறிந்து
கண்ட சரத்துடனே கருதி எங்கும் திரிந்து

கண்டு தவித்தேன் எங்கும் கண்ணீர்களம் நிறைந்து
(ராசா...)

உள்ளது சொல்லி உருகுகிறேன் என்னை
உங்களைத் தெய்வம் உகந்தது வோ
எனக் குள்ளமாய் எந்தன்மேல் தயவுபண்ணி
சங்கராபரண ராகத்தை எண்ணி
(ராசா...)

மோகினி தரு

ராகம் : பிலஹரி தாளம் : சாபு

அடடா மன்மதா என்னை அலையச் செய்ய உன்னால்
அம்பவிட்டாய் திசை உன்னை
எனை அணைத்தால் கோணுமோ
வீசிய தென்றல் என்மேல் வந்தடிக்க
கண் இணைந்தாவது மோசமோ

படைக் களத்தில் வந்து ஒப்பாரி பேச வாராய்
சொல்லச் சொல்ல நீயும் [1]துரைத் தனங்களைச்
செய்கிறாய் இன்னேரம்
அன்னிதம் செய்லாகாது சொன்னேனிது நியாயம்
சப்த கன்னியை மறவேனிப்போ ராசன்
வேந்தன் கவலை அறிந்தேன்
சொல்லும் கனமான பிலஹரி ராகம்
கருத்தில் எல்லோரும் ஆட முலை மீதில்மிக
மீறித் துவண்டதனால்
மெத்த மையல் கொண்டேனே
பாரோர் புகழும் ருக்மாங்க ராசனைக் கண்டு
மருவ[2] வரச் சொல்வாயே.

(ருக்மாங்கதனின் குடிமக்கள் வருதல்)

..........................................

1. துரைத்தனம் - அதிகாரம் 2. மருவ - கூடியிருக்க

தரு

ராகம் : எதுகுல காம்போதி தாளம் : ஆதி

மருவ நான் விரக மாகி னேன்
ஓ மயிலே! ஓ குயிலே!
மருவ நான் விரக மாகினேன்
குயில் கூவுதே உந்தன் வரவை ஒலித்து
ஓங்கியே தென்றல் புயல் போல் பாயுதே
தாங்கிய இரு கொங்கையில் மதி மருவ
தென்றல் நலமோடு வீசுதே - எந்தன்
தேகமுழுதும் மதிமயங்கி தினமும் கூசுதே
பரண மருவியே.மந்த்ராசலம் தன்னை நாடியே
வேகும் மகிட்சியால் என்னை வரிசையாய் - வந்து
அறிந்தெவரும் எதுகுல காம் போதி பாடிஎன்னமாய்
இருப்போமென்று ஏங்கியே
ஏங்கியே குடிகளும் தான் வந்தாரே!
வேங்கை புலிகளுடன் மான்களும் செல்ல
வேடிக்கையாக கூடிக் கொண்டு இனி
தூங்கவே மாட்டோமென்று சொல்லி
தாரணிக் குடிகள் தானும் வந்தாரே!
பண்ணி செந்நாயுடனே பார்தனில் மான்களை அழிக்குது
கேள்வியுமில்லை என்ன செய்வோமென்று சொல்லியே
மெத்த ஏங்கியே குடிகளும் தான் வந்தாரே!
புன்னாக வராளி ராகம் எல்லோரும் புவிதனில்
பாடிக்கொண்டு
நாமென்ன செய்வோமென்று மாநிலம் துடிக்குதென்று
தான் வந்தாரே!

### விருத்தம்

சீரணி உலகுக்கெல்லாம் சேர்ந்திடும் மன்னா போற்றி
ஆரண்யம்[1] தன்னிலிருந்து அகன்றிடும் மிருகங்கள் வந்து
காரணி காவை யெல்லாம் கதிருடன் அழிக்குதிப்போ
ஏரணிக்கு வந்து நாங்கள் இளைத்திங்கே வந்தோ மையா.

### ராசா விருத்தம்

தென்திசை வாழுமிந்த தேசத்து குடிகளே கேளீர்
மிரண்டிடும் மிருகங்களாலே மனதுகள் மிகவும் நொந்து
அரண்டிட[2] வந்தஉங்கள் கவலையைத் தீர்க்கிறோமே
வேண்டியசேனை யோடே யங்கே வேட்டைக்கு
வருகலா மோ-.

### ராசா விருத்தம்

சிந்தையில் மகிழ்ச்சியாலே சிறந்த மந்திரியே கேளாய்
சுந்தரமாய்க் கானகத்தில் சொந்தமாய் விளையாட
விந்தையாய் முடிகள் சூடி மேதினி தன்னை ஆள
சொந்தமாய் [3]சுதனையிப்போ சீக்கிரம் அழைப்பிப்பாயே !

........................................

1. ஆரண்யம் - காடு 2. அரண்டிட - பயப்பட 3. சுதன் - மகன்

## விருத்தம்

விந்தையாய் எத்திசையும் புகழும் கீர்த்திக்கு
வந்ததோர் ருக்மாங்கராசன் புத்திரனாய் ஈன்றபாலன்
பாகுமேலது [1]ராயம் வைத்து நேர்த்தியாய் நேராயிங்கே
தேகத்தோர் உவகை பூண்டு தத்துவ மொழிகளுரைத்து
தர்மாங்கதன் தான் வந்தானே!

### தர்மாங்கதன் வருதல்

### தரு

இராகம் : கல்யாணி தாளம் : ஆதி

தாரணியாளும் ருக்மாங்கதன் சபையில் தர்மாங்கதன்
வந்தானே
ஏறணியாம் ஏகாதசி விரதத்தை நாடியே ரூப
சத்துவத்துடன் உகந்து மிகக் கொண்டாடி
கூறணி சேர்ந்த வீறணியாய் அமர்ந்து
பூரணனும் லட்சுமி நாரணனும் அளந்த
தாரணி கண்ட சரத்துடனே காதினில் குண்டலமிட்டு
கனக மணி பதித்த கையில் கங்கணமிட்டு
மறையோர் நியமமிருந்து கும்பிட்டு
மயன் திருவடியே வணங்கி மனதிலிட்டு
அண்டர் முனிவர் அகமது துடி துடிக்குமது
...பணிந்துடனே...அவர் சொரிந்திட
பூவையர்களெல்லாம் புகழ்ந்து உகந்திட
சொர்ணமுடியில் கோளரிய [2]பிரபை விளங்க
சூழ்ந்த மந்திரிகள் சொல்லும் மொழி துலங்க
எண்ணமெல்லாம் புவியில் எங்கும் செயம் விளங்க
இருபுரத்திலும் இவர்களெவரும் கைகளைத் தாங்க

........................................

1. ராயம் - கிரீடம் 2. பிரபை - ஒரு ஆபரணம்

மன்னவர்களெல்லாம் மகிழ்ந்து பாடியே
வானவர்கள் சபைதனில் வாடியே
சொன்ன சொல் தவறாமல் சூடியே
சுகிர்தமுள்ள கல்யாணிராகம் பாடியே
சாரணி கர்மம் தேடியே

## தர்மாங்கதன் : விருத்தம்

அய்யனே போற்றி போற்றி
அரசனே போற்றி போற்றி
விமலனே போற்றி போற்றி
கையனே போற்றி யெந்தன்
கர்த்தனே போற்றி போற்றி
தய்யரே போற்றி யென்று
திருவடி பணிந்திட்டா ரே!

## விருத்தம்

தவத்தினால் கண்டெடுத்த தர்மாங்கதா சொல்லக் கேளாய்
இகத்திலே ஏகாதேசி யிஷ்டமாய் விரதமிருந்து
மகத்துவ[1] மறியா இந்த மாநில மிருகத்தை எல்லாம்
க்ஷணத்தினில் வேட்டையாடித் திரும்பிநாம் வருகுவோமே!

## தர்மாங்கதன் விருத்தம்

ராசனே ராசகோவே நமது மாநில மிருகத்தை நானும்
பாசமான வேட்டையாடிப் பரிவுடன் வருவேனே
நேசமாய் அனுப்பிவைத்தால் நிச்சயமாக இந்தத்
தேசமே ஆண்டு செங்கோல் சேர்த்துவீர் சேர்த்துவீரே!

.............................................

1. மகத்துவம் - பெருமை

### விருத்தம் - வேட்டைக்காரர்

ஆரண்யம் தன்னில் வேட்டை ஆடி வாரேன்
அவனியெல்லாம் முடிசூடி அரசை ஆண்டு பேரணியாய்
ஆரினும் பேருண்டாக பெருமையாய் மன்னரெல்லாம்
போற்றி
.....இகழாமல் நீ பட்சமுடன் பாரை யாண்டிருப்பாயே!

### விருத்தம்

அஷ்டதிக்குக் கெல்லாம் .................
இஷ்டமாய் அடவி தன்னில் இசைந்து நாம் வேட்டையாட
கட்டளைப்படியே அந்த .....வேட்டைக் காரர் தம்மை
திட்டமதாக இங்கே க்ஷணத்தினில் அழைப்பிப் பாயே!

### விருத்தம்

.....இந்நிலைத் தனவே யெங்கும் ...தன்னில்
பையவே கானம் விட்டு பதறியே ஓடி வந்து
உய்யவே [1]சல்லடம் தொட்டு உருட்டியே முழித்துக்
கொண்டு
ராசன் முன்னே வேட்டைக் காரரும் தான் வந்தாரே!

### தரு

இராகம் : கல்யாணி                                   தாளம் : ஆதி

வேட்டைக்காரன் வந்தான் - விநோதமாக
வேட்டைக்காரன் வந்தான்
காட்டில் மிகுந்த கரடிபுலிகளைக் [2]கண்டிக்க மன்னனும்

.........................................

1. சல்லடம் - காலில் அணியும் உடை
2. கண்டிக்க - ஒழிக்க

கடுகி வரும் முன்னே ஓட்டமாய் ஓடி ஒருகும்பலாக
(வேட்டைக்காரன்...)
வனத்தெதிர் கண்ட மிருகங்களை துண்டங்கள் செய்யவே
மெய்யதாய் காட்டினில் வேட்டையாடியே மேவும்
மேகலை
சிங்கம் கவரிமான் வேகத்துடன் காட்டுப்பன்றி செந்நாய்
மேட்டுமையாகவேதான் நகராளும் வேந்தன்
வருமுன் [1]குலாந்தக னாகவே -
(வேட்டைக்காரன்...)
அல்லும் பகலுமாக அழிக்கவே என்று நாடி
அன்புடன் கல்யாணி ராகம் தனைப்பாடி
(வேட்டைக்காரன்...)

## விருத்தம்

வேட்டைக்காரரே கேளீர் மேதினிப் பயிரை யெல்லாம்
தாஷ்டிக[2] மிருகங்கள் வந்து....
வேட்டைக்கு யேகவேணும் யென்று நீங்கள் ஓடி
சடுதியில் வலையைக் கூட்டி கலைத்திடீர் கலைத்திடீர்!

## விருத்தம்

கதிர் குலத்துதித்த மன்னன் ருக்மாங்கராசன்
கனகமணி திறமிகவே துளங்க சேனைசூழ
தரணியுள்ள மன்னரெல்லாம் தழைத்துச் சேர்ந்து துதிக்க
செழிப்புடனே மிருகங்கள் திரியக்கண்டு
அதிருடைய மன்னவரும் மனதுதேறி அகம் கொண்டாரே!

.......................................

1. குலாந்தகன் - குலம் முழுதுமாக அழிப்பவன்
2. தாஷ்டிகமாக - கர்வம்கொண்டு

தரு

இராகம் : சௌராஷ்ட்ரம் தாளம் : ஆதி

வேட்டையாடினான் - வேந்தன்
வேட்டையாடினானே
விந்தையான வனந்தனிலே வேட்டையாடி
ஆட்டமாய் சிங்கம் புலிடிகரடி செந்நாய்
வாட்டிடவே வேலாலே
(வேட்டையாடி...)

அதிர்வெடி வாங்கி ஆகாச பாணத்தால்
எக்ஷகாரங்கள்[1] செய்து - வந்த சதிரோங்க
சிறப்பும் சொல்லும் மன்னவர்களும்
தானே மனது களைய
கதிர்குல வேலனைக் கண்டு வானவர் தானவர் வணங்க
காந்தாரி மாரிகள் பெய்ய மெத்த சதிர்பெறவே
நாட்டில் தழைக்கும் பயிரழித்த
தாரணி மிருகங்களை எல்லாம்
(வேட்டையாடி...)

கானகக்காரர்கள் கைக்கணை நாட்ட
கண்டுமே மிருகங்கள் கனைத்தே சத்தமிட
மேலே வானோர் அந்தனர் வந்துமே வியந்திட்டார்
இந்த மாநிலமாளும் மகிபன் ருக்மாங்கதன்
வரிசையாய் திட்டமிடக் காட்டில்...மன்னர்
சுருக்கிடப் பூட்டினாரே [2]வாளிமாட்டி துணித்திட
(வேட்டையாடி...)

மட்டுமில்லாத மாநில மதனினெல்லாம் மகிவாடி திசை
எட்டும் புகழ தினகரன் ஒளிவுபோலே தேறி
மந்தாரத்தின் மேலே கடுகி மன்னே குடிகளெல்லாம்
காத்திரமாக எல்லோரும் கூடி மனக்
கட்டுப்படாமல் தைரியமான தகுந்த சாரணர்...
(வேட்டையாடி...)

.................................

1. எக்ஷகாரம் - எக்காள ஓலம்
2. வாளி - அம்பு

வேட்டையாடி மன்னர் விந்தையாய் மிருகங்கள்
புகழ் [1]தளங்களைப் புரிந்து தளங்களெல்லாம்
தாஷ்டிகமாய் மன்னன் தனித்திடும் வேளைகண்டு
தேட்டுமையான வாமதேவருந்தான் வந்தாரே !

தரு

இராகம் : தோடி தாளம் : ஆதி

வந்தாரய்யா வாமதேவர் வந்தாரய்யா
சொந்தமாகவே வகையுடன் தானவர் அருளாளல்
தனைச் சேர வந்தார்
வெங்கதிர் நிகர்த் தோளை விரித்து மேலே போர்த்து
துலங்குகின்ற பாங்குடனே செபதவம் ஏற்று
பஞ்சாட்சரம் ஓதி பக்க [2]ஓரைப் பார்த்து
கைகளில் தண்டு கமண்டலம் கொண்டு
பண்டத்தில் விளங்கிய கட்டியங் கொண்டு
மெய்யதாய் மால் விரதம் விரும்பினாய் என்று
மேதினியில் உந்தனுக்கு நேருண்டோ என்று
வந்தார் மன்னர் அருகினில் வந்து மனதுடனின்ற
வரச்சொல்லி நாடி - வந்தனத்துடன் தோடி
ராகத்தைப் பாடி - வரிசையாய் மன்னன்
மகிழ்ந்து கொண்டாடி
(வந்தாரய்யா...)

**விருத்தம்**

தேறி..... ... .. ..போற்றி
காரியமாக என்னைக் காப்பாய் நீ கடனே போற்றி
சீரிய குலத்துதித்த சிறந்த ருக்மாங்க ராசனே
பாராய் தேவரீர்க்கு பணிவிடை தெண்டநானே !

.......................................
1. தளங்கள் - இடங்கள் 2. ஓரை - நேரங்காலம்

### வசனம்

அகோ வருங்களய்யா சுவாமி ! என்னோடே ... மெல்லாம் நன்றாய் தெரியப்பட சொல்லவேணும் சுவாமி வாம தேவா !

### வாமதேவர் வசனம்

.........ஆண்டவனே ! உந்தன் சரித்திரம் சொல்வேனிப்போ ! தயவுடன் வெசியில் கொண்டால் பக்தர் வாழும் ...பாரில் ...பிராணிக் கெல்லாம் வெற்றியாம் முக்தியான நல்வரம் சொல்லுவீரே

### வாமதேவர் விருத்தம்

(இதுமுதல் சுவடியில் ஏடுகள் மிகவும் சிதலமாகி படிக்க இயலாதபடியும் - எழுத்துக்களை தெளிவுபெற இணைக்க இயலாதபடியும் உள்ளதால் ஆங்காங்கே உருவாக காணயியலும் வார்த்தைகளை மட்டும் வரியாகக் கொடுக்கப்பெறுகிறது)

நின் பணியும் - தேம்பினேனே - எந்தனுக்கின்பம் உன்புறமாகும் பண்டினிலே எம்பெருமானானர் எம் - செம்பொன் சாற்றுமுன் பதத் தழைத்தனன்.

### ராசா விருத்தம்

சொல்லுவேன் நிறைந்த - பணிந்து - ருக்மாங்கதன் கரங்கள் கூப்பி துல்லியமான் தேவரீரும் சேர்ந்திட கிருபைகள் தந்தால் உள்ளமும் மகிழ்ந்து நானும் உயர்ந்திடும் பதவி சேர்வேன்.

### வாமதேவர் விருத்தம்

நீ வேண்டியே ஞாயம் விதித்திடீரே - வேதியேரோடே உகந்திருந்தாய் அன்புடைய அந்தனரும் அரிவிரதத்தை அனுதினமும் செய்து வந்துற்றார் நீயும் உன் பிறப்பும் மன்னவனாய் ரவி குலத்தில் உதித்ததுவும் மாயவனார்

விரதத்தாலே - இதைக் கேட்டு அங்குள்ளோரும் - யான் யிப் பிறப்பால் - பிறவியில் -

### ராசாவிருத்தம்

கனமுடைய ருக்மாங்க ராசன் முனிஉரையால் கவலைநீங்கி - குணமுடைய மந்திரியும் நின் தளங்கள் சேர்ந்து - மந்தாகிரி மலையருகில் - அந்தமலை முடியின் மேலே உற்றதொரு சங்கீத சுரங்கள் கேட்க - குணமுடனே அனைவரும் போய் - போமென்று தேறினான் மந்திரியுடன் தேறினானே.

### மந்திரி விருத்தம்

எந்தனைக் கண்டுகொண்டு ரவி குலத்தார் - மந்தர கிரியின் மேலே மானிடர் ஏறப்போமோ - தொந்தமாய் கந்தர்வரும் செய்திடும் வீணை தானம் சுந்தமாய் மானிடருலகரசனே வேண்டாமய்யா -

### ராசாவிருத்தம்

பூவுலகெல்லாம் மெத்தப் புகழ்ந்த மந்திரி - தேவர்கள் வாசம் செய்யும் - நிறைந்திடும் - அவ்வானவர் கானம்அறிந்து [1]பாவனமாகத் தானே பார்த்து நான் வருவேனே.

### தரு

ராகம் : தோடி — தாளம் : ஆதி

மந்தர கிரிதனில் மன்னனேறினான்
தந்திரமுடனே - கூறினானே
நாடாளும் ருக்மாங்கதன் நடந்ததில்லை
காடான பருவத்திலே கண்டு தான் -
தலையேன் - மந்தார கிரிதன் மேலே தேவர்
முனிவர் மலர் மாரி தூற்றவே !
மகிழ்ந்து மலையிலுள்ளோர் வந்து போற்றவே

.....................................

1. பாவனமாக - பொறுமையாக

காவலன் மலையின் - ஓசையை ஆவலாய்
மனதில் கொண்டு அறிந்தான் [1]வாலை -
வைஷ்ணவர்கள் புகழ்ந்தார்கள் - கூடியே -
செல்லக் கண்டு மன்னன் மிகவும் நாடியே
சன்னுத உல்லாசமாக [2]சரசம் தேடியே
சந்ததமும் தோடி ராகம் தன்னைப் பாடியே

விருத்தம்

மன்னவன் ருக்மாங்கராசன் மந்தர கிரியிலேறி
உன்னிதமாயிருக்கும் உயர்ந்த மோகினியைக் கண்டு
கன்னியின் மனத்தில் மெத்த தளர்ச்சியாய் மிக உண்டாகி
கன்னிமேல் [3]மோகத்தாலே கல்லெனெ [4]விரகம் கொண்டான்.

தரு

இராகம் : யமுனா கல்யாணி தாளம் : சாப்பு

வாய்திறந்து ஒரு வார்த்தை சொல்லடி மானே [5]மையலானேன்
தாய் நீ தரணியில் பிறந்தவளில்லை யோ என்ன சொல்வோம்
வாய் ...கொங்கை இரண்டும்...யிருக்கிற குறி
அறிந்தேன் மனம் தெரிந்தேன்
மங்கையே கூவி குயிலிசை பாடிய நாதத்தை
கொடுத்தாய் இன்பம் கொடுத்தாய்
சிங்காரமாக இருவரும் கூடியே
சேர்ந்த லீலையாய் தன் கொலு நாடியே
பங்கய மானவர் முகம் கூடியே
பாவையே உன் விழி தேடியே
சிந்தையிலே உன் [6]கும்பங்களைக் கண்டு
தேறுமோ மனம் ஆறுமோ யிந்த

.....................................................

1. வாலை - குமரிப்பெண் 2. சரசம் - உல்லாசம்
3. மோகம் - ஆசை 4. விரகம் - காதல் சுரம் 5. மையல் - ஆசை
6. கும்பம் - கொங்கை

தேசத்தில் உன்னைப் புகழ்ந்தவர்...
வேதன் வகுத்திட்டாரே!..
அமைந்ததோ யோகம் - கந்தமலர் வாளி
காணுதென் போகம் காட்டில் **யமுனா கல்யாணி**
ராகம் கோடி - சாம்பலாய்ச்சு மதன கோடி
வடிவாக வந்த மயிலே! ராணி யோ!
மாயமதாய் மகன் எடுத்த சீதையோ!
கருவில்லா மேனியோ! [1]**கமலனார் வாணியோ!**
கட்டி மாம்பழத்தோடு கலந்த மாதோ!
திருவருள் கொண்ட தேதோ! [2]திரியம்பகன் தேவியோ!
தேசமெல்லாம் மயங்கச் செய்த உருவோ!
அபூர்வமாகவே அமைந்த கருவோ!
அண்டர் மாமுனிவரை அடுத்த பிரிவோ!
விதியினால் இந்தமலை மதித்திட வோ!
மேவியே இருந்த வகை உரைசெய்வாயே!

தரு

ராகம் : பந்துவராளி

இங்கே வந்த வகை உனக் கின்ன மொன்று
உனக்கெந்த ... கண்ணே - சங்கடமில்லாமல்
(இங்கே)
...உன்னைக் கண்டு நான்
மன்னனும் மையலாக
(இங்கே...)
தடையில்லாமல் இந்த மலையில் வந்த தோகையே
பரிந்துந்தன் பாசவலையில் சிக்க
பிரம்மன் எழுத்தோ எந்தன் தலையில் அடியோ!

....................................

1. கமலனார் வாணி - பிரமதேவனின் மனைவியாகிய கலைவாணி (சரசுவதி)
2. திரியம்பகன் தேவி - சிவனாரின் மனைவி பார்வதி

தெரிந்த மன்னன் உடையும் துடையும் பின்னே
மின்னலிடையும் அன்ன நடையுமாய்

(இங்கே...)

விதிசையாளும் ருக்மாங்கராசன் பின்னும்
...தன்னில் நேசன் - மதனன் அரிதாசன்
ராக பந்துவராளியின் விசுவாசன்
சதி செய்யாமலெந்தனை சேருவாய் சொன்னேன்
நிதியும் கெதியும் புத்திமதியு மெனது...

(இங்கே)

## விருத்தம்

ஒத்த மேல் விழியாள் கொண்ட மோகினி மேல்
ருக்மாங்க ராசன் மோகமாகி சொன்ன மொழி
தவறமலிந்த - பூபாலன் - சேர்ந்து வர்ணமுள்ள
வசந்தன்[1] கணையாலே
மெத்தமனது மயங்கி மந்தரகிரியின் மலையின் மேலே
ராசன் தயங்கினான் [2]மூர்ச்சை கொண்டு மயங்கினானே!

## மோகினி விருத்தம்

மோகமதான மன்னன் மூர்ச்சையை
மோகமென்னும் தாகமதாலே
சோர்ந்தான் - சத்துவமே சரியென்றெண்ணி
சோரங்கள் தீர்க்கவேண்டி
நாகரீகத்தால் நயமுடன் சொல்லுவாளே!

.............................................

1. வசந்தன் - மன்மதன் 2. மூர்ச்சை - மயக்கம்

## தரு

இராகம் : புன்னாக வராளி                                    தாளம் : ஆதி

நேசனோ! மா ராசனோ! காலனோ!
அனு கூலனோ! பரிபாலனோ!
மதனலோலனோ! எத்தனோ - சுமந்தனோ!
பரிசுத்தனோ! அரிபக்தனோ!
ஆளுமோ! கவலை தீருமோ!
நிறைவேறுமோ! மனம் சோருமோ!
முல்லையோ! கனக வல்லியோ!
தொல்லையோ! எதிரில்லையோ!
சட்டமோ! மதன கொட்ட மோ! என்ன
அதிர்ஷ்ட்டமோ! யிது கஷ்ட்டமோ!
முன்னமே சொன்னமே யீதென்ன அன்னமே!
தேடியே மலையை நாடியே புன்னாக வராளி பாடியே!

## விருத்தம்

மன்னவன் போலொருவனிந்த மலைமீதி லேறிவர
வழியும் கண்டான்
கடுகியதோர் [1]தடாகம் வெட்டுமுன்னே கரை
கரைந்த கதை போலாச்சு
அடியெடுத்து மோகினியாள் கூடி அயறுரைத்த
அருள்படியே அமைந்தது வே
...மன்னவனை எடுத்த ணைத்து போற்றுவாள்
ராசனெனப் போற்றுவாளே!

........................................

1. தடாகம் - குளம்

## தரு

ராகம் : வராளி தாளம் : ரூபகம்

இந்த மந்திராசல விந்தையைப் பார்க்க நீர்
வந்ததேன் அறியேன்
அந்தமாகிய சிந்தை சேர் மதனன்
யிந்த வரையில் விழுந்து
(இந்த...)

அறியேன் இந்த வேளையில் எந்தன்
ஆசையுமுன் தொந்தமாம்
இசைந்த தோ தெரியேன்
(இந்த...)

கெந்த[1] வாடை மிகுந்த மேனி தளர்ந்து
நோகச் சிறந்ததோ அறியேன்
வாட்டமதாலே கிட்டி மன்னர் கைக்கெட்டி
மாமுடி தொட்டதே மகிமை
சிஷரானவர் மட்டில்லாதுன்னைத்
தொட்டிடாமலே விட்டதே புதுமை
வாளி பூண்ட வில்லாளியானவர் தானும் நோக
இந்நாளிலே குறித்தேன் - ஆதி சூழந்த வராளி
ராகத்தைச் செம்மை போலவே உரைத்தேன்

## விருத்தம்

மகிமையாய் வளர்ந்தெழு கிரியின் மேலே
தகைமையாய் தாகத்தாலே தவிப்புடன் தளர்ந்தான் மன்னன்
கையெல்லாம் துடைத்து ராசன் மேனியில்...
உகமையோ முன்னாளுந்தன் [2]ஊழியின் பயனோ வென்றாள்

..............................................

1. கெந்த - கந்தம் - நறுமணம் 2. ஊழி - விதி

தரு

ஆ ! ஆ ! ஆ ! யிதென்ன மாயமோ
நானறியேன் ஆ! ஆ! ஆ!
யீதென்ன மாய மோ
ஆயீதென்ன மாயம் அறியேன் உபாயம்
வாய் திறவாமல் மகிழ்ந்து இருப்பாள்
ஆ ! ஆ ! ஆ யீதென்ன மாயமோ !
நானறியேன்.

**விருத்தம்**

செண்பகமரம் மலர்வாடை பன்னீராலே தீர்க்க
தேகமெல்லாம் சிறக்கப் பூசி
இன்பமுடன் [1]மதுரமொழி உரைத்த ராசன் உற்ற
செவிதன்னில் கேட்டு உலகந்தன்னில்
துன்பமுறும் மனுக்களெல்லாம் இரவு தன்னில்
துயில்நீங்கிக் கண் விழித்து சேர்ந்தார்ப்போலே
அம்பு கயல் விழி பூண்ட அரிவையே நீ
ஆரென்றான் என் கவலை தீரென்றானே !

தரு

இராகம் : சாவேரி தாளம் : திரிபுடை

இன்றைக்கு உந்தன்னைக் கண்டு - இருக்கும்
எந்தனைப் பார் கண்ணே !
பாங்கிச் சேரடி கண்ணே ! மன்னன்
ருக்மாங்கதன் வந்து நிற்கிறேன் பாரும் ·

.................................

1. மதுரமொழி - இனிய வார்த்தை

மகிழ்ந்து குலுங்கும் கொங்கை
மார்பில் அணைத்துச் சேரு
(இன்றைக்கு)
மின்னிலிடையைக் கண்டு மெத்தவே மனதிலெண்ணி
மெல்லியே ஒன்றுரைத்தேன் மிகுந்த யோசனை பண்ணி
(இன்றைக்கு...)
மறவேனொருக்காலும் உந்தனை உண்ணி
காம விகாரம் தான் கவர்ந்தே செய் யோகந்தன்னில்
(இன்றைக்கு...)
மந்தரகிரி தன்னில் மன்னர் தேவன் வேட்டைக்கு
வரிசையாய் உணர மனதிலெண்ணி
என்னழகில் தந்திரமதாகவே தவிப்பாரே
தாடகி தனதாய் சேர்ந்து
போவோம் நாம் கனத்துடனே! கோட்டைக்கு
(இன்றைக்கு..)
மனது மயக்கம் கொண்டு வந்தேனுந்தனைத் தேடி
மகிழ்ந்து எந்தனை வரிசையாகவே நாடி
உனது கவலை தீர்ப்பேன் [1]உகந்து என்னுடன் கூடி
உத்தம மாகுமந்த உயர் சாவேரி பாடி
(இன்றைக்கு...)

விருத்தம்

மந்தர கிரிதனில் வாழும் மங்கையே நீ
மாறிடாதான இந்த மலைமேலே
வந்தவகை எந்தனுக்கு மறைத்திடாமல்
வைற்றமர்ந்தோர் வரிசையினால் மகிழ்ச்சியாக
சொந்தமாய் நீ உரைத்தமொழி செவியில் கொண்டேன்
தேகமதில் மூர்ச்சைதான் தெளியவைத்தாய்
அந்தமுள்ள பஞ்சபாணன் போலே அலைந்துவந்தேன்
என்னை அணைத்துக் கலந்திடாயே!

..............................

1. உகந்து - உவந்து - விரும்பி

தரு

ராகம் : காம்போதி தாளம் : ஆதி

என்ன நான் செய்குவேனடி பெண்ணே! அடிகண்ணே!
என்னநான் செய்குவேனடி பெண்ணே!
மன்னன் ருக்மாங்கன் உன்னால்
மயங்குகிறேன் மெத்தத் தயங்குகிறேன்
காமன் கணைகள் சகிக்கக் கூடாதே கண்ணே!
தெரியாதோ மாமன் மகளைப் போலெந்தனையும்
எந்தனருகில் வாராய் யேகியே!
மந்தர கிரி தன்னில் உன்னை நாடி
மகிழ்ந்து கொண்டாடி
மகிமையோ மனதிலே என்ன மோடி
நேயமாய் என்னுடன் கூடி
தனதாய் காம்போதி ராகத்தைப் பாடி

## மோகினி விருத்தம்

ஏது காண் ராச கோவே வந்ததேனோ நானறிவேனிப்போ
சுறுக்குடனே வந்து தீதுரை சொன்னீரய்யா
திடுக்கென மனமும் நோக வாதுநீ செய்தீரானால்
வானவர் நகைத்திடாரோ!

தரு

ராகம் : காம்போதி தாளம் : ரூபகம்

மெத்தவே வந்தென்னை இணங்கியே சொல்லென்று
ஏய்க்க வந்தீரோ!
நகைத்து வித்தை என்னிடம் காட்டுறீர் அல்லாமல் இனி
மனதை அறிந்து கடக்க போய் நில்லாமல் அய்யா

பஞ்ச பாணன் உன்னை பங்கம் செய்வது கண்டு
கெஞ்சியாகிலும் தேற்றுவேனிப்போ இவளை என்று
வஞ்சனையாலென்னை மணம்செய்ய வகை கொண்டு
நெஞ்சம் துணிந்து நீரும் நேசமாகு மென்று
(மெத்தவே...)

அன்னிதம் செய்யலாமோ அரிவையள் அறியாமல்
அலை வாய் துரும்பு போலே அலையுறீர் புரியாமல்
சொன்ன மொழி தன்னை சொல்கிறீர் தெரியாமல்
சித்தப்பிரமை[1] கொண்டாற்போலே திரியுரீர் குறியாமலே
(மெத்தவே...)

மன்னர் ருக்மாங்கத ராசரே சொல்லும்
மகிழ்ந்து என்னிடம் வந்த
வகையை நீர் சொல்லி நில்லும்
[2]வண்ணம் படிக்குறீரே வகையாக நில்லும்
துள்ளும் மனது கவலை சொல்வேன்
அள்ளும் மொழியாலே வெல்லும்
(மெத்தவே...)

மந்தர கிரி தன்னில் மகிழ்ந்து வந்தீரே
தெரியாமல் மயங்குறீர் மனம் வாடியே !
எந்த விதமாகவும் நீரும் ஏங்கி
எந்தனை நாடி இச்சையு டனிருக்க
இசைந்தாய் போற்றி பக்ஷம் ஏற்றி
(மெத்தவே...)

### விருத்தம்

சட்டமாய் மலையின் மேலே தடத்தை நீ அறிந்து எந்தன்
கிட்டவே ஓடி வந்து கிரியையுடன் என்னைச் சேர
மட்டிலா மனமே கொண்டு வரும் விதி அறிந்திடாமல்
நெட்டுமன் உரைத்தீரன்றோ நிலந்தன்னில் நடந்திட்டீரே !

..........................................

1. சித்தப்பிரமை - பைத்தியம் 2. வண்ணம் படித்தல் - புகழ்ந்துபேசுதல்

தரு

ராகம் : பைரவி தாளம் : திரிபுடை

மன்னவரே என்னை நீர்
மருவ வரவே சொன்னதேது ! எந்தன்
மனதறியாமல் நீரும் வார்த்தை
சொன்னதே வெகு சூது இது தீது !
வண்ணம் படிக்குறீரே மலையில்
வந்தென்னுடனே வந்து - இப்போ
வருவதை யறியாமல் நீர் மயக்கம் கொண்டால்
நடவாது அன்னிதமாக என்னை
அதிக வார்த்தைகள் செல்லாதே !
எந்தன் அகம் உணர்ந்திட்டாலிப்போ அறிவாய் !
என் கோபம் பொல்லாது காதல் கொண்டு
எந்தன்மேல் காதலாகி வந்துநீ நில்லாதே !
இப்போ கன்னி எந்தன் மனதில்
கலக்கம் கொண்டால் காரியம் நில்லாதே !
வெம்பையுடனாடி வெகுதளத்துடனிங்கு வந்த மோடி
பின்னும் வேடிக்கை பார்க்க வேண்டி பிர்மா வந்தாரோ !
இங்கே ஓடி நீரும் ஓடி பாட்டை தெரியாமலே பதறி
வந்தீரே !
என்னைத்தேடி உம்மைப் பழிப்பாளிவளென்றெண்ணி
பைரவி ராகத்தைப் பாடி ! நீராடிப் பாடி ..

விருத்தம்

நடந்திடாய் என்றுரைத்த நங்கையே - மலையின்
மத்தியில் தடந்தன்னை அறிந்து வந்தேன்
சதிரான உன்னைச் சேர இடந்தன்னி லென்னை

........................................

1. பாட்டை - பாதை - வழி

நீயும் [1]ஏகாந்தம் பேசி யப்பால்
தங்கக் குடந்தனை[2] அணைந்து எந்தன்
குறைகளை தீருவேனே.

தரு

*ராகம் : அடாணா* *தாளம் : ஆதி*

என்னமோடி செய்குறாயடி பெண்ணே! அய்யோ பெண்ணே
இணங்கி நீ என்னைச் சேரடி
*மின்னலிடை* தன்னைக் கண்டு மேலிடவே
மனங்கொண்டு என்னுடைய மனது வண்டு
தயங்கியே என்னைக் கண்டு
(என்ன மோடி ..)
ஆயிரம் ரவிகள் கூடியே அங்கம் தனிலுள்ள
அமுத[2] கலசத்தை நாடியே
உயர்ந்த மலையின் மீது உகந்து வந்தேனிப் போது
மையலானேன் என்னசூது மங்கையே என்ன வாது
(என்னமோடி....)
தஞ்சமாக எண்ணி வந்தேனே தையலே உந்தன் சங்கீதம்
மன்னன் மீதிலே (என்னமோடி....)
அஷ்ட்திக்கும் கூட்டி ஆண்டேனே
அரசனென்னும் அமரர்க்குத் தொண்டனானே
பட்டமரம் போலா னேனே
பாவையே உன் மேனி தானே
**அடாணா** ராகத்தைத் தந்தேனே
இசையாப் பாடி வந்தேனே
(என்னமோடி..)

.........................................

1. ஏகாந்தம் - தனிமை 2, 3. தங்கக்குடம் என்றது அதுபோன்ற கொங்கைகளை - அமுத கலசம் என்பதும் இதுவே

## விருத்தம்

தேவர்களும் மதிமயங்கித் திரிவார்கள் உந்தன்
சேல்விழியைக்[1] கண்டு மயன் சிந்தை சோரும்
.........தேவர்களோ பூரித்தே
ஆவலுடன் எனது என்று கொள்ள வந்த
அந்தநேரம் இம்மலையில் சேவை கொண்ட
கொவ்வைக் கனியிதழைக் கனிந்து சேர்ந்திடாய்
எந்தனுடன் வாழ்ந்திடாயே !

## தரு

இராகம் : தன்யாசி தாளம் : ஆதி

தொண்டனடி போ மயிலே - உன்னைக்
கண்டேனடி குயிலே
கண்ட அண்டர்களும்.....இதற்கு
பண்டுமுதலாய் யானும் பணிவிடை செய்து வந்ததால்
ஆதியில் முனிவர் கட்கு - அழித்த அரக்கர் தனை
சோதி சீதாாமனுக்கு துணித்த துரந்தரருக்கு
செங்கண் இரணியனுடைய சுதனுக் காகவே
சிங்க ரூப மாகியிந்த
செகத்தினில் உதித்தவர்க்கு செப்பியபடியே யிந்த
சிறந்த மலைதன் னை
தப்பிதமில்லாமல் கூட தயவாய் தன்னியாசி பாட
(தொண்டு.....)

.........................................

1. சேல்விழி - சேல்கொண்டை என்ற ஒருவகை மீனைப்
போன்ற விழி

## மோகினி விருத்தம்

மகத்துவமாம் மெத்த மலைப் பிருக்கும்
மந்தாரகிரி மலை தேடி
வகுத்ததொரு வானவர்கள் ஆசையா லே
அரிவிரதம்... சென்றார்
இகத்தினிலே தீருமோதான் உந்தன்
மொழிக் கிசைந்தால் இன்பமுடன்
ஆதி மொழி இசைந்து செய்வாய்

## விருத்தம்

உறுதியுள்ள மோகினியாள் பேச்சை
பருகியே மனமே கொண்டு
பிரமனார் தானுமப்போ
வருகவே வேணுமிந்த மந்தார மலையில்
கருதியே ஈசர் தம்மை கருத்தினில் நினைத்தாரப்போ

## விருத்தம்

சங்கரன் சபையில் நின்ற....
..வேண்டி பிராமணர்
நினைத்தாரென்று திங்களு மணிந்த
ஆசன் திருமூர்த்தி உருவாய்
.............களத்தினில் வருகின்றாரே !
கரத்தினில் சூலம் கொண்டு
கபாலமோர் கையிலேந்தி
பரத்தினில் வாழும் தேவாதி தேவப்
பரிசனங்களும் சூழ

துரைத்தனம் செய்யும் ராசர்
தணிவகை அறியவேண்டி
விரித்த செஞ்சடையோ டீசன்
விறுமா...கொண்டாரே

தரு

இராகம் : நாதநாமக்கிரியை    தாளம் : ஆதி

கனக சபேசரும் வந்தார்
மலையைக் கண்ட உடனே கிரி...
.......சூழ்ந்தார்கள்
அத்தி முதல்வனும் கூட அருகினில் அயன்
மாலும் தத்தன தன தாளம்
அறிந்துகந்துமே பாட
சித்த வித்யா தரர் தும்புரு நாரதர்
கீதங்கள் பாடி யாட
இந்திரன் நாரி கடுகவே நொடிக்கக் கோடி
மோளங்கள் அடிக்கக் கண்டு
கருத்தாய் மலையில்.....வதில்லை
அந்தப்படிக்கு அறிந்துரைத்த சொல்லை
..........அகத்தில் கொண்டு
அகிலங்கள் ஏசவே மடந்தையை
தானாகவே விருமன் கூடியவர்நிலை தப்புவதில்லை
அந்தப் பரமன் விரதத்தில் பங்கம் பாய்ந்ததுமில்லை
விருஷப[1] வாகனத்தில் மேல் வெகு
விந்தையதாக விருதுடன் கூடி
பருவதான மன்றில் தேடிப்பின்னும்
பத்து நாத நாமக் கிரியை பாடி
கனக அய்யனும் மலையில் வந்து
அறிந்து தக்ஷணமே [2]கன்னன்
வெய்யவன் குலத்துதித்த வேந்தன்
........................................

1. விருஷப - ரிஷப - காளை 2. கன்னன் - கர்ணன்

விருப்பமாக கையதைப் பிடித்துக் கொண்டு
கருத்துடன் [1]பிரமாணம் வாங்க
மையலாசிய மன்னவா நீர் வாரும்
........செல் வோம்.

விருத்தம்

நல்லதோர் ராசர் தம்மை
கருத்துடன் வணங்கி நின்று
இருபேருமாக நேசமாய்
அண்டர்களுக்கெல்லாம் அபயங்களளிக்கும் நீல
கண்டரைக் கருத்திலெண்ணி கனதுதி செய்குவாரே!

தரு

ராகம் : புன்னாக வராளி தாளம் : ஆதி

ஈசர் கைலாசர் என்னை ரக்ஷிக்க வேணும்
பரமேசர் பாசாங்குசந்தன்னை மங்கை பாவத்தை
துரந்தரா சலவாசா வன்னிமரத்தில்
நேசமாகு மீசர்
சூலம் தரித்தோனே நகைத்துப் புரத்தை எரித்து
அறனே உன் பாதங்களை...
காலனை சங்கரித்தாயே...
பொங்குமதியை சடையில் தரித்தோனே
கர்த்தனே உன்[2]பிரபாவம் கண்டயில் குறித்தேனே
நிசமாகச் சொல்லுகிறேன்
சொன்னமொழி தவறேனே!
தோகைமோகினியாள் கையில் உழன்று
.....................................
1. பிரமாணம் - சத்தியம் 2. பிரபாவம் - பெருமை

புன்னாக வராளி ராகம் பாடியே
ஈசன் மனம் போல் கூடியே.

...

இத்துடன் சுவடியின் ஏடுகள் படிக்க இயலாதபடி சிதைந்து சிதிலமாகியுள்ளது. மேலும் உள்ள நான்கு ஏடுகள் ஏதும் படிக்க இயலாத நிலையில் உள்ளன.



## 25 ஏகாதசிகளின் பெயர்கள்

| | மாதம் | கிருஷ்ணபக்ஷம் | சுக்கிலபக்ஷம் |
|---|---|---|---|
| 1. | மார்கழி | உற்பத்தி | மோக்ஷா |
| 2. | தை | பைலா | புத்ரதா |
| 3. | மாசி | ஷட்திலா | ஜயா |
| 4. | பங்குனி | விஜயா | ஆமலகி |
| 5. | சித்திரை | பாபமோசநிகா | காமதா |
| 6. | வைாகசி | வரூதினி | மோஹினி |
| 7. | ஆனி | அபரா | நிர்ஜலா |
| 8. | ஆடி | யோகினி | சயினி |
| 9. | ஆவணி | காமிகா | புத்ரதா |
| 10. | புரட்டாசி | அஜா | பத்மநாபா |
| 11. | ஐப்பசி | இந்திரா | பாபாங்குசா |
| 12. | கார்த்திகை | ரமா | ப்ரபோதினி |

கூடுதல் ஏகாதசிக்கு **'கமலா'** என்பது பெயர். பொதுவாக துளசிச் செடியின் பெருமை மிகவும் சிறப்பாகக் கூறப்பெறுகிறது.

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை, பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

மாவட்ட ஆட்சித்தலைவர்
மற்றும்
**இயக்குநர்,**
சரசுவதி மகால் நூலகம்,
தஞ்சாவூர் - 613 009.

## சிறப்புச் சொற்றொடர்கள்

1. சாகரத்தில் விட்ட துளியது போல் - (3)
2. எட்டோடெட்டு வித்தை கற்றோர் - (4)
3. ஆறில் ஒரு கடமை அடவுடன் வாங்கி - (11)
4. வெந்தணலொத்த விரும்பிய பசியால் - (12)
5. வித்து முளைத்து விளங்கிய வனம் - (14)
6. காந்தருவமாகக் கலியாணம் பண்ணி - (18)
7. ராச ராசனெனும் ராசப்பிரதாப ராச துரந்தர - (29)
8. காலினில் மெட்டி 'கலீர் கலீர்' என - (36)
9. குட்டி குலைத்து நாய் தலையின் மேல் கொண்டேயே! - (37)
10. வாய் மதம் பேசி வந்த மங்கை - (37)
11. வாடி வாடி என்று வகையொன்றும் கேளாமல் - (38)
12. எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் நிறைந்திருந்து - (40)
13. தெரிந்தே செய்தாளடி தேன் மொழியே கேள் - (44)
14. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும் - (44)
15. சலாம் போட்டு வீசையை முறுக்கி விட்டு - (50)
16. பதினெண்மேளம் கதித்திட - (54)
17. கொம்பு தம்பட்டத்தைக் கூறடா அந்த கோடித்தெருவினில் பாரடா - (55)
18. புனலாட சென்ற பேர்க்கு கங்கையது எதிர்வந்தார்ப் போல - (60)
19. பருவமுள்ள மொழியாரைப் பழித்தேனோ - (74)
20. படையில் நின்றுப் பின்வாங்கிப் பதுங்கினேனோ - (74)
21. குருமொழியை மிஞ்சி மிகக் கொலை செய்தேனோ - (74)
22. வெண்ணெய் தன்னில் வெண்பாலும் முளைத்தாற் போல - (77)

23. ஓதிவந்தது உணராமல் உரைபோல் ஆனேன் - (83)
24. வரவு கொள்ள விலையே கேட்க விலை
வேறு வகை போலாச்சு - (85)
25. காமன் எரிந்த கதை தான் அறியாயோ - (90)
26. சாலோக சாருப்பியத்தில் சந்ததமும்
சாயுச்சியம் தனிலே சேர - (91)
27. கோலிழந்த குருடன் போல - கொப்பரையில்
விழுந்த புழுப்போல - (91)
28. மடுவில் வீழ்ந்த மதகரிக்கு கண்ணன் வந்துதவி .
செய்த கருமம் போல - (93)
29. ஓடும் பசுவைக் கண்டு ஒளிக்கும்
வேங்கையைப் போல - (99)
30. மறலி என்ற மகிமை எல்லாம் வகையில்லா
பழங்கதை வகை போலாச்சு - (100)
31. நூதன பாண்டத்துள்ளே நுழைந்திட்ட ஈபோல - (100)
32. சந்திர பிம்பம் போல ... மோகினி வந்தாளே ! - (101)
33. புறக்க மதனை ஒத்த மார்பு - ஆற்றின் சுழி
கொண்ட தொப்புள் - (101)
34. மின்னலிடை போலிடை மேனிதுவள
விண்ணிலுள்ளோர்கள் உடை பொற்பாதத்தில்
துவள - (102)
35. கன்னி சாதியில் கள்ளியாக - (102)
36. வாலைப் பருவம் கண்டால் அலங்கோல
மாகிப் பின்னும் அடியில் வீழ - (104)
37. கொங்கை ரெண்டையும் கண்டால்
கூடுமட்டும் மயங்குவார் - (104)
38. தண்ணீர் காணுமுன்னே தாம்பால் மொள்ளாதே - (105)
39. விண்ணினில் இந்துவும் வெந்தணலாய் சுடும்,
தேனும் கசந்திடுதே - கும்பதனங்கள் இரண்டும்
பித்த மளிக்க - (107)
40. படைக் களத்தில் வந்து ஒப்பாரி பேச வந்தாய் - (108)
41. அதிர்வெடி வாங்கி ஆகாச பாணத்தால்
எக்ஷகாரங்கள் செய்து - (115)

42. வெங்கதிர் நிகர்த் தோளை விரித்து -
பஞ்சாட்சரமோதி பக்கலுரை பார்த்து - (116)
43. உன் கும்பங்களைக் கண்டு தேறுமோ மனம் ஆறுமோ -
வடிவாக வந்த மயிலே !
கருவில்லா மேனியோ! கமலனார் வாணியோ !
கட்டி மாம்பழத்தோடு கலந்த மாதோ ! - (120)
44. மின்னிலிடையும் அன்ன நடையுமாய் - (121)
45. சட்டமோ ! மதன கொட்டமோ ! என்ன
அதிர்ஷ்ட்டமோ ! யிது கஷ்ட்டமோ - (122)
46. தடாகம் வெட்டு முன்னே கரை கரைந்த
கதை போலாச்சு - (122)
47. மகிழ்ந்து குலுங்கும் கொங்கை
மார்பில் அனைத்துச் சேரு - (125)
48. காமன் கணைகள் சகிக்கக் கூடாதே கண்ணே !
மாமன் மகளைப் போலெந்தனையும்
எந்த னருகில் வாதாய் - (126)
49. அலை வாய் துரும்பு போலே அலையுறீர் புரியாமலே !
சித்தப் பிரமை கொண்டாற்போலே திரியுறீர்
குறியிலாமலே - (127)
50. வண்ணம் படிக்குறீரே வகையாக நில்லும் - (127)
51. தங்கக் குடந்தனை அணைந்து
எந்தன் குறைகளைத் தீருவேனே!
ஆயிரம் ரவிகள் கூடியே...
அமுத கலசத்தை நாடியே...
பட்டமரம் போலானேன் பாவையே... - (129)

...

**திருமாலைக் குறிப்பிடும் சிறப்புச் சொற்றொடர்கள் :**

1. கந்தமலர்க் கரமதினால் கத்தி ஓங்கும் கைபிடித்த கார்மேகன் :
2. அலை கடலில் பள்ளி கொண்ட அண்ணல் -(2)
3. கடல் தனிற் கண் வளர்ந்த கார்மேக வண்ண மூர்த்தி - (3)
4. குடல்தனிற் குவலயங்கள் கொண்டவர் - (3)
5. அண்ட சராசரமெல்லாம் உண்டு வட்டமிடும் தரணி தன்னில் மறைந்து வாழும் மாயவனார் - (3)
6. அசையாத பரப்பிர்மம் - (6)
7. அட்சரக் கருப் பொருள் - (6)
8. பண்ணவர் - பாம்பின் மேல் பள்ளி கொண்டவர் - (9)
9. மாயவன் -(12)
10. மாதவன் -(12)
11. கருணா கடாக்ஷன் -(23)
12. காயாம்பூ மேனியன் -(23)
13. திருமால் -(23)
14. லெட்சுமி நாரணன் -(24)
15. மாயன் -(25)
16. ஆதிமூலம் -(39)
17. காலிங்க தாண்டவர் - -(39)
18. பாண்டவர்க்கும், பத்தினிப் பாஞ்சாலிக்கும் பரிந்து ரக்ஷித்த பரந்தாமர் -(40)
19. ஆயிரம் நாமன்
20. மாயனரி - -(57)
21. ராமாகோவிந்தா -(58)
22. நீலா அழகா -(58)
23. பரப்பிர்ம ரூபங் கொண்டவர் -(58)
24. ஆதிமுதலளந்த மாயன் -(84)
25. நாராயணா -(65)
26. ஆகாச முதலளந்த மாயன் -(84)
27. ஈராறு நாமன் (2 6 8 அட்சரங்கள் )

...

## தரு
## அகரவரிசைப் பட்டியல்

...

# சொல்லடைவு

ருக் - 21

## பயன் பெற்ற நூல்கள்


1. **Tanjore as a Seat of Music**
   by Dr. S. Seetha, University of Madras.
2. **The Nayaks of Tanjore**
   by V. Vridagrisvaran, M.A.M.Litt.,
   Journal of the Annamalai University. Vol.X - No.2
   December, 1940. P.202
3. **Roopa Lekha**
   Sri. Naryana Theertha - Dr. V. Raghavan,
   R.L.Vol.XXVI Mo.2 1955 - P.P.68.
4. *நமது தமிழ் நாடு - 4.*
   *தஞ்சை மவாட்டம் - சோமலே*
   *பாரி நிலையம் - சென்னை : 1961*
5. *பாகவத தர்மம்*
   *மலர் - 1: இதழ் 3, 1965*
   *நித்யோத்ஸவ பஜனை - தாஸ சரண ரேணு.*
6. **Padmapuranam - Chatterjee,**
   S.N. 2773 - Eng. No. 4264
   Sārasvatai Mahal Library, Thanjavur
7. **Birth of Bakthi in Indian Religions and Arts**
   by Susmita Pande. Books and Books Publishers,
   New Delhi - 1982.
8. *நாரத புராண விஷ்ணு புரா்ண சிறப்பு வெளியீடு -*
   *கீதா பிரஸ் - கோரக்பூர்.*
9. *ஸரஸ்வதி மகாலும் தஞ்சை வரலாறும்*
   O.A. *நாராயணசாமி அய்யர்*

*10.* *தஞ்சை மன்னரும் சரஸ்வதி நூலகமும்*
*- வ. வேணுகோபாலன்*

11. **Dravidian Interference in Sourastra Secondary verbs -**
By Norihiko Ucida - a noted Japanese Scholar - Assisted by Sri O.S. Subrahmaniyam.

12. **"Virah Bhakti"** - The early History of Krishna Devotion in South India - by Hardly Friendhelm Oxford University press - 1983.

13. *தஞ்சை மராட்டிய மன்னர்களும் தெலுங்கு இலக்கியமும் :*
*ந. விசுவநாதன், தஞ்சை மராட்டிய அரசர் மோடி ஆவணக் கருத்தரங்கு - தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்*

*14.* *நாட்டியக் கலை* - Dr. V. Raghavan,
*கலைமகள் வெளியீடு - சென்னை - 4: 1974*

*15.* **Ashtapadi Attapraharam -**
Dr. K. Raghavanpillai -
Kerala University - Publication No.114.
Malayalam - Tiruvandram - 1964.

16. **Swara Pallavi : Jakkini Daruvalu -**
by Y. Sathyanarayana Rao.
சில அபூர்வ ராகங்களும் - சில அபூர்வ கீர்த்தனங்களும்.
- திரு. அனந்த சுப்பிரமணியன் A Journal of the Sangeeth Natak Akadami, New Delhi - Vol.xxxvi - 1965.

17. **Some Less known Composers of Karnatic Music**
- By Dr. S. Seetha - University of Madras. Bulletin of the Indian Traditional Culture, Madras - July - Dec. 1969.

18. **The Mellättur Bhaghavatha Mela Dance Drama**
- By E. Krishnaiyar, B.A.B.L.,
B.I.T.C. Madras - Part II, 1959

19. **Yakshagana - By M.M. Bhat,**
Prof. of Kannada University of Madras.
20. **Kuchipudi Nataymulu**
by B. Rajani Kanta Rao
21. **Terukkuttu- Article**
Hindu Weekly Magazine, 22.7.1962.
22. **Drama in Rural India**
by J.C. Mathur - Asia Publishing House
- Bombay, 1964.
23. **Tamil Nadu - Classical Bhaghavatha Mela -**
Dance Drama
by E. Krishnaiyar, MARG Vol.xix - March, 1966.
24. *நாடகவியல் - சூரிய நாராயண சாஸ்திரி*
25. ***தமிழ் நாடக வரலாறு -***
*டாக்டர். திரு. சக்திப்பெருமாள்*
26. *பாட்டும் கூத்தும் - புத்தனேரி - ரா. சுப்பிரமணியன்.*
27. ***தமிழ்நாடு இயல் இசை நாடக மன்ற***
***வெள்ளி விழா மலர் - 1980***
28. **Opera in South India**
- By S.A.K: Durga - Madras - 1979.
*'கட்டுரை : தமிழகத்தின் தனிப் பெருங்கலை.*
29. **South Indian Music** - Book IV
Prof. P. Sambamoorthy, B.A.B.L.,
30. ***கலைக் களஞ்சியம் - எண்- 10.***
31. ***சிறுத்தொண்டர் - இசை நாடகம் -***
*சரஸ்வதி மகால் வெளியீடு - எண்.234*
32. ***அரவான் களப்பலி - இசை நாடகம்.***
*சரஸ்வதி மகால் வெளியீடு - எண்.251.*

## வைத்திய நூல்கள்

| | |
|---|---|
| அகத்தியர் 110 | 30 - 00 |
| அகத்தியர் 100 | 30 - 00 |
| அகத்தியர் 200 பாகம் III | 150 - 00 |
| அகத்தியர் அட்டவணை வாகடம் | 52 - 00 |
| அக்கால சித்தவைத்திய பலமுறைகள் | 20 - 00 |
| ஆயுர்வேத உபதேசங்கள் பாகம் I | 30 - 00 |
| ஆயுர்வேத உபதேசங்கள் பாகம் II | 15 - 00 |
| போகர் நிகண்டு அட்டவணை . | 18 - 00 |
| தன்வந்தரி ஏரண்டத் தைலம் | 20 - 00 |
| சித்தமருத்துவ ஆய்வுக்கோவை | 125 - 00 |
| எண்ணெய் வாகடம் | 40 - 00 |
| கர்ப்பிணி பாலரோக சிகிட்சை | 45 - 00 |
| குன்மரோக சிகிட்சை | 100 - 00 |
| ஜ்வரரோக சிகிட்சை | 50 - 00 |
| மச்சமுனி நாயனார் 800 | 21 - 00 |
| நயனரோக சிகிட்சை | 70 - 00 |
| பஞ்சகாவிய நிகண்டு | 150 - 00 |
| சௌமிய சாகரம் | 70 - 00 |
| குழந்தை பராமரிப்பு | 10 - 00 |
| பாண்டுகாமாலை சிகிட்சை | 40 - 00 |
| பேதி அதிசார சிகிட்சை | 60 - 00 |
| பலதிரட்டு வைத்தியம் | 50 - 00 |
| இராமதேவர் சூத்திரம் | 75 - 00 |
| க்ஷய, உளமாந்தை சிகிட்சை | 18 - 00 |
| அக்கால சித்தவைத்திய அனுபவமுறைகள் | 40 - 00 |
| சுவாசகாச சிகிட்சை | 25 - 00 |
| சூலை, குட்ட, மூல ரோக சிகிட்சை | 80 - 00 |
| சித்த மருத்துவச் சுடர் | 200 - 00 |
| தேரர் நீர்க்குறி சோதனை | 10 - 00 |
| வைத்திய ரத்னாவளி | 160 - 00 |
| வைத்தியத் திரட்டு | 40 - 00 |